# தில்லைக் கோவிந்தன்

ஆங்கில மூலம் :

அ. மாதவையா

மொழிபெயர்த்தவர் :

வே. நாராயணன், எம்.ஏ. எம்.எல்.,



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம், தரமணி,
சென்னை - 600 113.

# தில்லைக் கோவிந்தன்

ஆங்கில மூலம்

அ. மாதவையா

மொழிபெயர்த்தவர்:

வே. நாராயணன் எம்.ஏ., எம்.எல்.




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

டி.டி.டி.ஐ அஞ்சல், தரமணி,

சென்னை - 600 0113.

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | **THILLAI GOVINDAN** |
| Author (in English) | : | A. Madhavaiya |
| Translator | : | V. Narayanan M.A., M.L., |
| First Edition | : | 1944 |
| Re-edition | : | September 1998 |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>C.I.T. Campus<br>T.T.T.I. Post<br>Chennai - 600 113. |
| Publication No. | : | 296 |
| Language | : | Tamil |
| Paper used | : | TNPL 16 Kg Super Printing |
| Size of the book | : | Demy 1/8 |
| Number of pages | : | 128 Pages |
| Number of copies : | : | 1000 |
| Printing types | : | 11 Point |
| Prize | : | Rs.25/- |
| Binding | : | Paper Pack |
| Printed by | : | **Pavai Printers (P) Ltd.,**<br>142, J.J.Khan Road,<br>Royapettah,<br>Chennai - 600 014.<br>Phone : 8532441 |
| Subject | : | Novel |

தமிழ் வளர்ச்சி இயக்ககம் வழங்கும் சிறந்த மொழிபெயர்ப்பு நூல் வெளியிடும் திட்டத்தின் கீழ் நிதியுதவி பெற்று இந்நூல் வெளிவருகிறது.

முனைவர் ச.சு. இராமர் இளங்கோ
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113.

# அணிந்துரை

தமிழ் நாவல்களில் நடையாலும், கதை அமைப்பாலும், சொல்லும் திறத்தாலும் **அ. மாதவையா** அவர்கள் தனக்கென ஒரு நெறியை அமைத்துக்கொண்டவர். அவரின் தந்தையார் **அனந்தராமையர்;** தாயார் **முத்துலட்சுமி** அம்மையார். நெல்லை மாவட்டப் பெருங்குளத்தில் (இன்று தூத்துக்குடி மாவட்டம்) பிறந்த மாதவையா சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் இளங்கலைப் பட்டம் பெற்றபின் உப்புச் சுங்கத் துறையில் கண்காணிப்பாளராகப் பணிபுரிந்தார். 1923- இல் பணியில் இருந்து விலகினார். 1924 - இல் **'பஞ்சாமிர்தம்'** என்ற திங்கள் இதழை நடத்தினார்.

அவ்விதழைத் தொடங்கியதன் நோக்கம் குறித்து, 'நாடெங்கும் ஆங்கு ஆங்கு முளைத்தெழும் தேசிய உணர்ச்சிப் பயிருக்கு இப்பத்திரிகை மூலமாய் ஊக்க உரம் இட்டு, அறிவு நீர் பாய்ச்சி அவ்வுணர்ச்சியைத் தழைத்தோங்கச் செய்ய முயலுவது என் முக்கிய நோக்கம்' என எழுதியுள்ளார். மேலும் பத்திரிகைக்குப் 'பஞ்சாமிர்தம்' என்ற பெயரிட்ட காரணம் குறித்து, 'உண்மை, அன்பு, அறிவு, உழைப்பு எனும் ஐந்தையும் கலந்ததாகும் இப் பஞ்சாமிர்தம்' என்று புதிய விளக்கம் தந்திருப்பது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

**'கோணக்கோபாலன்'** என்ற புனைபெயரில் கதைகள், கட்டுரைகள், நாடகங்கள், இலக்கியத் திறனாய்வு, அரசியல் கட்டுரைகள் முதலியவற்றை அவ்விதழில் எழுதினார்.

மாதவையா அவர்கள் திருவள்ளுவர் மீதும் கம்பர் மீதும் அளவற்ற ஈடுபாடு கொண்டவர். எனவே அவருடைய படைப்புக்களில் வள்ளுவர் குறளோ, கம்பர் பாடலோ தவறாது இடம் பெற்றிருக்கும். அவருடைய சிறப்பு வாய்ந்த எழுத்துத் திறனும் படைப்பு ஆற்றலும் தமிழ்நாவல் உலகின் முன்னோடியாக அவரை நிலைநிறுத்தச் செய்தன. மேலும் பேராசிரியர் கைலாசபதி அவர்கள் அ. மாதவையா அவர்களைத் **'தமிழ் நாட்டின் தாக்கரே'** என்று மதிப்பீடு செய்திருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

ஒடுக்கப்பட்ட மக்கள் விழிப்புணர்ச்சி பெறவேண்டும் என்பதும், அடக்கப்பட்ட பெண்கள் உரிமை உணர்வு பெற வேண்டும் என்பதும் அவருடைய படைப்புகளில் வலியுறுத்தப்படும் கருதுகோள்களாகும்.

தமிழில் எழுதப்பெற்ற காலத்தால் முதன்மை பெற்றுள்ள ஐந்து புதினங்களுள் ஒன்று அவருடைய **'பத்மாவதி சரிதம்'**. இப்புதினம், பெண் கல்வியை வலியுறுத்தி எழுதப் பட்ட புதினமாகும். முதல் பகுதியில் திருநெல்வேலியின் சிறப்பு சித்திரிக்கப்படுகிறது. இரண்டாம் பகுதியில் சென்னை மாநகரத்தின் மக்கள் வாழ்க்கை முறை விரித் துரைக்கப்படுகிறது. மூன்றாம் பகுதியில் சமுதாய முன்னேற் றத்திற்குத் தடையாக இருக்கின்ற பிராமண சமூகத்தின் பிற்போக்குத் தன்மையும், சமய வேறுபாடுகள் காரணமாக மக்கள் ஒருவருக்கொருவர் மோதுகின்ற இழிந்த நிலையும் பழமைக்கும் புதுமைக்கும் நடக்கின்ற போராட்டமும் எடுத்துக் காட்டப்படுகின்றன.

பத்மாவதி சரித்திரத்தைப் பத்திரிகையில் தொடர்கதை யாக வெளியிட்டார். தமிழில் முதன் முதல் தொடர்கதை எழுதிய பெருமை மாதவையா அவர்களையே சாரும்.

**'விஜய மார்த்தாண்டம்'** எனும் நாவலில் விஜயமார்த் தாண்டனின் செயற்பாடுகள் விரித்து எழுதப்பட்டுள்ளன. ஜமீன் உரிமை, வழக்கு, திருமண உரிமை முதலியன காதல் பத்து, கற்புப்பத்து என்ற பகுதிகளில் பேசப்படுகின்றன. நன்றி மறவாத உயர் பண்பு, நண்பர்களை உயிரே போனாலும் காட்டிக்கொடுக்காத தன்மை, சொன்ன சொல்லைக் காப்பாற்றும் உறுதி முதலிய பண்புகள் வலியுறுத்தப்படுகின்றன.

**'முத்து மீனாட்சி'** என்னும் நாவலில் பார்ப்பனக் குலத்தில் பிறந்த முத்து மீனாட்சி திருமணம் நடைபெற்ற 13 வயதிலேயே விதவையான நிலைமையையும் விதவை முத்து மீனாட்சி சுந்தரேசனை மறுமணம் செய்ததன் காரணமாக அவ்விருவரும் அக்கிரகாரத்தை விட்டுத் தள்ளி வைக்கப்பட்ட கொடுமையையும் பின்னர் இருவரும் சூத்திரர் தெருவுக்குக் குடிபோகின்ற இரங்கத்தக்க போக்கையும் மாதவையா நன்கு எடுத்துக் கூறியுள்ளார். முத்து மீனாட்சியே தன்னுடைய கதையைக் கூறும் வகையில் இந்நாவலை மாதவையா அமைத்துள்ளார். ஆசிரியரே கதை கூறும் நிலையில் இருந்து மாறி, பாத்திரமே தன் கதையைக் கூறுகின்ற நிலையை மாதவையா இந்நாவலில் படைத்துள்ளார்.

மாதவையா நாவல்களையும், நாடகங்களையும் சிறு கதைகளையும், பாடல்களையும் இயற்றியுள்ளார். சேக்ஸ்பியர் எழுதிய **'ஒதெல்லோ'**வைத் தழுவி எழுதிய **'உதயலன்'** எனும் நாடகமும், **'பாரிஸ்டர் பஞ்சநாதன்'** எனும் நாடகமும், **'திருமலை சேதுபதி'** எனும் நாடகமும் அவர் எழுதிய நாடகங்களில் குறிப்பிடத்தக்கவை.

குறள் நானூறு, பாலராமாயணம் முதலிய நூல்கள் மாதவையா திருவள்ளுவர், கம்பன் ஆகியோர் மீது கொண்ட ஈடுபாட்டை உணர்த்துவன. புது மாதிரிக் கல்யாணப் பாடல், தேசிய கீதங்கள், பொது தர்ம சங்கீத மஞ்சரி முதலிய நூல்கள் மாதவையா இயற்றிய பாடல்களின் தொகுப்புக்களாகும். **'சித்தார்த்தன்'**, **'தக்ஷிண சரித்திர வீரன்'**, **'பால விநோதக் கதைகள்'** முதலியவை அவர் எழுதிய சிறந்த கதை நூல்களாகும்.

மாதவையா தமிழில் எழுதியதைப் போன்று ஆங்கிலத்தில் அழகுற எழுதுவதில் வல்லவர். அவர் எழுதிய ஆங்கில நாவல்கள் **'தில்லைக் கோவிந்தன்'**, **'கிளாரிண்டா'**, **'சத்தியானந்தா'** முதலியவை ஆகும்.

**'தில்லைக் கோவிந்தன்'** என்ற ஆங்கில நாவலை வே. நாராயணன் என்பவர் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். இந்நாவலை 1944 - ல் தினமணி இலக்கிய வட்டம் தனது ஏழாவது வெளியீடாகச் சென்னையில் வெளியிட்டுள்ளது.

தமிழ்ப் படைப்பிலக்கிய வளர்ச்சிக்குத் தினமணி ஆற்றிய பங்கு சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. மாதந்தோறும் ஒரு வெளியீடாக ஒரு நல்ல நூலைத் தினமணி வெளியிட்டதும், அதற்கு பி.ஸ்ரீ. பதிப்பாசிரியராக இருந்ததும் குறிப்பிடத் தக்கது.

முற்போக்குச் சிந்தனையாளரான மாதவையா அவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய **'தில்லைக் கோவிந்தன்'** என்ற நாவலின் தமிழாக்கம் இன்று கிடைக்கவில்லை. அந்நூலை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் மறுபதிப்புச் செய்வதில் மகிழ்ச்சி அடைகிறது. பெருங்குளம் அ. மாதவையா பி.ஏ. என்பதைப் பம்பா (PAMBA) எனப் புனை பெயராக மாதவையா வைத்துக்கொண்டார். தில்லைக் கோவிந்தனின் தன்வரலாற்றைப் பம்பா என்பவர் பதிப்பித்துள்ளதாக இப்புதினம் அமைந்துள்ளது. தில்லைக் கோவிந்தனின் வாழ்வில் பிறப்பு முதல் நடக்கும் கதை நிகழ்ச்சிகள் பத்தொன்பது அதிகாரங்களில் மாதவையாவால்

ஆங்கிலத்தில் எழுதப்பெற்றுள்ளன. 'எனது ராஜீயக் கொள்கைகளைக் குறிப்பது' எனும் பெயர் கொண்ட பதினாறாவது அதிகாரம் மட்டும் தமிழ் மொழிபெயர்ப்புச் செய்யப்படாமல் உள்ளது.

'தில்லைக் கோவிந்தன்' எனும் இந்நூலில், தீண்டாமை யின் கொடுமை, குழந்தை மணக் கொடுமை, ஐரோப்பிய வாழ்க்கை முறைக் கல்வியால் ஏற்படும் குழப்பம், பண்டு தொட்டே இருந்துவரும் தமிழ்க் குடும்பங்களில் பெண் களுக்கு ஏற்படும் அநீதிகள் போன்றவை நன்கு சித்திரிக்கப் படுகின்றன. தமிழறியாதார் தமிழ்ப் பண்பாட்டை அறிந்து கொள்ளுவதற்காக ஆங்கிலத்தில் மாதவையா இப்பு தினத்தை எழுதியதற்கேற்ப அன்றைய தமிழ்ச் சமுதாயம் நன்கு இப்புதினத்தில் சித்திரிக்கப் பட்டுள்ளது.

சாதி, மதம், மூடப் பழக்கங்கள் முதலியவற்றைத் தம் எழுத்தால் சுட்டு எரித்தவர் மாதவையா ஆவார். 1925 - ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 25 - ஆம் நாள் சென்னைப் பல்கலைக் கழகத்தில் **'தமிழ்'** என்ற தலைப்பில் பேசிக்கொண்டிருந்தபோது மாரடைப்பால் மரணமடைந்தார். மாதவையா அவர்கள் தமிழ் மொழியின் மேல் கொண்ட பற்றை அவருடைய சொற்பொழிவு வழியாக நாம் அறியலாம்.

நிறுவன வளர்ச்சியில் ஆக்கமும், ஊக்கமும் காட்டி வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி - பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத் துறை அமைச்சர் முனைவர் மு. **தமிழ்க்குடிமகன்** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திருமிகு. **த. இரா. சீனிவாசன் இ.ஆ.ப.** அவர்களுக்கும், சிறந்த மொழி பெயர்ப்பு நூல்களை வெளியிட நிதி உதவி வழங்கும் திட்டத்தின்கீழ் இந்நூலினை வெளியிட நிதி நல்கிய தமிழ் வளர்ச்சி இயக்குநர் முனைவர் ச. **நாகராசன்** அவர்களுக்கும் எங்கள் நன்றி.

இந்நூலினைச் சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்த பாவை அச்சகத்தார்க்கும், இதன் மெய்ப்புத் திருத்திய திரு.வ. நீலகண்டனுக்கும் நன்றி.

**30.9.1998.** **இயக்குநர்**

# முகவுரை

ஸ்ரீமான் அ. மாதவையா அவர்கள் எனக்குச் சிறிய பாட்டனார் முறையாவர்; ஆயினும், அவர் என் தந்தைக்குச் சமவயதினர்; அவர்கள் இருவரும் அண்ணன் தம்பிபோற் பழகியவர்கள். எனக்குத் தமிழலேயுள்ள ஆர்வத்தை அதிகப்படுத்தியவர்கள் அவர்கள் இருவருமேயாவர்.

ஸ்ரீ மாதவையா எழுதிய 'பத்மாவதி சரித்திர'த்தை அறியாதவர்கள் அக்காலத்தில் இல்லை. தமிழிலே எழுதப்பெற்ற நவீனங்களுள் காலத்தாலும் சிறப்பாலும் முதன்மை பெற்றவை 'பத்மாவதி சரித்திரமும்' ஸ்ரீ ராஜமையர் எழுதிய 'கமலாம்பாள் சரித்திர'முமே. தமிழிலும் ஆங்கிலத்திலும் நல்ல பாண்டியத்தியமுடைய ஸ்ரீ மாதவையா முப்பது வருஷகாலம் சுவை மிகுந்த இலக்கியங்களை இருமொழிக்கும் உதவியிருக்கிறார்.

இளம்வயதிலேயே நான் இவருடைய இலக்கியங்களில் ஈடுபட்டிருந்தேன்; அப்பொழுது 'பத்மாவதி சரித்திர'த்தை நான் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்ததை இவருக்குக் காட்டினேன். அக்காலத்தில், இவர் ஆங்கிலத்தில் எழுதிய 'குசிகரின் குட்டிக் கதைகள்' தமிழிலே மொழிபெயர்க்கப்பட்டு வந்தன. ஆங்கிலத்தில் எழுதிய 'தில்லைக் கோவிந்தன்' என்னும் நூலையும் 'தமிழர் நேசன்' பத்திரிகையில் அவர் மொழிபெயர்க்கத் தொடங்கினார். சில அதிகாரங்கள் அச்சிட்டானதும், அந்த வேலையை என்னிடம் ஒப்படைத்தார். ஆங்கிலத்திலே துல்லியமாய் அபிப்பிராயங்களை வெளியிடுவதைப் போலத் தமிழிலே வெளியிட முடியாது என்பது அக்காலத்திலே பெரும்பாலாரின் அபிப்பிராயம்; அதை மாற்ற விரும்பியே, ஸ்ரீ மாதவையா தமது ஆங்கில நூல்களைத் தமிழில் மொழிபெயர்க்கச் செய்தார்; ஆகையால், இம் மொழிபெயர்ப்பின் நடை இக்காலத்தார்க்குச் சற்றுக் கடினமாகவே தோன்ற

கூடும்; ஆயினும், ஆங்கில நூலின் கௌரவ நடையைப் பிரதிபலிப்பதற்காகவே, இந்நடை கையாளப் பெற்றது.

மூல நூலாசிரியர் காலத்திலேயே அவரால் ஏற்றுக் கொள்ளப்பட்டு வெளியான இம் மொழிபெயர்ப்பை, இக்காலத்திற்கு ஏற்றவாறு ஆங்காங்கு திருத்தி யமைத்துத் தரவேண்டும் என்று விரும்பியபடி, இம் மொழிபெயர்ப்பு மாற்றி யமைக்கப்பட்டுள்ளது. மொழிபெயர்ப்புரிமையை எனக்கு நல்கியவர் நூலாசிரியர் குமாரர் ஸ்ரீ.மா. கிருஷ்ணன் எம்.ஏ.,பி.எல்.

'தில்லைக் கோவிந்தன்' ஆங்கிலத்திலே சுமார் நாற்பது வருஷங்களுக்கு முன் எழுதப் பெற்றது. ஸ்ரீ மாதவையா, 'பம்பா' என்னும் புனைபெயர் பூண்டு எழுதுவதுண்டு. PAMBA என்னும் ஐந்து எழுத்துக்களும் முறையே, 'பெருங்குளம், அ. மாதவையா, பி.ஏ' என்பதைக் குறிப்பன. 'பம்பா' என்பவர், தம் நண்பரான தில்லைக் கோவிந்தன் எழுதிய சுயசரிதத்தைப் பதிப்பித்தார் என்று கற்பனை செய்து எழுதப்பட்டது இந்நூல். சென்ற நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்து, மேனாட்டுக் கல்வியிற் பயின்று, அதனாற் கொண்ட லக்ஷயங்களோடு தங்கள் வாழ்க்கையைச் சம்பந்தப்படுத்த இயலாது சங்கடப் பட்டதை நன்கு விளக்கும் கதையாக இச்சிறு நூலை எழுதினார். இந்நூலை மதிப்பிட்ட 'ப்ரெடரிக் ஹாரிஸன்' என்னும் இலக்கிய விமர்சகர், "தற்கால ஐரோப்பிய வாழ்க்கையாகிய சுழியிலே அகப்பட்டுக்கொண்டு மாறுபட்ட போக்கினாற் குழம்புகின்றதான புராதனமா யுள்ள ஹிந்து வாழ்க்கையை மனத்தைக் கவரும் முறையிலே சித்திரித்துக் காட்டுவது இந்நூல்" என்று கூறியுள்ளார். அக்காலத்து மேனாட்டாருக்கு இருந்தது போலவே, இக்காலத்துத் தமிழ் மக்களுக்கும் இந்நூலிலே விளக்கப்படும் மனோபாவங் களும் வாழ்க்கைச் சங்கடங்களும் புதியவையாயும், விநோதங்களாயும், சுவையுள்ளவையாயும் இருக்கும் என்று நம்புகிறேன்.

ஸ்ரீ மாதவையா பேச்சிலும் நடத்தையிலும் துல்லியமா யிருப்பவர்; உண்மையைச் சொல்வதற்குத் தயங்க மாட்டார். மனத்தில் எழும் எண்ணங்களை அப்படியே

சித்திரித்துக் காட்டும் சொல்வன்மை இவரிடம் காணப் பட்டது; எதையும் மறைப்பதோ மழுப்புவதோ செய்யா மல், உள்ளதை உள்ளவாறு விளக்கும் இந்த இயல்பே இந்நூலுக்குச் சிறப்பைத் தருவதாகும். இதுவே இவர் எழுதிய ஏனைய நூல்களைப் போல, இந்நூலையும் 'இது கற்பனையன்று, உண்மைச் சரிதமே' என்று தோன்றும்படி செய்வது.

23.9.44 வே. நாராயணன்

# பொருளடக்கம்

# தில்லைக் கோவிந்தன்

முதலாவது அதிகாரம்

## நான் நோவுற்று அழுததும், பிறர் அதுகண்டு மகிழ்ந்ததும்

**தி**ல்லை என்னும் ஊர் தமிழ்நாட்டிலே உள்ளது. அங்கே இரண்டு கோயில்கள் உண்டு; ஒன்று சிவன் கோயில், மற்றொன்று பெருமாள் கோயில். அவ்வூரிலுள்ள பிராம்மணர் வீதியில் சுமார் ஐம்பது வீடுகள் உண்டு; அங்கே பள்ளர், பறையர், சாணார் முதலிய தீண்டாதார் யாரும், பண்டைக்காலந் தொட்டு, அடியெடுத்து வைத்த தில்லை. இத்தகைய புண்ய பூமியான அக்கிரகாரத்தி னின்றும் விலகி, மரியாதையான தூரத்தில் நூற்றுச்சொச்சம் வீடுகள் கொண்ட 'சூத்திரக்' குடி அமைந்துள்ளது. பெரும்பான்மை இந்தியக் கிராமங்களைப் போலவே, இவ்வூரும் உழுதுண்டு வாழும் ஊரே; மற்றும், அந்தக் கிராமங்களைப் போலவே, இவ்வூரிலும் பிராம்மணன் எவனும் கைப்பாடு படுவதில்லை; 'சூத்திரர்'களிலும் ஒருசிலர் மட்டுமே பாடுபட்டு நிலத்தைப் பயிர் செய்பவர்; இந்த இழிவான வேலையெல்லாம் மேலே குறித்த கீழ்ச்சாதியி னராலேயே செய்யப்பட்டு வந்தது. பிராமணர்களும், 'சூத்திரர்'களும், தங்களுடைய வயல்களிலே மெய்வருந் திப் பயிரிட்டு அறுவடை செய்த உழவர்கள் அக்கிரகாரக் கோடியிலோ அல்லது 'சூத்திரக் குடியிலுள்ள வீட்டு வாசலிலோ கொண்டுவந்து குவிக்கும் நெல்லைக் கொண்டு, வீட்டிலேயே சுகமாக வாழ்ந்து வந்தார்கள். அவ்வூர் நிலம் செழிப்பும் பூஸாரமு முடையதே; ஆயினும், அதனால்

ஆகவேண்டிய காரியம் அதிகம். அதனால் வரும் வருமானத்தினின்றும் சர்க்காருக்கு அதிகப்படியான தீர்வை செலுத்தியாக வேண்டும். மூன்று தலைமுறையாகியும் சேர்ந்து வாழுகின்ற நிலச்சுவான்தாரி னுடைய பெரிய குடும்பத்திலே செய்யும் அன்றாடச் செலவுகளையும் விசேஷச் செலவுகளையும் அதைக் கொண்டே சரிப்படுத்த வேண்டும்; கிராமக் காவற்கார மறவர்கள் தயைபுரிந்து திருடுவதை விடுத்துச் சும்மா இருப்பதால், நிலச்சுவான் தாரின் சொத்துகளும் அவனுடைய வயல்களில் விளையும் பயிரும் திருட்டுப் போகாமற் காக்கப்படுகின்றன வாகை யால், அந்தக் காவற்காரர்களுடைய குடும்பச் செலவுக்கு வேண்டிய காவற் கூலியும் நில வரும்படியினின்றே செலுத்த வேண்டும்; கிர்ாமப் பொது நிதிக்கு வருஷாந்தர வரி செலுத்த வேண்டும்; மேற்கொண்டு சாகுபடி செய்வதற்குப் பொருள் வேண்டும்; இவை யெல்லாவற்றிற் கும் கடைசியாக, நிலத்தைப் பயிரிட்டு விளையச் செய்யும் உழவர்களையும் அவர்களுடைய பெருங் குடும்பங்களை யும் பட்டினியாய்ச் சாவாமல் ஜீவித்திருக்கும்படி செய்ய ணேவ்டும். கீழ்ச் சாதியினரான இவ்வுழவர்களோ, பூதேவர் வாழும் திருக்கோயில்களுக்கு நெடுந்தூரத்திலே தாங்கள் பயிரிடும் வயல்களுக்கு இடையிடையேயுள்ள திடல் களிலே கூரை வேய்ந்த சேரிக் குடிசைகளிலே ஆடு மாடுகளோடும் நாய் பன்றி முதலியவற்றோடும் அநாதை களாய்; தீராத் தரித்திரத்திலே ஆழ்ந்து, எவ்வாறோ காலந் தள்ளிவந்தனர்.

சித்திரைக் கோடையிலே ஒருநாள், பிற்பகலிலே பிராம்மணத் தெருவின் மத்தியிலுள்ள தாழ்ந்த மட்டப்பா வீடு ஒன்றின் வாசற் திண்ணையிலே பத்துப் பன்னிரண்டு பிராம்மணர்கள் கூடியிருந்தார்கள்;அவர்களில்ஒருவர் அந்த ஊர் ஜோஸியர்; அவர் பெரியதோர் ஏட்டுக்கட்டைப் புரட்டிப் புரட்டிப் பார்த்துக் கொண்டும் காறைத் தரையிலே பச்சிலையாலே கீறப்பட்ட கட்டத்திலே சோகிகளை வைத்துக் கணக்கிட்டுக் கொண்டும், தலை குனிந்த வண்ண மாய் யோசனையில் ஆழ்ந்திருந்தார். வீட்டுத் தலைவாசற் கதவு சாத்தப்பட்டிருந்தது. திண்ணையில் இருந்தவர்களுள் வேறு இருவர் தவிர, மற்றவர் அனைவரும் சாப்பிட்டா

னதற்கு அடையாளமாகத் தங்கள் நெற்றியிலுள்ள புண்டிரங்கள் பிரகாசிக்க, தாம்பூலம் மென்று கொண்டிருந் தார்கள்; தவிர்ந்த இருவருள் ஒருவர் வயதானவர்; சுமார் அறுபது ஆகியிருக்கலாம்; மற்றவர் அதே அச்சிலே வார்த்தாற் போல் இருந்தார்; ஆயினும் வயது மட்டும் அந்த அறுபதிலே பாதிகூட இராது. அவ்விருவர் முகங்களும் போஜனமானதற்கு அடையாளம் யாதுமின்றி ஏக்கமும் கவலையும் குடிகொண்டனவாகக் காணப்பட்டன. மாலை நான்கு மணி ஆகியும் இன்னும் சாப்பிடாமல் இருந்த இவ்விருவர்களையும் உண்டு வயிறு நிரம்பிய மற்றவர்கள் 'கவலைப்படாதேயுங்கள்' என்று தேற்றிக் கொண்டிருந் தனர். ஜோஸியா திடீரென்று தலை நிமிர்ந்து, கைகளை நீட்டிச் சோம்பல் முறித்துக் கொட்டாவி விட்டபின், "நாளைக் காலை ஏழே முக்கால் மணிவரை ஒன்றும் நடவாது; அப்போதும் அனேகமாய், பெண்ணாய்த்தான் பிறக்கும்" என்று கூறினார். உடனே பட்டினி கிடந்த இருவரையும் சாப்பிடச் செல்லுமாறு கட்டாயப்படுத்தி னார்கள். ஆனால், அந்த க்ஷணமே, "ஐயோ! வலி தாங்க முடியவில்லையே! என் பிராணன் போகாதா? தெய்வமே! என்னைக் கொண்டுபோக மாட்டாயா?" என்று ஓர் இளம் பெண் அலறுங் கூக்குரல் அவ்வளவு துயரத்திலே துடிக்கும் போது கூட இயற்கையினிமையோடு தொனித்தது. அதைக் கேட்டதும் அவ்விருவருள் இளையவன் துக்கத்தைத் தாங்க முடியாமல், குழந்தையைப் போல, விம்மி விம்மி அழத் தொடங்கினான். அவனுடைய தந்தையாராகிய பெரியவர் கண்களிலும் நீர் ததும்பி நின்றது; அவர் தம் மகனைத் தோளிலே தட்டித் தேற்றி, தழுதழுத்த குரலிலே "பொறுத் துக் கொள், குழந்தாய், பொறுத்துக் கொள், 'தெய்வமே!' என்று இரு" என்று சொல்லிக் கொண்டிருந்தார். ஓயாத உழைப்பும் தீராத் துயரமும் நிரம்பிய இந்தக் கீழுலகத்திலே பிறந்துழலுவதற் கென்று இன்னொரு ஜீவனைப் பெற்றுவிடுவதாகிய பிரஸவ வேதனையிலே அந்த இளம்பெண் அலறிய கதறலைக் கேட்டதும், அதுவரை வாய்க்கு வந்தவாறு பேசி அவர்கள் இருவரையும் தேற்றிக் கொண்டிருந்த திண்ணைக் கூட்டமும் நிச்சப்தமாய் விட்டது; அவர்கள் கண்களிலும் கண்ணீர் நிறைந்தது; 'அந்தப்

பெண்ணின் கணவன் ஆற்றொணாத துக்கத்தில் ஆழ்ந்து போவதைத் தடுத்து அவனைத் தேற்ற முயலாமல் செயலற்று இருந்தார்கள். மறுபடியும் அந்த நிச்சப்தத்தைப் பிளந்துகொண்டு திடீ ரென்று முன்னிலும் உரக்க அலறிய கூக்குரல் ஒன்று எழுந்தது. அதனை அடுத்து, நாணிப்பாட்டி தன் கர்ண கடோரமான தொண்டையிலே பின்வருமாறு கூப்பாடு போடுவதைக் கேட்டார்கள். ''செக்கச் சிவக்க, பலாச்சுளை போலே, பிள்ளைக் குழந்தை, செவ்வாய்க்கிழமையும் தானுமாய் செத்தா பிறக்கவேணும்! நாட்கிழமை வந்தால் 'என் கடனைச் செலுத்து, 'எனக்குக் கொடை போடு' என்று பிய்த்துப் பிடுங்கும் குலதெய்வங்கள், ஆணும் பெண்ணும் அடங்கலும் எங்கே போச்சு? ஆபத்து ஸமயத்திலே தூணைப்போல வாயடைத்துப் போச்சே! மங்கலியப் பெண்டுகள் கூட ஓடி ஒளித்துக் கொண்டார்களே! என்னைக் கேட்டால், 'போனாலும் போகிறது என்று ஒரு பெரிய வைக்கோற் படப்பைக் கொளுத்தி இந்தத் தெய்வங்களை யெல்லாம் ஒரே கட்டாகக் கட்டிப்போட்டுப் பொசுக்கினால் என்ன?'' என்பேன். இவ்வாறு நாணிப் பாட்டி 'அறையோ'க் கூவி முடிக்குமுன், அவளுடன் பிறந்தவளான சேஷிப்பாட்டி ''என்னடி சொன்னாய்?'' என்று அதட்டிக் கொண்டு வாசலிலே கூடியிருந்த புருஷர்களின் நடுவில் பரபரப்போடு தோன்றினாள். தெருவிலுள்ள ஆண், பெண், குழந்தை எல்லோரும் வேடிக்கை பார்ப்பதற்கு வந்து கூடிவிட்டார்கள்.

விகாரமான முஞ்சியும் மொட்டைத் தலையுமாய்க் காட்சியளித்த கிழவியாகிய சேஷிப்பாட்டி, ஆவேசங் கொண்டு, ஆடை குலைய ஆடும் அலங்கோலத்தைக் கண்டவர்களுக்கு அவளிடமிருந்த சொற்ப மரியாதையும் போய்விடும்; ஆனால் அங்குள்ளவர்களோ, 'ஏதோ ஒரு துஷ்ட தேவையானது நாணிப்பாட்டியின் ஏச்சு வார்த்தை யாலே கோபங் கொண்டு சேஷிப்பாட்டி மீது ஆவேசமாக வந்திருக்கிறது' என்றே எண்ணினார்கள்; 'என்ன நடக்கிறது, பார்ப்போம்' என்று அவளைச் சூழ்ந்து கொண்டார்கள். பிரஸவ அறையிலே மருத்துவச்சி வேலை செய்து கொண்டிருந்த நாணிப்பாட்டியும் அந்த அலங்கோல

வேஷத்தோடேயே எல்லோரும் காண வெளியே வந்து நின்றாள். வீட்டு யஜமானாகிய பெரியவரும் மற்றவர்களைக் காட்டிலும் அதிக பயபக்தியோடு ஆவேசமுற்று நின்ற சேஷிப்பாட்டியின் முன்பு தலைவணங்கி நின்று, 'தெரிந்தோ தெரியாமலோ செய்த குற்றங்களையெல்லாம் மன்னித்தருள வேண்டும்' என்று பிரார்த்தித்தார். "தெய்வமே! நீ யாரோ, தெரியவில்லையே! யாராயிருந்தாலும், ஏழை நான் அறியாது செய்த அபசாரங்களைப் பொறுத்தருளி என்னைக் கடாக்ஷித்துக் காக்க வேண்டும். உன் இஷ்டப்படியெல்லாம் செய்கிறேன். இந்தச் சிசுவை மட்டும் பிழைக்கும்படி கிருபை செய்ய வேண்டும்; அப்புறம் என் ஆயுள் முழுவதும் உனக்கே அடிமையாக இருக்கிறேன். என்ன செய்ய வேண்டும், தெரியவில்லையே! ஏழைக்கு அருள் செய்ய மாட்டாயா, தெய்வமே! நீ யாரோ தெரியவில்லையே!" என்று கெஞ்சித் தவித்தார். "அடே! தெரியவில்லையா உனக்கு? நன்றி கெட்டவனே! என்னை மறந்துவிட்டாயா? ஆ! அவ்வளவு துடுக்கா உனக்கு? ஆஹா! உனக்குப் புத்திவரப் பண்ணுகிறேன்; இதைக் கரும்புபோல முறித்துத் தின்று விடுகிறேன் பார், பார்" என்று சேஷிப்பாட்டி பயங்கரமாய்ச் சிரித்துக் கொண்டே தன் கைகளைத் திருகி, கரும்பு முறிப்பது போலே சைகை செய்தாள். அதைக் கண்டு பயந்த அப் பெரியவர், தம்மைப் பொறுத்தருளி யார் என்று வெளியிடுமாறு சேஷிப் பாட்டியை வேண்டவே, அவள் "நான்தான் பாப்பாப் பாட்டி! பாப்பாப் பாட்டியடா! கொல்லைக் கிணற்றிலே விழுந்து செத்தாளே அந்த பாப்பாப் பாட்டியடா! தெரியவில்லையா?" என்று கூறினாள்; உடனே, "ஐயோ! குளிர்கிறதே! குளிர், நடுக்குகிறதே!" என்று புலம்பிய வண்ணம், மலைச்சுரம் வந்தவள் போல நடுங்கினாள். அதைக் கண்டதும் அப் பெரியவர் "தாயே! மாட்டுப்பெண் குளித்ததும் உனக்குப் புதுப் புடவை வாங்கிச் சாத்து கிறேன்; இந்தக் குழந்தைக்கு உயிர்ப்பிச்சை கொடு" என்று நேர்ந்து கொண்டார். அதனாலே சமாதானமடைந்த பாப்பாப் பாட்டியும் "தரையைச் சாணகத்தாலே மெழுகி, அதன் மேலே குழந்தையைக் கிடத்தி, 'கோவிந்தா!' என்று மூன்று தரம் கூப்பிடு" என்று இடிபோல் முழங்கினாள்.

கண்ணிமைக்கும் நேரத்துள் நாணிப்பாட்டி பிரஸவ அறையுள்ளே சென்று விட்டாள்; பிதுர்க்களுக்குக் குளிர் நடுக்கத்தாலே காது மந்தமாயிருக்கும் என்று நினைத் தாளோ என்னவோ, ''கோவிந்தா! கோவிந்தா!'' என்று அவள் உரக்கக் கூப்பிட்டது வெளியே எல்லோர்க்குங் கூடக் கேட்டது. 'எண்ணிக்கையில் குறையக்கூடாது, கூட ஒன்று இருக்கட்டுமே! என்று மூன்றுக்கு நான்கு தடவை கூப்பிட்டாள். அப்படியும் குழந்தை அசையாமலே கிடப்பதைக் கண்டு மனங்கசிந்து கோபங்கொண்டு அதைத் தன் கையாலே ஒரு குத்து குத்தித் தள்ளிவிட்டு பாப்பாப் பாட்டியை வைபவள் போல முணுமுணுத்தாள். ஊழ்வலியும் நாணிப்பாட்டியின் கட்டைவிரல் நகத்தின் கூரும் சேர்ந்து, அந்த சிசு மண்ணுலக வாழ்க்கையிற் புகாமலே மௌனஞ் சாதித்துத் தப்பித்துக் கொள்ள முயல்வதைத் தடுத்துவிட்டன; நகம்பட்டுக் கீறுண்ட இடத்திலே இரத்தம் பெருகிற்று; குழந்தையும் காலையும் கையையும் அடித்துக் கொண்டது. நோவும் துன்பமும் நிறைந்த அழுகுரலோடு நான் இவ்வுலக வாழ்க்கையைத் தொடங்கினேன். இந்தச் சந்தடியிலே யாராலும் கவனிக்கப் படாமல் மூர்ச்சையாகக் கிடந்த என்னுடைய தாயை என் அழுகுரலே ஆசுவாசப்படுத்திற்று. அதுவே அப்பொழுது அவளது உயிரைக் காப்பாற்றியது என்னலாம். என்ன விந்தை இவ்வுலகம்! உலக வாழ்க்கையில் இன்பங்களும் துன்பங்களும் எத்துணை நிலையற்றவையாயும் பொருத்த மற்றவையாயும் இருக்கின்றன!

### இரண்டாவது அதிகாரம்

## என் குடும்பத்தாரை இதை வாசிப்பவர்க்கு அறிமுகப்படுத்துவது

**தி**ல்லை ஸாம்பசிவ தீக்ஷிதர் மிக்க ஸ்திதியுடையவர்; அதினும் மிக்க வடமொழிப் பாண்டித்யமுடையவர். நான்கு சாஸ்திரங்களிலும் வல்லவர் என்று யாவராலும் ஒப்புக்

கொள்ளப்பட்டவர்; ஆயினும் பாமர ஜனங்கள் அனுஷ்டிக்கும் ஹிந்து மதாசாரங்களையே அவரும் அனுஷ்டித்து வந்தார். அதோடு நிற்கவில்லை, சிவபக்தி மேலிட்டு, விஷ்ணுவையும் வைஷ்ணவர்களையும் துவேஷிப்பவர். நல்ல புத்திசாலி, தர்க்கத்திலே நுணுகி வாதிக்க வல்லவர்; என்றாலும், இந்த விஷயத்திலே மட்டும் யாரோடும் வாதிக்க விரும்பாதவராய், தாம் கொண்ட கொள்கையை விடாப்பிடியாய்ப் பற்றிக் கொண்டு வருஷந்தோறும் தில்லையிலுள்ள பெருமாள் கோயிலில் உத்ஸவம் நடக்கும் பத்துநாளும் அருகிலுள்ள நந்தியூருக்குப் போய்விடுவார். அவரிடம் காணப்பட்ட மற்றொரு சிறு குண தோஷமும் மேற்சொன்ன குண விசேஷத்தோடு அவருடைய சிறப்புக் குணமாகக் காணப்பட்டது. அதாவது பிராம்மணரல்லாதார் அனைவரிடமும் அவருக்கு இருந்த அவமதிப்பே. இதனை அவர் மறைப்பதில்லை. ஆகவே, விஷ்ணுவை வணங்குவதைக் காட்டிலும், கிறிஸ்துவைப் பெற்றெடுத்த கன்னிமேரியைக் கூட அவர் வணங்குவதற்கு இணங்குவார்; 'சூத்திர'னாகப் பிறந்த பெரியாரினும் பிராம்மணனாகப் பிறந்த கொலையாளியையும் சிலாக்கியமென்று கொள்வார். 'சூத்திர'னோடு பழகுகிறோமே என்று தம்மையே அதிகம் இகழ்ந்து கொள்ளாமல் என் பாட்டனார் அளவளாவியது யாரோடு என்றால், தம்மினும் அதிகமாக விஷ்ணுவைத் துவேஷிக்கும் ஸதாசிவப் பிள்ளை என்னும் 'சூத்திரர்' ஒருவரோடு மட்டுமே. இந்த ஸதாசிவப் பிள்ளை அடிக்கடி 'சிவராம கிருஷ்ண கோவிந்த நாராயண மஹாதேவா!'' என்று சொல்லிவிட்டு ''நெருக்கடா, பயலை நெருக்கு!'' என்று சந்தோஷப்படுவார்; அவ்வளவு கிறுக்கு அவருக்கு; இப்படிச் சொல்லும்போது, சிவனுடைய பெயரைவிட இருமடங்கு விஷ்ணுவின் பெயரைச் சொல்கிறோமே என்று அவருக்குத் தோன்றாது. மற்றப்படி, என் பாட்டனார் ஒன்றோடொன்று பொருந்தாதவையும் தீர்க்காலோசனை செய்யாமற் கைக்கொண்டவையுமான கொள்கைகளையும் அனுஷ்டானங்களையுமுடைய பிராம்மண ஸமூஹத்தினரை விட எவ்வகையிலும் மாறுபட்டவர் அல்லர். நான் பிறக்கும்போது என் தாய்க்கு அபாயமான நிலைமை ஏற்பட்ட போதும் 'அப்பாத்துக்கரி'யையோ

மருத்துவச்சியையோ உதவிக்குக் கூப்பிடாததற்குக் காரணம் 'அப்பாத்துக்கரி' புருஷனாயும் 'மருத்துவச்சி நன்னடத்தையில்லாத கீழ்ச்சாதி கிறிஸ்துவச்சியாயும் இருந்ததுதான் என்று பிற்பாடு கேள்விப்பட்டேன்.

எங்கள் குடும்பத்திலுள்ள புருஷர்களுக்கு மக்களிலும் மனைவிமாரே அதிகமாயிருப்பது ஸஹஜம். என் தந்தையின் பாட்டனார் ஒருத்தி பின் ஒருத்தியாக நாலு பேர்களைக் கல்யாணஞ் செய்துகொண்டும் அவர்கள் அனைவரும் இறந்த பின்னும் ஜீவித்திருந்தார்; இந்த விவாஹங்களின் பயன் என் பாட்டனாரும் பாப்பாப் பாட்டி ஆவேசமாக வருவதற்குப் பாத்திரமான சேஷிப்பாட்டியும், என்னை நகத்தாலே கீறி உயிர்ப்பித்த நாணிப்பாட்டியுமே. என் பாட்டனாரும் மூன்று தரம் விவாஹஞ் செய்து கொண்டவர். மூத்தாள் இளமையிலே இறந்து விட்டாள்; இரண்டாவது தாரம் என் தந்தையைப் பெற்ற பாட்டியார்; அவளும் நான் பிறக்குமுன்பே இறந்து போனாள். கடைசித் தாரம் அவருடன் வாழ்ந்து கொண்டிருந்தாள். அவளைப் பார்த் தால், என் பாட்டனாருடைய விஷ்ணுத் துவேஷத்திலே கோபங்கொண்ட அக்கடவுளே அவரைத் தண்டிப்பதற்காக அனுப்பியவளோ என்று தோன்றும்; விவாஹமான புதிதில் அவள் வெகு ர்ாங்கிக்காரியாகவும் கட்டுக் கடங்காதவளாக வும் மரியாதையற்றவளாயும் துடுக்கும் வீண் பேச்சும் மிகுந்தவளாயும், என் பாட்டனார் எவ்வளவு பய பக்தி யோடு இருந்தாரோ அவ்வளவு உல்லாஸமும் வம்புமுடை யவளாயும், அவருடைய சீரைக் குலைத்து விருத்தாப்பிய தசையிலே அவருக்கு அவமானத் தையும் கெட்ட பெயரையும் விளைவித்து அவரைச் சாக அடிப்பாளோ என்று அஞ்சும்படி நடப்பவளாயும் விளங்கினர் என்பர். அவளை அவர் பாணிக்கிரஹணம் செய்து கொள்ளும்போது அவளுக்கு வயது பதினைந்துக்கு இரண்டு குறை, அவருக்கு ஐம்பதுக்கு இரண்டு குறை. சில மாதங்களுக்கு அப்புறம் அவள் கணவன் வீட்டிற்கு வாழ்க்கை நடத்த வந்தபொழுது தான், "செல்வமோ, வடமொழியிற் பாண்டித்தியமோ ஒருவனுக்கு மரியாதையும் செல்வாக்கையும் நிரந்தரமாகத் தரும் என்பது இல்லை" என்று அவர் முதன் முதலாக உணரும்படி

நேர்ந்தது. ஆனாலும், இது எல்லாவற்றையும் விட அவர் மனத்தை அதிகமாகப் புண்படுத்தியது என்ன என்றால், இளைய மனைவியானவள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய காம லீலைகளில் ஏதாவது ஒன்றைப் பற்றி ஸதா பாடிக் கொண்டிருக்கும் வழக்கமே. அவர் ஆக்ஷேபித்துப் பார்த்தார், வாதாடினார், கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்; ஒன்றும் பலிக்கவில்லை; பாட்டு அதிகமாயிற்றே ஒழிய குறைந்தபாடில்லை. சைவப் பற்று மிகுந்த அவருடைய ஜீவனுக்கு, சொந்த வீடே நரகம்போல் ஆகிவிட்டது. இந்த அடங்காப் பிடாரியைப் பயமுறுத்தியோ ஹிம்ஸித்தோ வச்சுக்கலாம் என்றால், இதிலும் மானக் கேடாக நடந்து கொண்டால் என்ன செய்வது? நியாய ஸபையின் தீர்ப்பைப் பெற்று விவாஹ ரத்து செய்யலாம் என்ற எண்ணம் ஹிந்து மனப்பான்மை கொண்ட அவருடைய மனத்திலே தோன்றவில்லை.' *எனவே மீளாத் துன்பத்தை அனுபவித்தே தீர்க்க வேண்டும் என்று, விதிக்குத் தலை வணங்கியவ்ராய் மீண்டும் வேதாந்த விசாரஞ் செய்யத் தொடங்கினார். வாஸ்தவத்தில், அவருடைய இளைய மனைவி கெட்ட குணமுடையவள் அல்லள்; அவளுடைய கோணல் வழிகள் எலலாம், பால்யத்திலே அவள் நன்றாக வளர்க்கப்படாததினாலேயே. காலக் கிரமத்திலே, நான்கு குழந்தைகளைப் பெற்று அவற்றைப் பிறந்த ஆறு மாதத் திற்குள் சாகக் கொடுத்த பின்பு, அவள் மனம் புண்பட்டது; கொட்டமும் அடங்கிவிட்டது; அதனால், நான் பிறக்கும் போது அவள் கட்டுக்கு அடங்கி நடப்பவளாகி விட்டாள்.

இதே அதிகாரத்தில் என் அருமைத் தாய் தந்தையரைப் பற்றி எழுதுவதற்கு எனக்கு மனம் வரவில்லை. ஆகையால் அவர்களைப்பற்றி, பின்னால் ஸந்தர்ப்பம் நேரும்போது எழுதுகிறேன். சேஷிப் பாட்டியும் நாணிப் பாட்டியும் பால்யத்திலே விதவையானவர்கள்; அவர்களுக்குக் குழந்தைகள் இல்லை. கணவரை இழந்தது முதல், அவர்கள் உடன் பிறந்தவரான என் பாட்டனாருடன் வசித்து வந்தார்கள். எங்கள் குடும்பத்தைப் பற்றிக் கூறும்போது, இனி நான் குறிப்பிட வேண்டியது ஒரு

ஹிந்துக்களுக்குச் சட்டப்படி விவாஹ ரத்து செய்யும் உரி
)ல என்பதை ஆசிரியர் மறந்துவிட்டார் போலும். - பம்பா

பையனையே. அவன் எனக்கு ஒன்றுவிட்ட சிற்றப்பன்; என் பாட்டனாருக்கு மூன்றாவது தாரத்தின் ஐந்தாவது குழந்தையாகப் பிறந்த அவனுக்கு, நான் பிறக்கும்போது ஏழு வயதாகியிருந்தது.

எங்கள் குடும்பச் சொத்து, சுமார் முந்நூறு வருஷங் களுக்கு முன் இருந்த என் முன்னோர் ஒருவருக்கு அப்பொழுது எங்கள் ஊருக்கு அதிகாரியாக இருந்த ஒரு 'சூத்திர' கனவானால் ஸர்வ மானியமாகத் தானஞ் செய்யப்பட்டது. தானஞ் செய்தவரோ, 'சூத்திரர்,' விடபுருஷர்; பொருட் செல்வத்தைத் தவிர வேறு எச்செல்வமும் இல்லாதவர்; தானங் கொண்டவரோ வேத சாஸ்திர வித்பன்னரான அந்தணர்; இவருக்கு அவர் தானஞ் செய்த காரணம் எனக்குப் புலப்படவில்லை. ஆனாலும் இவ்வளவு காலம் கழிந்துவிட்டதாலும், தானம் செல்லுமா என்று பரிசீலனை செய்வதால் குடும்ப சொத்தை இழக்க நேரிடலாமாகையாலும், இந்த ஆராய்ச்சியில் இறங்கு வதற்கு நான் ஆசைப்படவில்லை.

### மூன்றாவது அதிகாரம்

## பழைய நினைவுகளிலும் சம்பவங்களிலும் சிலவற்றைக் கூறுவது

என்னுடைய ஞாபகம் என்னும் ஏட்டுக் கட்டைத் திருப்பி முதல் ஏட்டிலே தெளிவாகக் காணப்படுகின்றது எது என்று நோக்கும்போது, எனது பாட்டிகளைப் பற்றி விந்தையான விஷயங்களிலும் நிகழ்ச்சிகளிலும் ஒரு சிலவே துலங்குகின்றன. அவற்றை இங்கே குறிப்பது பொருந்தும். அவர்கள் இருவரும் என் பாட்டனாருக்கு ஒன்றுவிட்ட சகோதரிகளே; ஆயினும், அவர்கள் கணவரை இழந்தபின் என் பாட்டனாருடனேயே வசிக்கலானார்கள். தங்களில் ஒவ்வொருத்திக்கும் கணவன் சொத்திலிருந்து ஜீவனாம்சமாகக் கொடுக்கப்பட்ட ரூபாய் ஆயிரத்தையும் கையாளுவதற்காக என் பாட்டனசர் அவர்களைத்

தந்திரமாகத் தம்மிடம் வந்து வசிக்கும்படி செய்துவிட்டார் என்று அவர்கள் ஓயாது சொல்லிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு நேர்ந்த துர்க்கதிக்கு அனுதாபங் காட்டி, ஆயுள் பரியந்தம் தம்முடன் யாதொரு விசாரமுமின்றி வசிக்கலாம் என்று கூறித் தம்மோடு அழைத்து வந்தபின், அவர்களுடைய மைத்துனர்களுடன் வழக்குப் பேசிச் சண்டையிட்டு அவர்கள் தங்களுக்குரிய ஜீவனாம்சத்தை வாங்கி இவரிடம் கொடுத்தது வாஸ்தவந்தானாம். ஆனால் அந்தப் பணத்தையெல்லாம் தம்முடைய சொத்தோடு சேர்த்துக் கொள்ள அவர்கள் சம்மதிக்கும் வரையுந்தான் அவர்களிடம் சகோதர வாஞ்சை காட்டினாராம். பிறகு அவர்களை அலக்ஷ்யம் செய்யத் தொடங்கவே, சண்டைகளும் புகார்களும் தோன்றின; அவ்வர்கள் அலறியழுதும் மார்பிலே அடித்துக்கொண்டும் இவரைப் பழிப்பதும், இவர் அவர்களை நன்றி கெட்டவர்கள் என்று ஏசுவதும், அர்த்த சந்திரப் பிரயோகஞ் செய்து பிடரியைப் பிடித்து வெளியே தள்ளுவதும் அடிக்கடி நிகழ்ந்து வந்தன.

இப்படி நிகழ்ந்த நிகழ்ச்சிகளுள் ஒன்று எனக்கு நன்றாக ஞாபகமிருக்கிறது. ஒரு நாள், சோமவாரத்தன்று சாயங் காலம் பாட்டிகள் இருவரும் சிவன் கோயிலுக்குப் புறப்பட்டார்கள். ஸ்வாமிக்கு இரண்டு தேங்காயும் திரு விளக்குக்கு இரண்டு முட்டை நெய்யும் வேண்டும். எங்கள் குடும்பத்திற்குச் சொந்தமாக, பெரிய தென்னந் தோப்புகள் இரண்டும் மூன்று கறவைப் பசுக்களும் ஐந்தாறு எருமை மாடுகளும் இருந்தன. ஆகையால் வீட்டிலே தேங் காய்க்கோ நெய்க்கோ ஒருகுறைவும் இல்லை. அவற்றைக் கொண்டு என் பாட்டனாரின் மூன்றாவது தாரமாகிய வேதம்மாள் இரகசியமாய்ச் செய்துவந்த வியா பாரத்திற் கும் யாதொரு குறைவும் இல்லை. சேஷிப்பாட்டி வேதம்மாளிடம் சென்று தேங்காயும் நெய்யும் வேண்டு மென்று மெள்ளக் கேட்டபோது, அவள் மாட்டுக்கு அரைத்த பருத்திக் கொட்டையையும் தவிட்டையும் கலந்து கொண்டே, பின்வரும் பாட்டைப் பாடிக் கொண் டிருந்தாள்.

['மார்கழி மாதம் திருவாதிரை நாள்' என்ற வர்ண மெட்டு]

''ஏன் அடா கிருஷ்ணா என் தலைப் பின்னலை
நீ இழுத்தாய்'' என்றாள் ஒரு கோபி,
''ஏன் அடி, உன் கண்கள் என் இதயத்தை
முன் இழுத்தன'' என்றான் நந்தன் மகன்;
பின்பவள் ''உன்மொழி என் இதயத்தினைப்
பிளவு செய்தன'' என்று பேச,
அன்னவள் பவளமென் அதரங்களை
முத்தம் ஆடி நகைத்தான் அந்த தோஷி.

இந்த ஸரஸ ஸல்லாபப் பாட்டிலே சேஷிப்பாட்டி கேட்டது வேதாம்பாள் காதிலே விழவில்லை.

''இரண்டு தேங்காயும் கொஞ்சம் நெய்யும் கோயிலுக்குக் கொண்டு போகலாமா?'' என்று மறுபடியும் சேஷிப் பாட்டி கேட்கவே, நான், ''பாட்டி! மச்சிலிருந்து இரண்டு தேங்காய் கொண்டு வரட்டுமா?'' என்று கேட்டேன். மச்சிற்பாவுள்ளுக்கு ஏறும் மூங்கிலேணி செங்குத்தானது; திடமா யில்லாததால் ஏறும்போது ஆடும். அதனால் ஏதாவது ஒரு சாக்குச் சொல்லிக் கொண்டு அதன்மேல் ஏறி யிறங்குவதில் எனக்கு அதிக ஆசை.

''ஆமாம். ஏணியிலிருந்து விழுந்து காலை ஒடித்துக் கொள். நடராஜா மாதிரி நொண்டிக் கொண்டிருக்கலாம்'' என்று வேதாம்பாள் என்னை அதட்டினாள். அதுவரையில் மௌனமாய் நின்று கொண்டிருந்த நாணிப்பாட்டி ''நீ போகவேண்டாம் அடா; நானே போய் எடுத்துக் கொள்கிறேன்'' என்றாள்.

**வேதாம்பாள்:** அந்தத் தேங்காயை எல்லாம் எண்ணி நூற்றுக்கு மூன்று ரூபாய் என்று கடைக்காரனுக்கு விற்றுப் போட்டிருக்கிறது. மிச்சம் ஐந்தாறுதான் இருக்கிறது; அதுவும் சமையலுக்கு வேண்டும்.

**சேஷிப்பாட்டி:** (ஆத்திரமாய்) ஸ்வாமி என்ன தேங்காயைத் தின்றுவிடுவாரா? இல்லை, தேங்காயை உடைக்காமல் சமைக்கப் போகிறதா? ஸ்வாமிக்கு நைவேத்தியம் செய்துவிட்டு மூடிகளைக் கொண்டு வந்து விடுகிறோம். ஸோமவ்ாரமும் பிரதோஷமுமாய் இருக்கிறதே என்று கேட்டு விட்டோம்.

இரைந்து அழுவதைக் கேளாமலே போய்விட்டார். அப்புறம், என் தகப்பனார் வந்தார். என்ன சச்சரவு என்று தெரிந்துகொண்டு தாமே போய் இரண்டு தேங்காய்களை எடுத்துக் கொண்டு வந்து தம் அத்தைகளிடம் கொடுத்துக் கிண்ணத்திலே கொஞ்சம் நெய்யையும் எடுத்துக் கொடுக்கும்படி என் தாயாரை ஏவினார். என் தகப்பானார் வேதாம்பாளுக்கு ஒன்றுவிட்ட பிள்ளையேயானாலும் அவள் அவருடன் பேசுவதில்லை. எதிரே நிற்பதுமில்லை; காரணம், அவளும் என் தாயாரைப் போலவே இளவயதினள். அதனால், அவள் என் தகப்பனாருடைய செய்கையைக் கண்டு முணுமுணுத்த சத்தம் அடுக்களைக்கு அப்பால் கேட்கவில்லை.

மற்றொரு ஸமயம் நடந்ததான மோசமான நிகழ்ச்சி ஒன்று என் ஞாபகத்திற்கு வருகிறது. பக்கத்திலுள்ள ஒரு புண்ணிய க்ஷேத்திரத்திற்குப் போய் வர விரும்பிய என் அத்தைப் பாட்டிகள் செலவிற்குப் பணம் கேட்டதுதான் அந்தச் சண்டைக்குக் காரணம். வார்த்தைமேல் வார்த்தையாக வளர்ந்தது; முடிவில் என் பாட்டனார் அளவு கடந்த கோபங் கொண்டவராய், கைக்கொரு உடன்பிறந்தாளாகக் கழுத்தைப் பிடித்துத் தள்ளி வீட்டை விட்டு வெளியேறச் செய்தார். ‘‘எங்கள் பணத்தைக் கொடு, போகிறோம்; வட்டியைக் கொண்டே எங்களைப்போல ஐந்தாறு பேர்கள் ஜீவிக்கலாமே’’ என்று அவர்கள் முறையிட்டார்கள். ‘‘அந்த அற்பப் பணம் எல்லாம் அப்பொழுதே ஆய்விட்டதே. அதற்கு மேல் எவ்வளவோ தின்று தீர்த்துவிட்டீர்களே’’ என்று என் பாட்டனார் சொல்லிவிட்டார். வெளியேற்றப்பட்ட அவர்கள் இருவரும் அயல் வீட்டிலே மூன்று நாள் தங்கினார்கள். அப்பொழுது என் தகப்பனார் ஊரில் இல்லை. ஏதோ வேலையாகத் தம் மாமன் வீட்டுக்குப் போயிருந்தார். அவர் திரும்பி வந்ததும் அவர்கள் இருவரையும் மீண்டும் எங்கள் வீட்டிற்கு அழைத்து வந்தார். என் பாட்டனாருக்குத் தம் மனைவியிடத்திலே பயம் அதிகமோ அல்லது தம் பிள்ளையிடத்திலோ என்று நான் ஆச்சரியப்படுவது உண்டு; அது சரியன்று; அவருக்கு என் தந்தை அதிகச் செல்லமோ அல்லது தம் மனைவி அதிகச் செல்லமோ என்று வியப்பதுதான் சரி.

இந்த ஸந்தர்ப்பத்திலே தான் என் பாட்டனாருக்கும் எங்கள் குடும்பத்திற்குமே விபரீதமாக முடிந்த ஸம்பவமானது நிகழ்ந்தது. ஒருநாள், காலையில் நதியில் நீராடிவிட்டு அவர் திரும்பி வரும்போது, தம் எதிரே ரஸ்தாவிலே ஒரு சாணான் வருவதைப் பார்த்தார். அவருடைய வயோதிகத்தையும் வைதிகானுஷ்டானத்திலுள்ள சிரத்தையையும் அவர் ஊருக்குப் பெரியவராக இருந்தலையும் உத்தேசித்து, அவர் எதிரிலே வரும் கீழ்ச்சாதியினர் அனைவரும் மரியாதையாக அவரை நோக்கிக் கும்பிட்டுவிட்டுத்தூர விலகி நிற்பது வழக்கம். ஆனால் அன்று அவரெதிரிலே வந்துகொண்டிருந்த சாணான் கிறிஸ்தவன், ஹிந்து மதத்திலுள்ள சாதி வேற்றுமைக் கொடுமையைப் பழிப்பவன்; அதனால் அவன் என் பாட்டனாரைச் சிறிதும் மதியாமலே சேறு நிறைந்த வயல்களுக்கும் முள்ளடைத்த வரப்புகளுக்கும் நடுவே அமைந்த சர்க்கார் ரஸ்தாவின் நடுவே நேராக நடந்துவந்தான். அவனுடன் பேசினாலும் தம்முடைய மூச்சு அசுத்தமாய்விடும் என்று நினைத்த் என் பாட்டனார் தமது கைகளாலே தட்டியும், விலகியொதுங்கும்படி சைகை செய்தும் பார்த்தார். சாணானோ செவிட்டுக் குருடன் போல நேரே நடந்து வந்தான். வேறு கதியின்றி, என் பாட்டனார் தாமே ரஸ்தாவை விட்டு விலகி வரப்பு வழியே செல்வதற்காக ஓடினார். அப்பொழுது அவர் விலகிய பக்கமாகவே, சாணானும் ரஸ்தாவின் ஓரம் வரையில் அவரைத் துரத்திக் கொண்டு வந்து அவரை இன்னும் அதிவேகமாக ஓடும்படி செய்தான். இதனால் கடுங்கோபங் கொண்ட என் பாட்டனார் பக்கத்துத் தோட்டத்திலே வேலை செய்து கொண்டிருந்த மறவனைக் கூப்பிட்டு, 'இந்தச் சாணானுக்குப் புத்தி வரும்படி செய்' என்றார். இதைப்பற்றிக் கேள்விப்பட்ட யாருக்கும் அந்தச் சாணான் செய்த அவமரியாதையைச் சகிக்க முடியவில்லை. நாங்கள் எல்லோரும், ஊரில் பாதிப் பேருக்குமேல், கைக்கு அகப்பட்டதை எடுத்துக் கொண்டும் வர்ய்க்கு வந்தபடி வைது கொண்டும் கிளம்பினோம். ஊரார் முன் அந்தச் சாணானை விசாரணைக்குக் கொண்டு வந்தபோது, நானும் இரண்டு கல்லை எடுத்து அவன் மீது விட்டெறிந்தேன் என்றால், எங்கள் குடும்பத்திற்கு அவமானம் விளைந்த

தற்கு நான் எவ்வளவு மனங்கொதித்தேன் என்பது விளங்கும்.

சாணானோ, சர்க்கார் நியாய ஸபைமுன் முறையிட்டுக் கொண்டான். ஐரோப்பிய பாதிரியும் அவனுக்கு அதிக ஒத்தாசை செய்தார். அந்த வழக்கை விசாரித்த பிராம்மண சப் மாஜிஸ்திரேட்டுக்குத் தம் உத்தியோகம் நிலைக்க வேண்டுமானால் குற்றஞ் சாட்டப்பெற்றவர்கள் அவசியம் தண்டிக்கப்பட வேண்டும் என்று ஜில்லா மாஜிஸ்திரேட் அந்தரங்கமாகக் கட்டளையிட்டிருப்பதாகச் சொல்லிக் கொண்டார்கள். என் பாட்டனாருக்கு நூறு ரூபாயும் வேறு இரண்டு பிராம்மணர்களுக்குத் தலைக்கு ஐம்பது ரூபாயும் அபராதம் விதிக்கப்பட்டது. மறவர்கள் மூன்று பேருக்கு மகாராணியின் விருந்தினராகச் சிறைச்சாலையிலே வசித்து தேங்காய் நார்க் கயிறு திரிக்கும் வித்தையைக் கற்கும்படி யாயிற்று. இம்மட்டோ? தீண்டற்படுவதற்குப் பயந்து என் பாட்டனார் வரப்பின் வழியே ஓடியபோது விஷ முள் ஒன்று அவர் காலிற் பாய்ந்துவிட்டது. ஒரு மாதமாகுமுன் அந்த இடத்திலே கட்டி புறப்பட்டுப் புரையோடியதால் அவருடைய பிராணனுக்கே ஹானியேற்படும் போலத் தோன்றிற்று; குடும்பத்தார் அனைவரும் ஒரே துன்பத்தில் ஆழ்ந்திருந்தோம். ஊர் வைத்தியனும் கைவிட்டு விட்டான்; என் பாட்டனாருக்கும் பிழைப்போம் என்ற நம்பிக்கை இல்லை; அவர் 'ஆபத்ஸம்ந்யாஸம்' கொள்ள விரும்பினார். உலகம் நம்மைக் கைவிடுந் தறுவாயில் நாம் அதை விட்டு நீங்குவதாகச் சொல்லிக் கொண்டு துறவை மேற்கொள்வதுதான் 'ஆபத்ஸம்ந்யாஸம்' என்பது. என் தகப்பனார் முதலிலே சற்று ஆக்ஷேபித்துப் பார்த்தார்; பிறகு, மற்றோரும் வற்புறுத்தவே, அவர் ஒப்புக்கொண்டு விட்டார். ஆகவே, என் பாட்டனார் படுக்கையிற் கிடந்தபடியே ஸம்ந்யாஸம் வாங்கிக் கொண்டார். அப்பொழுது நடந்த சடங்கின் விவரம் முழுவதும் எனக்கு ஞாபகம் இல்லை. ஆனாலும் அவருடைய தலையை மழுங்கச் சிரைத்துப் பூணூலையும் கழற்றிவிட்டபோது, நான், ஸ்வபாவமாய் என் தாயாரைப் பார்த்து, "அம்மா! தாத்தா துருக்கனாய்விட்டாரா? இனிமேல் நான் அவரைத் தொட்டால் தீண்டலாய்விடுவேனா?" என்றுகேட்டது

மட்டும் எனக்கு ஞாபகமிருக்கிறது. கண்ணீர் வடித்துக் கொண்டிருந்த என் தாயார் அதைக் கேட்டதும் சிறிது சிரித்த வண்ணமாய், தாத்தா முன்னிலும் அதிகப் புனிதராகி விட்டார் என்றும், உலக வாழ்க்கையின் இன்ப துன்பங் களையெல்லாம் கடந்தவராகி விட்டார் என்றும் பதில் உரைத்தாள். ஆனாலும், அவர் அப்பொழுது சாகவில்லை. அவர் பிழைத்துவிட்டாரே என்று நாங்கள் வருந்தும் நிலைமை ஏற்பட்டு விட்டது

அப்பொழுது அவர் அடைந்த திரிசங்கு ஸ்தானத்தைப் பற்றி இப்பொழுது எனக்கு இருக்கும் உலகானுபவ ஞானத்தைக் கொண்டு யோசித்துப் பார்த்தால், என் பிற்கால வாழ்க்கையிலே நான் செய்த எந்தப் பாபச் செயலுக்காகவும் நான் வெட்கமுற்றுத் துன்புறுவதை விட அவர் பொருட்டு அதிகம் வெட்கமுற்றுத் துன்புறுகிறேன்; 'மதப் பற்றுதான் ஜன ஸமூஹத்தை ஒன்று படுத்துவது' என்று ஆசிரியர் கார்லைல் கூறியுள்ளார். அவர் இன்னும் சிறிது யோசித்துப் பார்த்திருந்தால் போலியாசாரமே மானிட வர்க்கத்தை ஒன்றுபடுத்துகின்றது என்னும் உண்மையை உணர்ந்திருப்பார். இதனை வாசிப்பவரே! நீரே நன்கு ஆலோசித்துப் பாரும், கவனித்துப் பாரும்; மேலே சொன்ன உண்மை உள்ளங்கை நெல்லிக்கனி போல் தானே நன்றாக விளங்கிவிடும். முதலில், உம்முடைய உள்ளக்கிடக்கையைக் க்வனித்துப் பாரும். உம்முடய பாசாங்கான நடிப்புத் திறமையாலும் 'வேளைக்குத் தக்கபடி' என்ற பொன் மொழியின்படி, குணங்களை வெவ்வேறாகப் பிரித்துத் தனித்தனியாக மேற்கொள்வதாலும் உமது உள்ளத்திலே புலியும் பசுவும் போன்ற துர்க்குண நற்குணங்கள் எவ்வாறு முரண்படாது ஒத்துப் போகின்றன என்பதைக் கவனிப்பீ ராக. எதிலும் எப் பொழுதும் ஒரு படியாகவே நடந்து கொள்வார்களானால் மானுடர் அனைவரும் மிருகப் பிராயர்களாகவோ பரம சாதுக்களாகவோ விளங்குவார்கள். முழுவதும் பரம சாதுக்களாக விளங்கும் ஒரு ஜன ஸமூஹத்தைக் கனவிலும் கற்பனை செய்துகொள்ள இயலாது. நான் இந்த வரிகளை வரையும்போதே, என் உள்ளத்தில் எங்கோ ஒருபுறத்தி லிருந்து என் இயற்கை யறிவானது, "ஒளிப்பு மறைப்பு ஒன்றும் இல்லாமல்

உள்ளதை உள்ளபடி உரைப்பவனைப் போல நடிக்கிறாயே? இதில் ஏமாற்று ஒன்றும் இல்லையா?'' என்று என்னைப் பரிகசிக்கின்றது. மனிதரின் உள்ளப் போக்குகளின் நுண்மைகளையெல்லாம் உள்ளவாறு உணர்ந்து எவரே உள்ளபடி வெளிப்படுத்த வல்லார்? வல்லார் எவர்தாம் அவ்வாறு வெளிப்படுத்தியுள்ளார்? அடுத்தபடியாக, உமது குடும்பத்தைக் கவனித்துப் பாரும். என் வாசகரே! நீரும் உமது மனைவியும் மக்களும் ஒன்று சேர்ந்து ஒரு கூரையில் வாழ்ந்த இத்தனை நாட்களிலும் இருபத்து நான்கு மணி நேரமேனும் ஒருவரையொருவர் ஏமாற்றிப் பாசாங்கு செய்யாது வாழ்ந்ததுண்டோ என்று ஆராய்ந்து, மார்மேலே கை வைத்துச் சத்தியமாகச் சொல்லும். அது வேண்டாம். இந்த நிமிஷம் முதல் ஒரு இருபத்து நான்கு மணிக் கூறு உள்ளதை உரைத்து யதார்த்தமாக நடந்து கொள்ளத் தைரியம் உண்டானால் அப்படிப் பிரதிக்ஞை செய்து கொண்டு நடக்க யத்தினம் செய்யும். அப்பொழுது காண்பீர், அடிதடியும் மண்டையுடைதலும் ஏற்பட்டு, ஒருவர்மேல் ஒருவர் வழக்காடி நியாயசபை நாடிச் செல்வதை. இனி உம்மையும் உமது குடும்பத்தையும் விட்டு, வெளியுலகைக் கவனித்துப் பாரும்; சாதி, குலம், அரசாங்கம், நாடு, பல்வேறு நாடுகளின் தொகுதி, ஸர்வ தேசச் சட்டங்கள், நீதிகள் இவை அனைத் திலும் பொய்யும் புனை சுருட்டுமே ஜன ஸமுதாயங்களைப் பிணைத்து ஒன்றுபடுத்துகின்றன என்று நான் சொல்வதை நம்பும். ஜன ஸமூஹத்தைச் சிதறுண்டு அழிந்து போகாதபடி செய்வது, தம்மையும் பிறரையும் வஞ்சித்து நடத்தும் போலி நடத்தையே. தொட்டிலிலே தொட்டு இணைபிரியாது பழகிய நண்பர் இருவர் மூடத்தனமாய் ஒருவர்க்கொருவர் தங்கள் குற்றங்களைத் தெரிவித்துக் கொள்வது என்று தொடங்கி, அன்றையதினமே பிரிந்து, வாழ்க்கையின் இறுதி நாள்மட்டும் ஒருவரையொருவர் கண்டு பேசாமலும் முகாலோகனம் செய்யாமலும் இருந்தார்கள் என்ற கதையைக் காட்டிலும் உண்மையான கதை உண்டோ? ஆயினும் இதை மட்டும் ஞாபகப்படுத்திக் கொள்ளும்; எல்லாக் கள்ள நடத்தையையும் உலகம் ஒரே பெயராலேயே பச்சை பச்சையாய்க் குறிப்பிடுவதில்லை;

'இயற்கை யறிவு' என்றும், 'யுக்தி' என்றும், 'நாகரிகம்' என்றும், 'மரியாதை' என்றும், 'உபச்சாரம்' என்றும், 'பிறர் மனம் நோவாதவாறு நடக்கும் நன்னடத்தை' என்றும், 'பிறர் வேலையில் தலையிடாமை' என்றும், மழுப்புகின்ற பெயர்களை இட்டுப் பசப்புகின்றது. இத்தனை கள்ளாசாரமும் நடிப்புங் கொண்ட இவ்வுலகிலுமே என் கிழப்பாட்டனாரின் நிலமை எவ்வளவு கேவலமாய்விட்டது! இந்த அகன்ற பூமண்டலத்திலேயுள்ள எந்தப் பொருளின்மீதும் விருப்போ வெறுப்போ இல்லாத துறவியாகிவிட்டார். தம்முடைய மூன்றாந் தாரத்தின் வயிற்றிலே பிறந்த அருமை மகனும், இந்த ஸங்கடங்களுக்கு எல்லாம் காரணபூதனான கிறிஸ்தவச் சாணானும் இனி அவருக்கு ஸமமானவர்களே. ஒன்றேயாகி எங்கும் நிறைந்த பரஞ்சோதியின் சுடரே அவ்விருவருள்ளும் ஒளிர்வது; அச்சுடரொளியை மட்டுமே அவர் கவனித்தற்கு உரியவர்; மனைவி, மகன், பேரன், உடன்பிறந்தார், சுற்றத்தார், நண்பர், பகைவர், உற்றார் உறவினர், மற்று அயலார் ஆகிய அனைவருமே அஞ்ஞான அலைகடலிலே சுழன்று தத்தளிக்கும் மரக்கட்டைகள் போன்றவர்கள் என்றும், அவர்கள் அனைவருமே தம்முடைய மாறுபடாத கருணைக்கும் அன்பிற்கும் உரியவர்களாய்த் தம்முடைய உதவியைப் பெறத்தக்கவர்கள் என்றும் கொள்ள வேண்டியது. மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்று கரணங்களையும் அடக்கியவராதல் வேண்டும். ஆனால், உண்மையில், தம்முடன் பிறந்த தங்கைமாரைப் பிடரியைப் பிடித்து வெளியே தள்ளியபோதும், ராஜ பாட்டையிலே நடந்து செல்லும் உரிமையை வற்புறுத்திய துணிவைத் தன்னை யொத்த மானிடனிடம் காணச் சகியாமல் அவனைக் கட்டிவைத்து அடிக்கச் செய்தபோதும் இருந்ததைவிட இப்பொழுது ஒரு சிறிதேனும் மாறுபட்டு விட்டாரோ? அப்படி யொன்றும் அற்புதம் நிகழவில்லை. முன்போலவே, இப்பொழுதும் அவர் இன்ப துன்பங்களிலும் விருப்பு வெறுப்புகளிலும் கள்ளங் கபடுகளிலும் உழன்று கொண்டிருந்தார். லௌகிக விஷயங்களை விட்டு விடுவோம். பழைய சிவபக்தியும் விஷ்ணுத் துவேஷமும் காரணமற்ற விஷ்ணு நிந்தையும் குறைந்தபாடில்லை. இப்படியிருந்தும், வெளி வேஷத்தை விட்டுவிடக் கூடாது

என்று மெய்ப்பாக நடந்து கொண்டார். வாசகரே! 'மெய்ப்பாக நடந்து கொள்ளுதல்' என்னும் வார்த்தை யொன்றே போதாதா பொய் நடிப்பாலேயே ஜன ஸமூஹம் நிலை பெற்றிருக்கின்றது என்பதை ருஜுப்படுத் துவதற்கு? எனவே, அவருக்கு என்று வீட்டிலே ஒரு தனி அறை ஸௌகரியமாக அமைத்துக் கொடுக்கப்பட்டது. அங்கே, வெளியார் வந்தால் தத்துவ விசாரமும் வேதாந்த உபதேசங்களும் நடைபெறும்; வேற்று மனுஷ்யர்கள் இல்லாதபோது, மனைவி மக்களுடன் பேசிக்கொண்டோ, தங்கைமாருடன் சண்டை யிட்டுக் கொண்டோ, அல்லது பழைய நாட்களை நினைத்துப் பார்த்து அவர்களோடு வருத்தமுற்றோ, என் தகப்பனா ரோடு குடும்ப விஷயங்களைப் பற்றி அளவளாவிக் கொண்டே இருப்பார்.

*நான்காவது அதிகாரம்*

# கல்வி கற்பதில் நேர்ந்த கஷ்டங்களையும் 'கோதண்ட'த்தையும் விவரிப்பது

**ப**ள்ளிக்கூடம் என்றால், பெஞ்சுகள் மேஜை நாற்காலி கள், எழுது பலகைகள் ஸ்லேட்டுகள், புஸ்தகங்கள், காகிதம், பேனா பென்ஸில்கள், சுற்றும் வெள்ளையடித்த சுவர்கள் காறைத்தரை முதலியவைகளே நம்கண் முன் தோன்றும். இந்நாளிலே பழைய காலத்துப் பள்ளிக்கூடம் ஒன்றை வர்ணிப்பது பலருக்கு விநோதமாகவே இருக்கும். நான் அப்படிப்பட்டதோர் பழம் பள்ளிக்கூடத்திலே வாசிக்கத் தொடங்கினேன்; ஆதலால், அதனை இங்கு நான் வர்ணிப்பது பொருத்தமாயிருக்கும் அன்றோ!

எங்களூர்க் குளத்தினின்றும் வயல்களுக்குப் பாய்ந் தோடும் வாய்க்காலின் கீழ்க் கரையோரமாக இருந்தது அந்தப் பள்ளிக்கூடம்; இருபதடி நீளமும் பதினைந்து அடி அகலமுங் கொண்ட ஒரே அறை; அதற்கு மூன்று புறமும் ஆளுயரத்திற்கு மண் சுவர்; முன் புறம் அடைப்பு ஒன்றும் இல்லை. காட்டுமரச் சட்டங்களாலும் பனங்கட்டை

களாலும் அமைத்த மேற்கூரை பனையோலையால் வேயப்பட்டிருந்தது. காலகதியில் அங்கங்கே கூரை பிரிந்து சூரிய வெளிச்சம் தாராளமாக உள்ளே விழுந்தது. ஊர்ப் பொதுவிலே கட்டிய கட்டிடமாதலால், சுவர்களும் கூரையும் இடிந்து சரிந்து, தில்லைக் கிராமத்தாராக விளங்கப் போகிற குழந்தைகள் மீது விழுந்து விடும் என்ற நிலைமைக்கு வந்த பிறகே, அவ்வூரார் ஊர்ப் பணத்திலிருந்து மராமத்துப் பார்க்கும்படி செய்வார்கள். யார் விரும்பினும் தாராளமாய் உள்ளே செல்லும்படியாக முன்புறச் சுவரின்றித் திறந்திருப் பினும், ஆடு மாடு கழுதை முதலியவை இராக்காலத்தில் அங்கே புகுந்து தியானத்தில் ஆழ்வது வழக்கமாயினும், இருபிறப்பாளருக்கும் மேல்வகுப்புச் 'சூத்திரர்'களுக்கும் அல்லாமல் மற்றைக் கீழ்ச்சாதியினர் யாருமே அங்கு உட்புகவொண்ணாதவாறு எஃகுக் கதவுகளால் அடை பட்டது போன்று இருந்தது. இத்தகைய பள்ளிக்கூடத்திற்கு நான் சென்ற நாட்களில் கடைசிநாள் நேர்ந்த முக்கிய சம்பவத்தைக் கூறுவேன். பள்ளிக்கூடத்திற்குள் புகும் பொழுதே மெழுகிய தரையினின்று எழும் சாணி நாற்றம் மூக்கைத் துளைக்கும்; அப்புறம், சுவர்களிலும் கூரையின் அடிப்புறத்திலும் எண்ணிலடங்காத சிலந்திக் கூண்டுகளும் தூசிப்படலங்களும் விசித்திரமாக அலங்கரிப்பது விளங் கும். மாணவர்களுள் சிறிது வயதானவர்கள் தினந்தோறும் தரையைப் பெருக்குவதும் வாரத்திற்கு இருமுறை சாணியிட்டுத் தரையை மெழுகுவதுமுண்டு. ஆனால் அவர்களும் சுவர்களைக் கவனிப்பதில்லை. தரையைச் சாணியால் மெழுகி எழுந்திருக்கும்போது சுவரிலே கையை ஊன்றிக்கொண்டு எழுந்திருப்பார்கள்; ஆகையால் அந்தச் சிறுபிள்ளைகளின் சாணிக்கைச் சுவடுகளால் நாலா பக்கங்களிலும் சுவர் அலங்கரிக்கப்பட்டிருக்கும். கோணலும் மாணலுமாய்க் கண்டபடி சுவர்களிலே அறைந்திருந்த மர ஆணிகளிலே ஓலைச்சுவடிகள் கொண்ட அசைத்தூக்குகள் பத்து இருபது தொங்கிக் கொண்டிருக்கும். பசுஞ்சாணியால் மெழுகி இருண்ட தரையிலே கூரையின் இடுக்குகளின் வழியே வரும் சூரிய ஒளி வீசுவதாலும் ஒருபுறம் பொடி மணல் பரப்பி யிருப்பதாலும், இடையிடையே வெள்ளை யாகத் தோன்றும்; கூரையின் சார்புகள் இரண்டையும்

பிணைத்து வலுப்படுவதற்காக நடுவிலே பனைமரக் கட்டை யொன்று குறுக்குவிட்டமாக எட்டடி உயரத்தில் இருந்தது; அந்த விட்டத்தின் மத்தியினின்றும் தடித்த குறுங்கயிறு ஒன்று தொங்கவிட்டிருந்தது.

எங்கள் ஆசிரியரின் பெயர் சுந்தரமையர்; ஆயினும், அவர் விகாரமாய்ப் பெருமூச்சு வாங்கும் ஸ்தூல சரீரமும் சிடுமூஞ்சியுமுடைய கிழவர். கால் நூற்றாண்டாக, அவர் எங்கள் ஊர்ச் சிறுவர்களுடைய புத்தியை வளர்த்து வந்தார்; அவருடைய மாணாக்கருள் இருவர் சர்க்காரில் உயர்ந்த பதவியை அடைந்திருந்தார்கள். அவர்களைப் பற்றிப் பேசும்போது எல்லாம் "அந்தக் கெட்டிக்காரப் பயல்கள்" என்றே சொல்வார்; தம்முடைய மதி நுட்பத்தையும் செல்வாக்கையும் நாங்கள் அதிசயிக்கும்படியாக அவர்களை யும் தம்மையும் பற்றிய பழங் கதைகளை எங்களுக்குச் சொல்வதில் அவருக்குப் பிரியம் அதிகம்; சில வருஷங்களாக அவருக்கு இழுப்பும் இருமலும் அதிகமாய் விட்டதால், மழைக்காலத்தில் அநேக நாள் எங்கள் விடுமுறை நாளாகும். என் வாழ்க்கையில் முக்கிய தினமாகக் குறிப்பிடப்பட்ட அந்த நாளின் முற்பகலிலே, சுந்தரமையர் திறந்த முன்புறத் தின் ஓரமாய், சுவரின்மீது சாய்ந்த வண்ணம், ஒரு பனந்த டுக்கின் மீது, அமர்ந்திருந்தார். அவரது வலப்புறத்திலே அவர் ஓச்சும் கைப் பிரம்பு தரையிலே சும்மா கிடந்தது. அவரோ கொட்டாவி விடுவதும் இருமுவதுமாக இருந்தார். பள்ளிக்கூடம் நிச்சப்தமாய் இருந்தது. புயலுக்கு முன்னுள்ள புழுக்கம்போல. கோவணம் மட்டும் கட்டிக்கொண்டிருந்த சின்னஞ்சிறு பையன்கள் நாலுபேர் தரையிலே தோண்டிக் குழியாக்கிய எழுத்து வடிவங்களின் மீது தங்கள் வலது ஆள்காட்டி விரல்களால் வரைந்து கொண்டே, தமிழ் எழுத்தையும் கிரந்த எழுத்தையும் கற்றுக் கொணடிருந் தார்கள். இப்படிக் குழிதோண்டித் தள்ளப்படுமாறு அந்த எழுத்து எல்லாம் என்ன குற்றம் செய்தனவோ? இந்தக் குழிகளிலே அழுத்தியதால் குழந்தைகளின் சிறு விரல்கள் குஷ்டம் பிடித்தவர்களின் விரல்களைப் போன்றிருந்தன; பேனா, காகிதம், மை, பனையோலை - ஒன்றுமே இல்லா மல், செலவின்றி 'காபி' எழுதும் முறை இது. வேறுசில பிள்ளைகள் பெருக்கல் வாய்ப்பாட்டை உருப்போட்டுக்

கொண்டிருந்தார்கள். ஒருவன் 'எட்டொன்பது எழுபத் திரண்டு' என்று மூன்று தரம் சொல்லிச் சந்தை தொடங்குவான். மற்றவர்கள் எல்லோரும் "ஒன்ப தொன்பது எண்பத்தொன்று" என்று மூன்று தடவை எதிர்ச்சந்தை கூறுவார்கள். 'மூன்று' என்பதில் ஏதோ ஸூக்ஷ்மம் இருக்க வேண்டும்; இல்லாவிட்டால் மூன்று தடவை சொல்வானேன்? இன்னும் சிலர் எழுத்தாணி பிடித்து ஓலையில் எழுதிக் கொண்டிருந்தார்கள். மேல் வகுப்புப் பிள்ளைகளாகிய நானும் சிலரும் தமிழ்ப் பாடல்களையும் ஸம்ஸ்கிருத சுலோகங்களையும் மனப் பாடஞ் செய்து கொண்டிருந்தோம். இதுவரை சொன்ன தெல்லாம், 'பிள்ளைகள் என்ன செய்து கொண்டிருப்ப தாகப் பாவனை செய்து கொண்டிருந்தார்கள்' என் பதையே; வாஸ்தவத்தில் வாத்தியார் எப்பொழுது சிறிது கண்ணயர்வார் என்று பார்த்துக் கொண்டிருந்த நாங்கள் அப்பொழுது என்ன செய்தோம் என்பது வேறு கதை. திடீரென்று பலமாக இருமியதால் விழித்துக்கொண்டு, கண்களைக் கசக்கிக் கொண்டே எழுந்திருந்து சுற்றிவந்து கைப் பிரம்பால் ஆளுக்கு ஒரு அடி பக்ஷபாத மின்றிக் கொடுத்தார். "பதினோரொன்பது தொண்ணூற் றொன்பது" என்று முன்னினும் உரத்த குரலிலே கூவினார்கள் 'பெருக்கல் வாய்ப்பாடு' சந்தை சொல்லும் வகுப்புப் பையன்கள்; எழுத்தாணிகள் ஓலைகளிலே வேகமாய் வரைந்தன; சுட்டு விரல்கள் அரிக் குழியில் அதிகமாய்த் தேய்ந்தன. அப்பால், வாத்தியார், மீண்டும் தம் இடத்திலே அமர்ந்து கண்ணயரத் தொடங்கினார். சிறிது நேரம் பொறுத்து, அவர் நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டு பிரம்புக் கையோடு 'கோவிந்தா!' என்று கூப்பிட்டார். நெடுங்காலப் பழக்கத்தால் அவர் விழித்துக் கொள்ளும் போதெல்லாம் அவர் கையானது பிரம்பை நாடுவதாயிற்று; 'கோவிந்தா' என்று அவர் விஷ்ணுவின் திருநாமத்தை ஸ்மரித்ததாகவே தோன்றிற்று. ஆனால் அவர் மீண்டும் என்னைப் பார்த்து, 'கோவிந்தா!' என்று கூப்பிடவே, நான் என் இடத்தை விட்டு அவர் முன்போய் நின்றேன். அவர் யாருக்கேனும் தனித்துப் பாடஞ் சொல்லிக் கொடுக்கும்போதும், பரீக்ஷை செய்யும்போதும், அவர் பிரம்புக்கு எட்டும் தூரத்தில் ஒரு

வட்டம் வரைவார்; அதற்குள் அந்தப் பையன் போய் நிற்க வேண்டும். அவர் விடை பெற்றே அதற்கு வெளியே போகலாம். நான் அந்த 'மந்திரச் சக்கிர'த்திற்குள் சென்று நின்றேன். தாம் கூப்பிட்டவுடன் வராத குற்றத்திற்காக என்னை இலேசாக ஒரு தட்டு பிரம்பினாலே தட்டியபின், 'விவேகமஞ்சரி'யினின்றும் முதனாள் எனக்குப் பாடமாகக் குறிப்பிடப்பட்ட பாடலை ஒப்புவிக்கும்படி சொன்னார். அதை நன்றாக நெட்டுருச் செய்திருந்தேனாகையால், உடனே,

ஆலகால விஷத்தையும் நம்பலாம்;
    ஆற்றையும் பெருங்காற்றையும் நம்பலாம்;
கோலமா மதயானையை நம்பலாம்;
    கொல்லும் வேங்கைப் புலியையும் நம்பலாம்;
காலனார் விடும் தூதரை நம்பலாம்;
    கள்ளர்வேடர் மறவரை நம்பலாம்;
சேலைகட்டிய மாதரை நம்பினால்
    தெருவில் நின்று தயங்கித் தவிப்பரே.

என்று ஒப்பித்தேன்.

மேற்சொன்ன விவேகமஞ்சரியிலுள்ள மலரைப் பற்றி எங்கள் சட்டாம்பிள்ளை எங்களிடம் தனிமையாய்க் கூறிய விசேஷ வுரையும் இங்கே குறிப்பிடத்தக்கது; ''சேலை கட்டிய மாதரை' என்று குறிப்பிட்டதால், 'புடைவைகளை உடுத்திக் கொள்ளும் குல ஸ்திரீகளையே குறிப்பிட்ட தாகும்; அவர்களைத்தான் நம்பலாகாது; ரவிக்கை பாவாடை தாவணிகள் இவற்றை அணிந்து கொள்ளும் வேசையரை நம்பலாம்!'' என்பது அவனுடைய வியாக்கியானம்.

எனக்கு அடுத்தாற்போல பரீக்ஷிக்கப்பட்ட பையன் மந்த புத்தியுடையவன்; அதனால் அவன் ஒப்பித்த பாடம், பிரப்பம்பழம் பூசைக் காப்பு முதலியவற்றோடு ஒப்பிக்கப் பட்டது. 'நீதிஸார'த்தினின்று அவன் ஒப்பித்த சுலோகத்தின் பொருள் இது: ''பிராம்மணனல்லாதவனுக்கு ஒருவன் தானஞ் செய்தால் அவன் மறுமையில் தானப் பொருளுக் குத் தக்க பலனை அடைவான்; பிறப்பிலே மட்டும் பிராம் மணனாய் இருப்பவனுக்குத் தானஞ் செய்தால், பலன் ஆயிரம் மடங்கு ஆகும்; வேதசாஸ்திர விற்பன்னனாய்

அவற்றின் விதிப்படி நடப்பவனுக்குத் தானஞ் செய்தால் தானப்பொருளின் மதிப்பைக் காட்டிலும் இத்தனை மடங்கு அதிகம் என்று மதிப்பிட முடியாத அளவு பெரும்பலனை அடைவான்.'' இத்தறுவாயில், எனக்கு வெளியே போய்ச் சற்று உலாவி வரலாம் என்று தோன்றிற்று. உபாத்தியாயர் முன் சென்று, இடது கையை மார்பின்மேலும் பாதங்களைச் சேர்த்தும் வைத்துக் கொண்டு, உடலைச் சிறிது முன்புறமாக வளைத்து வணக்கமாக நின்றுகொண்டு வலது கையை மட்டும் முழங்கைக்கு மேலே உயர்த்திச் சுட்டுவிரலை மட்டும் நீட்டி 'ஒன்றுக்குப் போகவேண்டும்' என்று தெரிவித்தேன். எனக்கப்புறம் பாடம் ஒப்பித்த பையனுக்குப் பிரப்பம் பழம் கொடுத்த அதிர்ச்சியிலே ஏற்பட்ட இருமலுக்கு முடிவு காணாததால், வாத்தியார் தலையை அசைத்ததையே வழக்கம்போல் எனக்கு அனுமதி தந்ததாகக் கொண்டு பள்ளிக்கூடத்திலிருந்து வெளியே குதித்தோடி விஷமஞ் செய்யத் தயாராகிவிட்டேன். இனிச் சொல்லப்போவதை வாசிப்பவர்கள், 'தாங்கள் பள்ளிப் பிள்ளைகளாக இருந்தபோது செய்த விஷமங்களையும் பாலிய தசைக்கே இந்த விஷமங்கள் இயல்பு என்பதையும் மறந்துவிடக் கூடாது' என்று வேண்டிக் கொள்கிறேன். ஓட்டாஞ்சல்லி களை எடுத்து, தவளை போடும்படி கால்வாய் நீரின் மீது மெல்ல வீசிக்கொண்டே உல்லாஸ மாகச் நடந்தேன். எங்கள் உபாத்தியாயருக்கு வேண்டிய வனான தவசித்தே வன் குத்தகைக்கு எடுத்திருந்த மாந்தோப்பு சிவன் கோயிலின் பக்கத்திலே யுள்ளது. 'அங்கே ஒருவரும் போகக்கூடாது, போனால் தோலை உரித்துவிடுவான்!'' என்று எங்களை எச்சரித்திருந்தார்கள். அந்தத் தோப்பின் பக்கத்தை அடைந்ததும் சுற்றுமுற்றும் பார்த்தேன். யாரையும் காணவில்லை. தாழ்ந்த மாமரத் திலே கொம்புகளாலே தாங்க முடியாதபடி கொத்துக் கொத்தாகக் காய்த்துத் தொங்கும் இனிய மாங்கனிகளைக் கல்லெறிந்து வீழ்த்துவது வாய்க்கால் ஜலத்திலே வெறுமனே தவளை போடுவதைவிட மிக எளிது என்றும், நல்ல பயன் தரக் கூடியது என்றும் கல்லெறிவதிலே கைதேர்ந்தவர்கள் அனைவரும் ஒப்புக்கொள்வார்கள். கையிலிருந்த ஓட்டுச் சில்லு விண்ணெனப் பறந்தது; மூன்று

மாங்கனிகள் திண்ணென விழுந்தன; நல்லவேளை வேலிக்கு வெளியே விழுந்தன என்று அவற்றை வாரிக்கொண்டு குளத்தங் கரைக்கு ஓடினேன். ஆனால் என்னிலும் வேகமாக ஓடவல்ல தவசித்தேவன், மரத்து மறைவிலிருந்து திடீரென்று கிளம்பி என்னைத் துரத்திக்கொண்டு வந்தான். இன்சுவை யறியாத குளத்திலே மாங்காய்களை எறிந்து விட்டு, மூச்சிழைக்கப் பள்ளிக்கூடத்தை நோக்கி ஓடிவந் தேன். என் பின்னாலேயே தவசித்தேவனும் வந்து விட்டான்; இதைக்கண்டு திகைத்துப் போன உபாத்தி யாயரைப் பார்த்து, அவன் "ஏன் சாமி! இதற்குத்தானா மாங்காயும் தேங்காயுமா உங்கள் வீட்டுக்கு அனுப்பித் தேன். சரிதான், என் முட்டாள் தனந்தான் அது. தவசி யாலே தன் சொத்தைக் காப்பாற்ற முடியாவிட்டால் வேறு யாராலே முடியும் என்கிறேன். சத்தியமாய், இனிமேல் இப்படி முட்டாள் தனமாய் இருக்க மாட்டேன். இனிமேல் யாரானாலும் சரி, என் தோப்பின் கிட்டே வருவதாக இருந்தால், வீட்டிலே சொல்லிக்கொண்டு ஒரே பயணமாக வரட்டும்; திருட்டுப் பயலை அந்த மரத்தடியிலேயே குழியைத் தோண்டி புதைத்து விடுகிறேன் பார்! இந்த நசுக்குணி கோவிந்தை யனா என் பழத்தைத் திருடுவது? உம்ம பாட்டனுக்கும் அப்பனுக்குமாக அல்லவா உம்மைச் சும்மா விட்டு விட்டேன்? இல்லாவிட்டால், கொசுவை நசுக்குவது போல நசுக்கி விடமாட்டேனா?" என்று கூச்சலிட்டான்.

இவ்வாறு யார் செய்த புண்ணியத்தினால் நான் உயிர் தப்பினேன் என்று தெரிவித்துவிட்டு மாந்தோட்டக்காரன் போய்விட்டான். ஆனால் அவன் பேச்சைக் கேட்டதும், எழுபது வயதுக்கு மேலாகிய எங்கள் கிழ வாத்தியாருக்கு எவ்வளவு கோபமும் பீதியும் எரிச்சலும் உண்டாயிற்று! கோபவெறியில் அவரால் நன்றாகப் பேசக்கூட முடிய வில்லை. தம் இடத்தை விட்டுச் சரேலென எழுந்து ஈவிரக்கமின்றி என்னைப் பிரம்பால் நையப் புடைத்து மற்றை மாணவர்களுக்கு எச்சரிக்கையாக என்னைக் கோதண் டம் போடுவது என்று தீர்மானித்தார். அப் பொழுது அவர் வாயினின்று வெளிவந்த அசப்பியப் பேச்சுக்களையும் வசவுகளையும் இங்கே நான் எடுத்துரைக்க இயலாது.

'கோதண்டம்' என்றால் வடமொழியில் 'வில்' என்று பொருள்; தமிழில், 'அரசன் விதிக்கும் தண்டனை' என்று பொருள். பள்ளிக்கூட பரிபாஷையில் "தண்டனைகளுக்கு எல்லாம் தலைமையான தண்டனை"யாகக் கருதப்படும் ஒருவகைத் தண்டனையின் பெயர். நான் இதைப்பற்றி அடிக்கடி கேள்விப்பட்டதுண்டு. ஆனால் எவரையும் கோதண்டம் போட்டதை நான் முன்னால் பார்த்ததில்லை. வாத்தியார் உத்தரவிட்டதும், சட்டாம்பிள்ளை தன் அதிகாரத் தோரணையில் கொடுமையையும் பரபரப்பையும் காட்டிக்கொண்டு உரிய ஏற்பாடுகளைச் செய்யலானான். பள்ளிக்கூட அறையிலே குறுக்கு விட்டத்திலிருந்து தடித்த கயிறு ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது என்று சொல்லி யிருக்கிறேன் அல்லவா? அந்தக் கயிற்றின் கீழ் மணலைக் குவித்து அதன்மீது எல்லோருடைய எழுத்தாணிகளும் கூர்மேலாக நட்டு வைக்கப்பட்டன. இப்படி எழுத்தாணிகளை நடுவதைக் காட்டிலும் மிளகாய்ப் பழங்களைத் தீயிலிட்டுக் கமறும்படி செய்யும் வேறொரு வகைக் கோதண்டம் போடலாமே என்று சட்டாம்பிள்ளை சொன்னான். ஆனால் வாத்தியார் இருமல் நோயாளி ஆதலால், அது வேண்டவே வேண்டாம் என்றார். அடி முழுவதும் என் உடம்பிலே விழவேண்டும் என்று என அரை வேஷ்டியை இடுப்புக்கு மேலே சுருட்டிக் கட்டினார்கள். என்னோடு ஒத்த பையன்கள் மூன்று பேர் என்னைத் தூக்கிப் பிடித்து விட்டத்துக் கயிற்றை இரண்டு கையாலும் கெட்டியாகப் பற்றிக்கொள்ளும்படி சொல்லி விட்டு அகன்றார்கள். "கயிற்றை விடாதே! கை நழுவினால் எழுத்தாணிகளின் மேல் விழுவாய்" என்று எச்சரித்தனர். அப்புறம் அக்கொடிய மிருகம் வெறிகொண்டு பாய்ந்து வந்து என்னைப் பிரம்பால் அடித்தது. 'திண், திண்' என்று விழுந்த பிரம்படி என் சதையைக் கிழித்தெறிந்தது. உடலெல்லாம் ஒரே எரிச்சல்; விட்டக்கயிறு வேறு என் மெல்லிய கைகளை அறுத்தது. வலி தாங்காமல் வெறி பிடித்த காளைமாடுபோலக் கதறினேன்; ஒன்பதாவது அடி என் மேல் விழுந்ததும் நான் கீழே விழுந்தேன். என் இடது காலில் எழுத்தாணி பாயவே எனக்கு மூர்ச்சை போட்டுவிட்டது.

*ஐந்தாவது அதிகாரம்*

## ஊர் மஹாசபையின் கூட்டம் ஒன்றை விவரிப்பது

**ஊ**ர்ப் பள்ளிக்கூட வாத்தியாரின் சம்பளம் மாணவர்களின் தந்தையரால் அறுவடைக் காலத்திலே களத்திலே நெல்லாகக் கொடுக்கப்படும். இதைத் தவிர, நெடுங்கால வழக்கமாய், சனி எண்ணெய், மிளகாய்ப்பழம், அக்ஷராப் பியாஸ காலத்தில் புதுவேஷ்டி, தக்ஷணை, அரிசி, காய்கறி சாமான், மாணவர் உள்ள வீடுகளில் நடக்கும் விசேஷங்களுக்கு எல்லாம் விருந்துண்ண அழைப்பு முதலிய சுதந்திரங்களும் வருமான வகைகளும் உண்டு. ஆதலால், ஊரார் அனைவரோடும் அவர் சினேகமாய்ப் பழக வேண்டியவர்; தில்லையின் தெளர்ப்பாக்கியத்தினால் அவ்வூர் வாத்தியார் ஸுமுகராக இல்லாமல் சிடுமுஞ்சியாக இருந்தார். பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டிற்கு என்னைக் கட்டிலின் மீது கிடத்தியே கொண்டுபோக வேண்டியதாயிற்று. அதன்பிறகு நான் அந்தப் பள்ளிக்கூடத்தில் அடியெடுத்து வைக்கவில்லை. என்னை அவ்வாறு மிருகத் தனமாய்ச் சிக்ஷித்ததற்காக வாத்தியாரைத் தண்டிப்பது என்று தீர்மானிப்பதற்காக, துறவியாக இருந்த என் பாட்டனாரின் ஆலோசனையைப் பெற விரும்பி எங்கள் வீட்டு வாசலிலேயே ஊர் மஹாஸபை கூடிற்று. என் காலிலுள்ள புண் அப்பொழுது குணமாய்க் கொண்டிருந்தது. வீட்டின் முன்னறையிலிருந்து கொண்டு என் பொருட்டுத் தான் இக் கூட்டம் கூட்டப்பட்டது என்ற கர்வத்துடனும் குதூகலத்துடனும் நடவடிக்கைகளைக் கவனித்துக் கொண்டிருந்தேன்.

மஹாஸபையிலே பிராம்மணர் 18 பேரும் மற்றவர் 7 பேருமாக மொத்தம் 25 பேர். அவர்களை ஒன்று சேர்க்க வெகு நேரமாகிவிட்டது. பலருக்கு ஆளனுப்ப வேண்டியதாயிற்று. அதனால் பிற்பகல் மூன்று மணிக்குக் கூடுவதென்று ஏற்பாடாயிருந்தும் இருபது பேர் கூடுமுன் கிட்டத்தட்ட மணி ஐந்தாகிவிட்டது.

சிதம்பரத்திலே கம்பர் தமது இராமாயணத்தை அரங்கேற்றுவதற்குப் புலவர்களை யெல்லாம் ஒன்றுசேர்க்க

முயன்றும் பயன்படாமல், அவர்களில் ஒருவனுடைய மகன் இறந்த சாவுக்கு அவர்கள் ஒன்று கூடியபோது அவ் விடத்திற்குத் தமது இராமாயணத்தையும் எடுத்துக் கொண்டு போனார் என்னும் கதை எனக்கு ஞாபகத்திற்கு வந்தது. கூடிய ஸபையோரில் பிராம்மணர்கள் எங்கள் வீட்டுத் திண்ணையிலும் மற்றவர் கீழே பந்தலிலும் அமர்ந்து எங்கள் செலவிலே கொண்டுவந்து கொடுக்கப் பட்ட வெற்றிலையை மென்றுகொண்டும் புகையிலையை யும் மூக்குப் பொடியையும் போட்டுக் கொண்டும் இருந்தார்கள். என் பாட்டனார் பேச ஆரம்பித்தார். "நாம் இன்று இங்கு கூடியிருப்பது இந்த வீட்டுக் குழந்தையை வாத்தியார் சுந்தரமையர் குரூரமாய்த் தண்டித்ததற்காக அவருக்கு தக்க சிக்ஷை விதிக்கும் பொருட்டே. இதற்குமுன் ஒரு தடவை அவருக்கு ஒரு ரூபாய் அபராதம் போட்டிருந் தும் அவருக்குப் புத்தி வரவில்லை. இனிமேல், அவர் பள்ளிக்கூடத்திற்கு இந்த வீட்டுக் குழந்தையை அனுப்பப் போவதில்லை. (இதைக் கேட்டதும் எனக்குப் பரம ஆனந்தமாய் இருந்தது.) ஆனாலும் மற்றைப் பையன் களுக்கு இவ்வாறு நேராதபடி தக்க ஏற்பாடு செய்ய வேண்டும். அவரை வேலையினின்று நீக்கிவிடுவதே எனக்கு உசிதமாகத் தோன்றுகிறது'' என்று சொன்னார். இதைத் தெரிவிக்குமுன், பீடிகையாக என் பாட்டனார் தமக்கும் உலக வியவகாரங்களுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை என்றும், பூர்வாசிரமத்திலே தம் ஊரைச் சேர்ந்தவர் களின் கூட்டத்திலே அவர்கள் நன்மையைக் கருதியே தாம் பேச நேர்ந்தது என்றும், தமக்கு விருப்போ வெறுப்போ சாதக பாதகங்களோ கிடையாது என்றும் கூறினார்.

இதைக் கேட்டதும், வாத்தியார் சுந்தரமையர் இப்படி நடந்து கொண்டதற்கு மிகவும் வருந்துவதாகவும் இனிமேல் ஒழுங்காக நடந்து கொள்வதாகப் பிரமாணஞ் செய்து கொடுப்பதாகவும் கூறி, தாம் இவ்வேலையிலே சுமார் முப்பது ஆண்டுகள் உழைத்திருப்பதையும், அங்கு கூடியவர்களிலே பலர் தம்மிடம் படித்தவர்கள் என்பதை யும் எடுத்துக்காட்டி, களவாடுவது (இது என் பிள்ளைக் குறும்புக்கு இவர் கொடுத்த பெயர்) மகா பாதகங்களில் ஒன்றாகையால் இந்த துர்க்குணத்தை முளையிலேயே

கிள்ளி யெறியவேண்டிய அவசியத்தையும் பிரஸ்தா பித்தார். முடிவாக, ஸபையோர் கருணை கூர்ந்து தம்மை மன்னிக்க வேண்டுமென்றும் தம்மை இந்த வயோதிக தசையில் வேலையை விட்டு நீக்கினால் குடும்பத்துடன் தாம் ஸபையோர் வீட்டு வாசலிலேயே பட்டினி கிடந்து சாகவேண்டியதாகும் என்றும் தெரிவித்தார். ஸ்பையி லிருந்தவருள் ஒருவர் வாத்தியாரை உடனே நீக்கிவிட வேண்டுமென்றும், அடுத்த ஊரிலே இவரினும் அதிகத் திறமை வாய்ந்தவர் இருக்கிறார் என்றும், அவரை நியமிக்கலாம் என்றும் வற்புறுத்தினார். மற்றொருவர், "அடியாத மாடு படியாது" என்றும், "அடி உதவுவது போல் அண்ணன் தம்பி உதவமாட்டான்" என்றும், அடித்துத் தான் குழந்தைகளை வசக்க வேண்டும் என்றும், மூன்று தடவை தம்மைக் கோதண்டம் போட்டார்கள் என்றும் சொன்னார். "அப்படியும் திருந்தினதாகக் காணோமே!" என்று அருகிலிருந்தவர்கள் மெல்லப் பரிகசிக்கவே, எல்லோரும் கொல்லென்று சிரித்தார்கள். முடிவில், வாத்தி யாருக்கு ஐந்து ரூபாய் அபராதம் விதித்துப் பிள்ளைகளிடம் நேராக நடந்து கொள்ள வேண்டும் என்று எச்சரிக்கையும் செய்தார்கள். இவ்வளவு சிரமப்பட்டு ஸபை கூடியிருந்ததால், ஒரு மாதத்திற்கு முன் ஒரு பிராம்மணரு டைய வீட்டிலே நேர்ந்த கன்னக் களவும் விசாரணைக்கு வந்தது. களவு நடந்தவுடன் போலிஸாருக்குத் தெரிவிக்கப் பட்டு, அவர்கள் விசாரித்தபோது, தாங்கள் விரும்பியவாறு பிராதுக்காரன் உதவ முன்வரவில்லை யாதலால், கள்வைத் துலக்கும் வழியறியாமல், களவுப் பிராதே பொய்ப்பிராது என்றும், பிராதுக்காரனுடைய இரண்டு மனைவியருக்கும் தம்பிக்குமுள்ள சச்சரவின் காரணமாகப் பிராது சிருஷ்டிக்கப் பட்டதுஎன்றும், பிராதைத் தள்ளுபடி செய்யலாம் என்று மேலதிகாரிக்கு எழுதிவிட்டார்கள். ஆயினும், அது இப்பொழுது ஊர்ச்சபையின் முன்னர் விசாரிக்கப்பட்டது. களவு போனது மெய்யென்று ஸபையாருக்குத் தெரியும். ஊர்க்காவல் பார்க்கும் மறவரின் தலைவர்கள் நால்வரையும் களவு - சொத்தின் கிரயம் ரூபாய் நானூற்றையும் செலுத்தும்படி கேட்டார்கள். அதற்கு அவர்கள், களவை முதலிலே போலீஸாரிடம் தெரியப்படுத்தியதால்

தங்களுக்கு வீண் தொந்தரவும் பொருட்செலவும் ஏற்பட்டன என்றும், களவாண்டவர்கள் தூரதேசத்திலிருந்து வந்த கொள்ளைக்காரர்கள் ஆதலால் தாங்கள் ஜவாப் தாரிகள் அல்லர் என்றும் ஆக்ஷேபித்தார்கள். இந்த ஆக்ஷேபணையை நியாயந்தான் என்று ஒப்புக்கொண்டு, ஊர்ச்சபையார், களவு கொடுத்தவன் தங்களிடம் முறையிடாமல் போலிஸாரிடம் போன குற்றத்திற்காக ரூபாய் இருபத்தைந்து அபராதஞ் செலுத்தவேண்டும் என்று உத்திரவிட்டனர்; பிறகு, இதனாலே காவலாளர் உத்திரவாதஞ் செய்யும் கடமை நீங்காது என்றும் தீர்மானித்தனர். களவுபோன நகைகளின் மதிப்பைப் பற்றி வெகு நேரம் வாதம் நடந்தது. முடிவாக, ரூபாய் முந்நூறு என்று நிச்சயித்து ஒரு வாரத்திற்குள் செலுத்த வேண்டும் என்று செய்த தீர்மானத்தைக் காவற்காரர்களும் ஒப்புக்கொண்டார்கள்; ஸபையும் கலைந்தது.

ஆறாவது அதிகாரம்

# சில ஜனன மரணங்களையும் விவாகம் முதலிய சம்பவங்களையும் விவரிப்பது

பக்கத்து ஊரிலே கிறிஸ்தவப் பாதரிகள் நடத்திவந்த ஆங்கிலப் பள்ளிக்கூடத்திற்கு என்னை அனுப்பலாம் என்று என் தகப்பனார் கூறிய யோசனையை என் பாட்ட னார் அங்கீகரியாததால், நான் என் பாட்டனாரிடமே ஸம்ஸ்கிருதம் படிக்கத் தொடங்கினேன். அந்த ஆண்டி லேயே என் உபநயனமும் நடந்தது. அதனை அடுத்து என் ஒன்றுவிட்ட சிற்றப்பாவான மகாதேவ தீக்ஷிதரின் விவாகமும் நடந்தது. அப்பொழுது அவருக்குப் பதினான்கு வயதுதான்; அதற்குள் அவர் ஸம்ஸ்கிருதம் நன்றாக வாசித்திருந்தார். அவருக்கு வாழ்க்கைப்பட்ட அம்மங் காருக்கு அப்பொழுது வயது நான்கு. இந்தக் கல்யாணம் நடந்த சில நாட்களுக்குள் சேஷிப்பாட்டியும் அழியும் உடலை நீத்துச் சென்றாள். அவள் உடன்பிறந்தாரும்

அப்புறம் அதிக நாட்கள் ஜீவித்திருக்கவில்லை. அடுத்த வருஷமே அவர் சமாதியானார். அவர் இறந்து ஒரு மாதம் ஆவதற்குள் வேதம்பாள் குடும்ப விபாகம் ஆகவேண்டும் என்று நிர்ப்பந்தித்தாள். என் தகப்பனாருக்கு சம்மதம் இல்லை. இருநூறு வருஷங்களுக்கு மேலாக அவிபக்த மாகவே வந்த சொத்தை விபாகஞ் செய்தால், சொத்து நாசமாய்விடும் என்றும், குடும்பத்திற்கு ஊரிலிருந்த செல்வாக்குக் குறைந்துபோம் என்றும் ஆக்ஷேபணை செய்து பார்த்தார். தாம் அவளுக்குப் பிள்ளை முறையான படியால் அப்பாவிடம் நடந்து கொண்டபடியே அவளிடம் நடந்து கொள்வதாகவும் எவ்விஷயத்திலும் அவளுடைய இஷ்டப் பிரகாரம் நடப்பதாகவும் சொன்னார். ஆனால் அவளும் அவள் ஏவியபடி நடக்கும் அவள் பிள்ளையும் இவர் சொன்னதற்குச் செவி கொடாமல் பாக வியாச்சியம் தொடுப்பதாகப் பயமுறுத்தினார்கள்; எனவே, பரம்பரைக் குடும்பச் சொத்து எல்லாம் பாகஞ் செய்யப்பட்டது. வழக்கத்தை அனுசரித்து எங்கள் பழைய வீடு இளைய பிள்ளையின் பாகத்திற்குக் கொடுக்கப்பட்டது. அதனால், நாங்கள் இதுவரை வாழ்ந்த வீட்டை விட்டு விட்டு, புது வீடு கட்டியாகும்வரை வேறொரு வாடகை வீட்டிலே குடியிருக்க வேண்டியதாயிற்று. இதுவே, மற்றெல்லா வற்றைக் காட்டிலும் எங்களுக்கு அதிகத் துன்பத்தை விளைவித்தது. அப்பொழுதுதான் என் தங்கை பிறந்திருந்த தால், இத்துன்பம் அதிகப்பட்டது. வேதம்பாள் விதவை என்றும், அவள் மகன் மைனர் என்றும், சொத்துக்களைப் பாகஞ் செய்யும்போது ஒவ்வொரு விஷயத்திலும் அவர்கள் இஷ்டப்படியே என் தந்தையார் நடந்து கொண்டார். இவ்வாறு இவர் நடந்துகொண்ட தாராளத் தன்மையைப் பிற்காலத்திலேதான் நான் முற்றும் உணர்ந்தேன். அவர் பால்யத்திலே ஆசையோடு பராமரித்து வந்த வயல்களும் தோட்டங்களும் தம்முடைய பாகத்திலே விழாமல் அவர்களுக்கு உரியவையாகிப் பராமரிப்பின்றி வளங்குன்றி யதை நினைத்து நினைத்து இவர் பிற்காலத்திலே அடிக்கடி என்னோடு சொல்லி வருத்தப்படுவார். நாணிப்பாட்டி என் தகப்பனார் பங்கில் விழுந்தாள் என்று சொல்ல வேண்டுமா? வேதம்பாளை விட்டுப் பிரிந்ததும், அவள் காட்டிய மனக்

கசப்பும் துடுக்குப் பேச்சும் சாகசக் காரியங்களும் எல்லாம் மறைந்து போயின. இயற்கையில் அவள் எவ்வளவு நல்ல மனமும் சாந்த சுபாவமும் உடையவள் என்பது எனக்குப் புலப்பட்டது. அதி சீக்கிரத்திலே, அவள் என் பெற்றோர்க் குப் பெற்ற தாயினும் அதிகமாகிவிட்டாள்.

எங்கள் குடும்பத்திலே திடுமென இச் சம்பவங்கள் நிகழவே என் படிப்பு முறையும் மாறிவிட்டது. என்னை என் தந்தையார் ஆங்கிலப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பினார். ஆங்கிலச் சொற்களின் உச்சரிப்பிலேயுள்ள வரம்பற்ற வித்தியாசங்களும் ஒழுங்கின்மையையும் எனக்கு ஆச்சரியத்தை விளைவித்தன. வேதம்பாளும் தன் பிள்ளையை அதே பள்ளிக்கூடத்திற்கு அனுப்பினாள். ஆங்கில எழுத்துக்களைக் கற்றுக்கொண்ட பின், நாங்கள் முதலிலே கற்ற சொற்கள் know, go, to, so, put, cut என்பவை. அவை எங்களைத் திகைப்புறச் செய்தன. ஸம்ஸ்கிரு தத்தைக் கற்றுத் தேர்ந்த என் சிற்றப்பா ஆங்கிலம் நாகரிகமற்றவர்களின் பாஷை என்றும், அதைக் கற்றுத் தேர்ச்சியடைவதற்கு அபாரமான ஞாபக சக்தி வேண்டும் என்றும் சொன்னார். ஆனாலும், என்னிலும் மூத்தவராயும் கற்றுத் தேர்ந்த புத்தியுடையவராயும் இருந்ததால், அவர் படிப்பில் முன்னேறி மூன்று வருஷத்திலே மேற்படிப் பிற்குத் தம் மாமனாரின் ஊரிலுள்ள உயர்தரப் பள்ளிக் கூடத்திற்குச் சென்றுவிட்டார். நான் ஆங்கிலம் கற்கத் தொடங்கிய மூன்றாம் வருஷத்திலே ஒருவர் எனக்குப் பெண் கொடுக்க முன்வந்தார். பெண் வீட்டார் பணக் காரரும் செல்வாக்குமுடையவரு மாயிருந்ததால் என் தகப்பனாரும் சம்மதித்தார். ஆகவே, என் விவாகம் ஒழுங்காக நடைபெற்றது. என் மனைவி ஐந்து வயதுச் சிறுமி. கல்யாண காலத்திலே நந்தத வேடிக்கை விநோதங் கள் எல்லாம் எனக்கு நிரம்பச் சந்தோஷத்தை அளித்தன. அப்பொழுது நான் உச்சரித்த மந்திரங்களின் அர்த்தமோ செய்த சடங்குகளின் கருத்தோ எனக்கு விளங்கவில்லை என்பதும் உண்மையே; ஆனாலும் உபநயனத்தின் போதும் அப்படித்தானே; நாளும் முச்சந்தியும் தவறாது நான் சிரத்தையோடு செய்துவந்த சந்தியாவந்தன மந்திரங் களின் அர்த்தமும் எனக்குத் தெரியாதே. வாஸ்தவத்திலே

இவற்றைப் பற்றியெல்லாம் நான் நினைக்கவேயில்லை. "விவாகத்தின் தாத்பர்யம் என்ன?" "மணவாளனின் பொறுப் புகள் யாவை?" என்பதைப் பற்றி அறிய முய வில்லை. நானும் என் பெண்டாட்டியும் குழந்தைகளாய் இருந்ததால், எங்களை வைத்து நடத்திய விருந்துகள், நலுங்கு முதலிய வேடிக்கைகள், ஊர்வலம் இவை யெல்லாம் எங்களுக்கு மகிழ்ச்சியை அளித்தன. என் மனைவி என்னைக் கண்டு பயப்படுவதும், வெட்கியோடு வதும் எனக்கு வேடிக்கையா யிருந்தது. என் தோழர்கள் என் மனைவி ஓடுவதைக் காட்டிப் பரிகசித்து, அவளைப் பிடித்து என்னிடம் இழுத்துக் கொண்டு வருவார்கள்; ஆனால், ஒவ்வொரு தடவையும் அவள் ஓடிப் போவதைப் பார்த்ததும், அந்தத் தோழர்கள் மதிப்பிலும் என் மதிப்பிலுமே நான் சற்று உயர்ந்து காணப்பட்டேன். மாப்பிள்ளையாய்ப் புதுவேஷ்டி கட்டிக்கொண்டும் நகைகளைப் போட்டுக்கொண்டும் எல்லோரும் தாங்கிக் கொண்டாடும்படி இருப்பது, உண்மையில், ஆனந்தமே. கல்யாணமாகி ஆறாம் மாதம் வரை, க்ஷவரஞ் செய்து கொள்ளாமல் தலை வளர்த்ததில் நான் கர்வங் கொண்டேன். பெண்களைப் போல வகிடு எடுத்து இருபுறமும் தலை மயிரை வாரிக்கொண்டு, என் அழகு அதிகரித்தது என்று எண்ணினேன். கல்யாணமான பின், ஒரு வருஷம் முழுவதும் எத்தனை விசேஷங்கள், எத்தனை புது வேஷ்டி, எத்தனை நகைகள், எத்தனை சீர் வரிசைகள்! இவை யெல்லாம் என் படிப்பிற்கு இடையூறாயின; அதனா லேயே, என் ஆனந்தம் அதிகப்பட்டதாக எண்ணினேன். ஆனால் வருஷாந்தரப் பரீட்சையிலே நான் தேறவில்லை; அதனால் என்னை மேல் வகுப்பிற்கு உயர்த்த மாட்டேன் என்றார்கள். நான் அதிசீக்கிரத்தில் படியாத பாடங்களைப் படித்துச் சரியாகிவிடுவேன் என்று என் தகப்பனார் உறுதி கூறியும் பயனில்லாமற் போயிற்று. இதனாலும், வாடகை வீடு வசதியாக இல்லாததாலும், புது வீடு இன்னும் கட்டி முடியாததாலும், 'மூங்கிலூரிலே குடியிருந்து அங்குள்ள கலாசாலையிலே நான் பி.ஏ. பரீக்ஷை கொடுக்கும் வரை யாதொரு இடையூறுமின்றி ஒழுங்காகக் கல்வி பயில வேண்டும்' என்று நிச்சயித்து என் தகப்பனார் தாத்காலி

கமாக அவ் வூரிலே குடித்தனம் போட்டார். இவ்வாறு எங்கள் குடும்பத்திலே நேர்ந்த பல மாறுதல்களையும் கூறும் இந்த அதிகாரத்திலேயே என் விவாகம் எப்படி முடிந்தது என்பதையும் கூறுவது பொருத்தமே. விவாகமாகி இரண்டு வருஷத்திற்குள் என் மனைவி வைசூரி கண்டு இறந்தாள் என்று நாங்கள் துன்புறும்படி யாயிற்று.

ஏழாவது அதிகாரம்

## நான் பிரவேசப் பரீக்ஷையில் தேர்ச்சி பெற்றதையும், நாட்டியம் பார்த்ததையும் கூறுவது

எனது கல்விப் பயிற்சியைப் பற்றிப் படிப்படியாய் விவரித்துக்கூற எனக்குப் பிடிக்கவில்லை. வீட்டிலே பாடஞ் சொல்லிக் கொடுப்பதற்கு இரண்டு வாத்தியார்களை என் தந்தை நியமித்திருந்தார். அவர்கள் திறமையோடு சொல்லிக் கொடுத்ததால், பதினைந்தாவது வயதிலே நான் பிரவேசப் பரீக்ஷையிலே தேர்ச்சி பெற்றேன். அதுவரை எனக்குப் பள்ளிக்கூட உபாத்தியாயர்களாகவும் சகபாடிகளாகவும் இருந்தவர்களைப் பற்றி அதிகம் சொல்ல வேண்டியதில்லை. ஒரு வாத்தியாரைப் பற்றி எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. அவர் வேளாளரா யிராவிட்டால் 'கோதண்ட' கீர்த்தி பெற்ற சுந்தரமையருக்கு அவர் நெருங்கிய பந்துவே என்று பிரமாணஞ் செய்து கொடுத்திருப்பேன். அவர் மாணவர்களை 'மாடே!' 'எருமையே!' என்று செல்லப் பெயரிட்டுக் கூப்பிடுவது வழக்கம்; மாணவர்களை அவர் தண்டிக்கும் முறையும் புதுமுறையே; தமது மேஜையின் 'டிராயரை' வெளியே இழுத்து, தண்டிக்கவேண்டிய மாணவனது கையை அதன் விளிம்பிலே வைக்கச் செய்வார்; உடனே 'டிராய'ரை நறுக்கென்று உள்ளே தள்ளுவார். மாணவனது கைவிரல் மணிக்கட்டுகள் மேஜையின் மேற்பலகைக்கும் 'டிராய'ரின் மேல் விளிம்பிற்கும் இடையே தப்பாமல் அகப்பட்டு, நசுக்கப்படும்.

தவிர, அவர் மாணவர்களைத் தண்டனையாக நெடுநேரம் 'பெஞ்சு' மேல் நிற்கச் செய்வார்; பொருள் விளங்காத புஸ்தகங்களிலிருந்து பக்கம் பக்கமாக 'காபி' எழுதிக் கொண்டு வரும்படி செய்வார். இந்த வாத்தியார் ஒரு சமயம் ஆங்கிலத்தை நன்றாகக் கற்றுக் கரைகாண வேண்டி 'வெப்ஸ்டர்' இயற்றிய பேரகராதியை நெட்டுருப் போடத் தொடங்கினாராம்; "D' என்னும் நான்காம் எழுத்து வரை உருப்போடுமுன் மலைத்துப் போய் நிறுத்தி விட்டாராம். இன்னும் ஒரு வாத்தியார் மட்டுமே எனக்கு ஞாபகமிருக் கிறது. அவர் எங்கள் தமிழ் முனிஷி. அவருக்குத் தெரிந்த அசந்தர்ப்பக் கதைகளும் உபகதைகளும் சொல்லி ஓயாது. என்னோடு கல்வி கற்ற மாணவர்கள் பலருள், இந்தச் சுய சரிதக் குறிப்புகளுக்குப் பதிப்பாசிரியராகப் போகிறவர் ஒருவர் மட்டுமே என் நட்புக்கு உரியவரானார்; உண்மை யில், பலரை நண்பர்களாக்கிக் கொள்ளுந் திறமையே எனக்கு இல்லை. 'கர்வம் பிடித்தவன்', 'சேர்ந்து பழகத் தெரியாதவன்' என்றே என்னைப பற்றி எப்பொழுதும் சொல்வார்கள். இது நிற்க. என்னோடு வாசித்தவர்கள் சாதாரணமாய்ப் பேசிக்கொள்ளும் விஷயங்கள் ஒன்றும் எனக்குப் பிடிக்காது. வயது வந்தவர்கள் சதுர்க் கச்சேரிகளையும் பாட்டுக் கச்சேரிகளையும் நாட்டியப் பெண்களையும் பற்றியே ஸதா பேசிக் கொண்டிருப் பார்கள்; அவர்களில் சிலர் அடிக்கடி இராத் தூக்கமின்றிக் கொட்டாவி விட்டுக்கொண்டு தூங்குமுஞ்சிகளாய்ப் பள்ளிக் கூடத்திலே காட்சியளிப்பர்; வேறு சிலர் சூதாட்டத்தில் ஈடுபட்டவர்களாய் 'துருப்பு' என்றும் 'கிளாவர்' என்றும் ஓயாது பேசிக்கொண்டிருப்பர். நானோ எப்போதும் படிப்பிலே ஆசை கொண்டவன். அர்த்த ஜாமம் வரை இராப்பாடம் படிப்பவன். பரீக்ஷைக்கு முந்திய வாரங்களில் என் குடுமியிலே கயிற்றை முடிந்து மரக்கட்டையோடு கட்டிவிட்டு படுக்கையில் உட்கார்ந்து கொண்டே படிப்பேன்; சற்றுத் தூங்கிவிழுந்தால், விசுக்கென்று கயிறு பிடித்திழுக்குமல்லவா?

இந்தக் காலத்திலேதான் நான் முதன் முதலிலே ஸ்திரீ சக்தியை உணரலானேன். எங்கள் பந்துக்களில் ஒருவர் வீட்டில் விவாகம்; பள்ளிக்கூடம் விட்டதும் மாலைப்

பொழுதில் அவர் வீட்டிற்கு வேடிக்கை பார்க்கப் போனேன். நான் போய்ச் சேரும்போது சதுர்க் கச்சேரி நடந்து கொண்டிருந்தது. மாப்பிள்ளையும் மணப் பெண்ணும் பந்தலின் கோடியில் சோபாவிலே வீற்றிருந்தார்கள். எண்பது அடி நீளமும் நாற்பது அடி அகலமுமுள்ள அந்தப் பந்தல் முழுவதும் சதுர் பார்க்கும் ஆடவர்களால் நிறைந் திருந்தது. அவர்களுக்கு இடையே தேவடியாள் ஆடு வதற்கு விட்டிருந்த சந்து இடுக்கமாயிருந்தது; பந்தலோரத் திலுள்ள தெருத் திண்ணைகளிலே ஸ்திரீகள் நெருக்கமாக உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்தார்கள். நெருக்கியடித்து உள்ளே புகுந்து தாசி ஆடுவதற்கு விரித்திருந்த ஜமக்காளத் தின் ஓரத்தில் அவளருகே உட்கார்ந்துகொண்டு நாலாபக்க மும் நோக்கினேன். நர்ட்டியப் பெண் நல்ல கட்டழகி; வயது பதினாறு இருக்கும்; முகத்திலே நல்ல களை; முகத்தைப் பார்த்தாலே புத்திசாலி என்பது விளங்கிற்று; இனிமையான குரல். அவளைப் பழக்கிய நட்டுவனும் பேர்போனவன். ஆடுமுன் பாடுகின்ற தெலுங்குப் பாட்டை, அவன் அதே ராக தாளத்திலும் வர்ண மெட்டிலும் ஸம்ஸ்கிருதத்திலும் தமிழிலும் பாடிக்காட்டியதால் காண்போர் அனைவருக்கும் நாட்டிய அபிநயங் களின் அர்த்தம் நன்றாக விளங்கிற்று. நான் பந்தலிற் போய் உட்கார்ந்தபோது, ''என் கோபால கிருஷ்ணனைக் காணேனே! ஆ, என் கோபாலகிருஷ்ணனைக் காணேனே!'' எனற பிரசித்தி பெற்ற பதத்தைக் காம்போதி ராகத்திலே பாடி அபிநயித்துக் கொண்டிருந்தாள். தான் மனோ பாவனையிலே கற்பித்துக் கொண்ட காதலனான ஸ்ரீ கோபால கிருஷ்ணனைக் காணாமற் போனதை அவள் அபிநயித்துக் காட்டியபோது, வியப்பும், மனத்துயரமும், கிலேசமும், ஏமாற்றமும், கோபமும், தாபமும், துடிதுடிப் பும், ஆத்திரமும், ஏக்கமும் அவள் முகச்சாடையாலும் குரலாலும் அபிநயங்களாலும் உண்மை போலவே தோன்ற, மூத்தோர் இளையோர் என்ற வித்தியாசமின்றி, அங்கிருந்தவர்கள் அனைவருள்ளும் தலையசைத்துக் கொண்டாடாதவர் ஒருவரும் இல்லை. பலர் தம்மை யறியாமலே மகிழ்ச்சியின் மேலீட்டினால் 'பேஷ்!', 'சபாஷ்!' 'ஆமாமடியம்மா!' என்றெல்லாம் வாய்விட்டுக்

கூறினர். "பெண்ணாய்ப் பிறந்தவர்களாகிய நம்மையே இப்படி மயக்கும் இவளுடைய வலைவீச்சிலே புருஷாள் அகப்பட்டு இவளுக்கு அடிமையாவது ஓராச்சர்யமா?" என்று ஒருத்தி இன்னொருத்தியைப் பார்த்துச் சொன்னது என் காதிலே விழுந்தது. நானோ அசையாமல், இமை கொட்டாமல், கற்சிலை போல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது என் மனம் நிமிஷத்திற்கு நிமிஷம் சுவாதீனத்தை மீறி மெல்ல நழுவிக் கொண்டி ருந்தது என்பதை நான் உணரவில்லை. அவள் ஒரு தடவை பின்னாலே பார்த்துத் தன் குருவாகிய நட்டுவனிடம் ஏதோ சொன்னாள். பாடுங்குரலை மாற்றித் திடீரென்று சுபாவமாக இனிய குரலிலே அவள் பேசியதைக் கேட்டதும் மெய் சிலிர்த்தேன்; மேனி முழுவதும் புளகாங் கிதமாயிற்று. ஆனந்தக் கடலில் ஆழ்ந்து மெய்ம்மறந்தேன்; மூர்ச்சை போகாததுதான் குறை. இத் தறுவாயில் அங்கிருந்தவர் களுள் இருவர் போட்டிபோட்டு அவளுக்குப் பணம் போட்டார்கள். முதல்வர் இரண்டு ரூபாய் போட்டார்; மற்றவர் மூன்று போட்டார்; முதலாமவரும் மூன்று போட்டார். இப்படித் தொகை உயர்ந்துகொண்டே போயிற்று. அவ்விருவர்களிடமும் நான் பொறாமை கொண்டேன். என் கைக்கு அருகில் ஒரு பொன்சுரங்கம் இராதா என்று ஆசைப்பட்டேன். அங்கிருந்த கனவான் களுக்கு அவள் சந்தனம் பூசவேண்டும் என்று ஒருவர் பிரேரணை செய்தார். சில சதுர்களில் அப்படி நிகழ் வதுண்டு. ஆனால், அதைக் கேட்டதும், அவள் சபையை வணங்கி, "அப்படிச் செய்வது அடியாளின் கௌரவத் திற்கு மட்டுமேயன்றி, சபையோரின் கௌரவத் திற்கும் குறைவா கும் அன்றோ?" என்று சொல்லிவிட்டாள். அவள் இவ்வாறு சாதுர்யமாகக் கூறியதைச் செவியுற்றதும், நான் அவளுக்கு அடிமையாகி விட்டேன். எப்பொழுதும் அவளருகிலே இருப்பதே எனக்குப் பெருவிருப்பமாகி விட்டது. ஏதோ சாக்குபோக்குகளைச் சொல்லிவிட்டு, கல்யாணம் முடியும் வரை கலாசாலைக்குத் திரும்பாமல், அங்கேயே தங்கியிருந்தேன். அவளுடன்பேசி என் காதல் வெறியை வெளியிட விரும்பினேன். ஆனால், என்னிலும் மூத்தவர் பலர் அவளை எப்பொழுதும் சூழ்ந்து

கொண்டிருந்தனர். கடைசியில் அவளும் தன்னூருக்குப் போய்விட்டாள். என் மனம் வெறிச்சென்று இருந்தது; தீராத் துயரத்தில் ஆழ்ந்தேன்; ஆகாரம் செல்லவில்லை. "உனக்கு என்ன உடம்பு?" என்று என் தாயார் பல தடவை கேட்டுப் பார்த்தாள். "நீ தெய்வப் பெண்ணேயன்றி மானுடப் பிறவியன்று; மதுபானம், சூது, வாது முதலிய சில் தாசி சாதித் துர்க்குணங்களிலே பழகாதே" என்று அக்கணி கைக்கு இரண்டு கடிதங்கள் எழுதினேன். அவளுடைய காதலைப் பெறுவதற்காக, ஸ்திரீவசிய மந்திரம் ஒன்றைக் கற்றுக்கொண்டு அதிலே அவளுடைய பெயரை அமைத்து, தினந்தோறும் நூறு ஆவர்த்தி ஜபஞ் செய்து வந்தேன். என் கையில் அப்பொழுது பணம் இல்லை என்பதுதான் என்னை அப்பொழுது காப்பாற்றி யது என்றே நினைக் கிறேன். நாளடைவிலே என் ஆசை தணிந்துவிட்டது; அவளையும் மறந்து விட்டேன். சில வருஷங்கள் சென்ற பின், அவள் நடனத்தை மீண்டும் ஒருமுறை காண நேர்ந்தது. அப்பொழுது அவளோ, அவள் நர்த்தனமோ ஒன்றுமே என்னை மனங் கவரவில்லை. ஆனால், புன்மதியும் பெருநிதியும் படைத்த யௌவன புருஷன் ஒருவன் அவளாலே முற்றிலும் சீரழிந்து, முப்பது வயதாகு முன்னமே பைத்தியம் பிடித்து, இளமனைவியும் கைக்குழந்தையும் தெருவிலே திண்டாடும்படி விட்டுவிட்டு அகால மரணமடைந்தான் என்பது நான் கண்ணாற் கண்ட உண்மை. வேறு பல குடும்பங்களையும் அவள் இவ்வாறு சீர்குலையச் செய்தாள் என்றும் கேள்விப்பட்டேன்.

### எட்டாவது அதிகாரம்

## பட்டப் பரீக்ஷைக்கு நான் படித்ததைப் பற்றிக் கூறுவது

என் சிற்றப்பா மகாதேவன் படிப்பிற்காக எங்களுடன் ஒரு வருஷகாலம் தங்கியிருந்தார்; ஒரு வருஷம் பரீக்ஷையில் தவறியபின் அடுத்த வருஷம், அதாவது, நான் பிரவேசப்

பரீக்ஷையிலே தேர்ச்சி பெறுவதற்கு முந்திய வருஷம், அவர் தேர்ச்சி பெற்று மூங்கிலூர்க் கலாசாலையில் படித்துக் கொண்டிருந்தார். ஆதலால், அவரும் எங்கள் கூடத்தான் இருக்க வேண்டும் என்று என் தகப்பனார் கட்டாயப்படுத் தவே, அவருடைய தாயாருக்கு அப்படியிருப்பது பிடிக்க வில்லையாயினும், அவர் எங்கள் வீட்டிலே சாப்பிட்டுக் கொண்டு அருகில் ஓர் அறையை வாடகைக்கு அமர்த்திக் கொண்டு, அங்கே வாசித்து வந்தார். நாங்கள் இருவரும் சேர்ந்து பழக நேரிட்டது; ஆயினும், வயதில் எனக்கு ஏழு வருஷம் பெரியவரும் முறையில் சிற்றப்பாவுமானபடியால், அவரிடம் மரியாதையாக நடந்து வந்தேன். அவருக்கு நான் செல்லம்; எனக்கு வேண்டி யதைக் கொடுத்துப் பிரியமாக நடத்தி வந்தார். என்னோடு இருக்கும்போது அவர் நாவடக்கத்தோடு பேசுகிறார் என்பதைச் சீக்கிரத்திலே அறிந்து கொண்டேன். அவ ருடைய தகப்பனாராகிய என் பாட்டனார் அவரைத் தம் அந்தியகாலம் வரை கண்டிப்பர்கவும் வைதிக அனுஷ்டானக் கட்டுப்பாட்டிலும் வளர்த்து வந்தாார்கையால், அவருடைய மேற்பார்வை திடீரென நீங்கியதும், இயற்கையிலே உற்சாகம் துணிவு முதலிய குணங்களையுடைய அவ ருடைய மனது, அமுக்கிக் கொண்டிருந்த பாரத்தினின்று விடுபட்ட ரப்பர்ப் பந்தைப் போல் அதிக உற்சாகத்தோடும் துணிவோடும் பொங்கியெழும்பிற்று. அவர் நல்ல புத்திசாலி; அவருடன் சேர்ந்து பழகுவது உல்லாசமா யிருக்கும். சில வேளை கோபதாபங்கள் பொங்கியெழும்; என்றாலும், மொத்தத் தில் அவர் நன்மனமுடையவர்; உதாரணகுணமும் கைத்தாராளமும் உடையவர். நெடுநாள் ஊரைவிட்டு என்னோடு இருப்பது என் தகப்பனாருக்குச் சௌகரியப் படவில்லை யாகையால், அவர் என் சிற்றப்பாவின் மேற்பார்வையில் என்னை விட்டு விட்டு, குடும்பத்தோடு தில்லையூருக்குப் போய்விட்டார். சேர்ந்தாற்போலிருந்த இரண்டு அறைகளை வாடகைக்கு அமர்த்திக் கொண்டு என் சிற்றப்பாவும் அவருடைய சகபாடியும் ஒரு அறையிலும், நானும் என் தோழனான 'பம்பா' என்பவனும் மற்றோர் அறையிலுமாகக் குடியிருந் தோம். நால்வரும் ஒரு பிராமணன் வைத்திருந்த சாப்பாட்டு விடுதியிலே சாப்பிட்டு

வந்தோம். அவ்விடுதியிலே சாப்பிட்டு வந்த அனைவர்க்கும் என் சிற்றப்பாவே தலைமை பெற்றார். காதலையும் காதலால் விளையும் பொறாமையும் விளக்குவனவாயுள்ள எண்ணிறந்த ஸம்ஸ்கிருத சுலோகங்களை அவர் எடுத்துச் சொல்வதும், திறமையோடும் உற்சாகத்தோடும் அருவி நீர் ப்பாய்வது போலக் கவர்ச்சியுடைய அவருடைய ஸம்பாஷணையும் ஈர மனதும் உதாரணகுணமும், இவை யெல்லாவற்றைக் காட்டிலும், அவர் போகுமிடமெல்லாம் மகிழ்ச்சியையும் ஊக்கத்தையும் பரப்புகின்ற சிரித்த முகமும், முகத்தழகும் அவரை யாவரும் எங்கும் மகிழ்ந்தேற்றுக் கொள்ளும்படி செய்தன. மற்றைப் பிள்ளைகளைப் போலவே, எனக்கும் அவர் அதி சீக்கிரத்தில், உள்ளத்தால் உவந்து போற்றும் வழிபடு தெய்வம் போல் ஆகிவிட்டார். அதோடு அவர் என் சிற்றபாவானபடியால் அவரை எனக்கே சொந்தமாக்கக் கருதினேன். என் நண்பர் எவரிடமேனும் அவன் பிரியங் காட்டினால், பொறாமைப் படலானேன். இவ்வாறு நாங்கள் ஒரு வருஷ காலம் சேர்ந்திருந்தோம். அடுத்த வருஷம் அவர் இஞ்ஜினிரிங் படிப்பிற்காகச் சென்னைக்குச் சென்றார். ஆனாலும், அந்த ஒரு வருஷத்தில் நான் கற்ற விஷயங் களையும் என் அபிப்பிராயங்களையுமே அவர் நெறிப் படுத்தி எனது சுபாவ குணத்திலும் அவருடைய மனச்சுவடு என்றும் அழியாதவாறு பதியும்படி செய்துவிட்டார்.

இது காறும் நான் மற்றவரைப் போலவே சாதாரணப் பிராம்மணச் சிறுவனாய் இருந்தேன். மந்திரங்களின் அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளா விட்டாலும் முச்சந்தியும் தவிராமல் ஸந்தியா வந்தனஞ் செய்து வந்தேன். ஹிந்துக்கள் பொதுவாய் வழிபடுந் தெய்வங்கள், எங்கள் குடும்பத்திற்கு விசேஷமாய் அமைந்த குல தெய்வங்கள், குளிரால் நடுங்கிய பாப்பாப் பாட்டியின் ஆவேசத்தைப் போன்றவை; பேய் பிசாசுகள் முதலியவைகளிலெல்லாம், புத்தி பூர்வமான திட நம்பிக்கை இல்லாவிட்டாலும், பொதுவாக நம்புகின்றவனாய் இருந்தேன்; தொட்டிலிலே தொட்டு நான் பழகி வந்த எண்ணிறந்த மூட நம்பிக்கைகளாலும் தொன்று தொட்டு வந்த அஞ்ஞானக் கொள்கைகளாலும் எளிதிற் பாதிக்கப்பட்டவனாய் இருந்

தேன் சாதி வேற்றுமை, சிசுவிவாகம், தீராத வைதவ்யம், பெண் பாலாரின் தாழ்ச்சியும் சுதந்திரமின்மை யும், ஏக குடும்பமாக வாழ்தல் முதலிய கட்டுப்பாடுகள் எல்லாம் மஹரிஷிகளால் விதிக்கப் பெற்று, திருத்தவோ மேம் படுத்தவோ தேவையில்லாதவாறு செவ்வையாக அமைந் தவை என்று மதித்து வந்தேன். இவ்வாறு எல்லா அம்சங் களிலும் அதுவரைச் சாதாரணப் பிராம்மண வாலிபனாகவே இருந்தேன். இக் கொள்கைகள் எல்லாம் என் சிற்றப்பா வுடைய ஸஹவாஸத்தால் அதி சீக்கிரத்திலே மாறிவிட்டன. அவர் போதனையிலே, அமெரிக்க நாஸ்திகவாதிகளான 'இங்கர்ஸால்' ட்ரேபர்' ஆதியோர் களின் நூல்களையும் ஆங்கில நாஸ்திகவாதிகளான 'ப்ராட்லா' 'மிஸ்ஸஸ் பெஸன்ட்' ஆகியோர்களின் நூல்களையும் ஊக்கத்தோடு படித்துப் பாராட்டலானேன். என் அகக் கண்முன் புதியதோர் அழகிய பிரதேசம் திடீரெனத் தோன்றியது போல் இருந்தது. 'பழைய விலங்குக்ள்' என்று அந்த அமெரிக்க ஆசிரியர் கூறியவற்றைத் தகர்த்தெறிந்து விடுதலை பெற்ற என் உயிர் அந்தப் பிரதேசத்திலே தங்குத் தடையின்றி யதேச்சையாய்த் திரியலாயிற்று. 'டிண்டல்'. 'ஹக்ஸ்லி', 'ஸ்பென்ஸர்' என்பவர்களின் நூல்களையும் படித்தேன்; ஆனால் அவை பிற்காலத்தில் படித்தவை; அந்தக் காலத்திலே என் கண்களுக்குத் தெய்வமாக விளங்கியவர் புகழ் பெற்ற 'இங்கர்ஸாலே'யாவர். இவர்கள் எழுதிய நூல்களே நான் அத்தியயனஞ் செய்யும் வேத சாஸ்திரங்கள் ஆயின.. 'ரேனால்ட்ஸ்' என்பவர் எழுதிச் சித்திரப் படங்களோடு பதிப்பிக்கப் பெற்று, மனத்தைக் கெட்ட வழியிலே புகுத்துத் தூர்த்த குணத்தைக் கிளப்பு கின்றவையான நாவல்களையே சிறந்த இலக்கியங்களாகக் கொண்டு வாசித்துத் துன்மார்க்க நடத்தையையும் பழிபாவச் செயல்களையும் தெரிந்து கொண்டேன். பிரதிவாரமும் சிற்றப்பாவின் அறையிலே நாஸ்திகவாதிகள் சங்கங் கூடிப் பேசுவார்கள்; அக்கூட்டங்களுக்குத் தப்பா மற் சென்று, அச்சங்கத்து அங்கத்தினர் தங்கள் கண்ணிற்குப் புலப்படாத முழுமுதற் கடவுளின் தலைமீது இடிபோல் முழங்கிச் சோனைமாரி போற் பொழிந்த வசை மொழிகளை யும் சாபங்களையும் செவியாரக் கேட்டு, அந்தப் பிரசங்கங்

களில் அவர்கள் நமது சமூகக் கட்டுப்பாடுகளையும் ஆசார அனுஷ்டானங்களையும் சின்னாபின்னமாகும்படி தகர்த்தெறிந்து அவற்றிலுள்ள ஆபாசங்களை எடுத்துக் காட்டியதைக் கண்டேன். இவற்றின் பயனாக, நான் எப். ஏ. பரீக்ஷையிலே தேர்ச்சி பெற்று மேற்படிப்பிற்காகச் சென்னைக்குச் சென்று, மீண்டும் என் சிற்றப்பாவுடைய சகவாசத்தைப் பெற்ற போது, அவருடைய மனத்திற்கு முற்றும் இசைந்தவனாக மாறிவிட்டேன். ஸந்தியா வந்தனங்களை யெல்லாம் கட்டி வைத்து நெடுநாளாயிற்று. பண்டைய வழக்கங்கள், புராதனக் கட்டுப்பாடுகள் முதலியவற்றை யெல்லாம் முழுமனதோடு வெறுப்பதும் இகழ்வதுமானேன். யௌவன தசைக்குரிய இயற்கை நாணமும் கூச்சமும் மழுங்கியவனாகி, வேசியின் ஸ்பர்சம் யாரையும் கெடுத்து விடும் என்பதை உணராதவனானேன். ரேனால்ட்ஸ் என்பவராலே எனக்கு முக்கியமாக ஏற்பட்ட நன்மை என்னவென்றால், சிறிய எழுத்தில் அச்சிடப் பெற்ற அவரது நூல்களை வாசித்துக் கண்பார்வை மழுங்கிப் போய், சென்னைக்கு வந்து சேர்ந்ததும் கண் வைத்தியரிடம் காண்பித்துக் கண்ணாடி பூணுவது அவசியமாகி விட்டது என்பதே.

ஒன்பதாவது அதிகாரம்

## அதிசயக் கனவையும் அதிலும் அதிசயமான அனுபவத்தையும் கூறுவது

கலாசாலைப் படிப்பில் முதல் வருஷத்துக் கோடை விடுமுறையிலே தில்லையிலுள்ள எங்கள் புது வீட்டிற்கு நான் போயிருந்தபோது தான், ஓரிரவில் நான் ஒரு அதிசயமான கனாக் கண்டேன். இளம்பிராய முதற்கொண்டு, நான் சற்று மனக் கோட்டை கட்டும் சுபாவமுள்ளவன். என்னை 'கனாக் காணுங் கவிஞன்' என்று என் சிற்றப்பா சில வேளைகளிலே பரிகசிப்பதுண்டு. ஆயினும், 'அழகிய பெண்மணிகளைப் பற்றிய கனா' என்றும், 'அறிவழகைப் பற்றிய கனா' என்றும் 'டெனிஸன்', 'ஷெல்லி' என்னும் ஆங்கிலக் கவிஞர்கள் முறையே

வர்ணித்துள்ள கனாக்களைப் போன்றதன்று நான் கண்ட கனா. 'லிட்டன்' எழுதிய 'ரஹஸ்ய வழி' என்னும் கதையி னின்றும் எடுத்து நாடகமாக்கப் பெற்ற 'மனோன்மணீயம்' என்னும் தமிழ் நூலிலே கூறப்பட்டுள்ள கனாவை என் கனவு ஒருவாறு ஒத்திருந்தது என்னலாம். 'ரஹஸ்ய வழி' என்னும் கதையை நான் வாசித்ததில்லை யாகையால், 'லிட்டன்' அக்கனாவை எப்படி வர்ணித் துள்ளார் என்றோ, கனவைப் பற்றிய பிரஸ்தாவம் அதில் உள்ளது என்றோ என்னாலே சொல்ல இயலாது. ஆகை யால் என் சொந்தக் கனாவை அப்படியே எடுத்துரைக் கிறேன். இதை வாசிப் பவருக்கு இவ்வித அனுபவம் யாதேனும் நேர்ந்திருந்தால், அதனோடு ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளலாம்.

ஓரிரவில் நான் எங்கள் புது விட்டு நடைப்பக்கத்து அறையில் தூங்கிக் கொண்டிருக்கும் போது, என் தாயார் வீறிட்டுக் கதறியது என்னைத் திடீரென எழுப்பிற்று. தேள் கொட்டிய நோவைச் சகிக்க முடியாமல் அவள் தவித்துக் கொண்டிருந்தாள; தகப்பனாரோ வீட்டில் இல்லை. அண்டை வீட்டிலிருந்த மந்திரவாதியை ஓடிப்போய் அழைத்து வந்தேன். அவரும் உடனே என்னுடன் வந்தார். என் தாயார் பாதத்திலே தேள் கொட்டின இடத்தை விடாமல் உற்றுப் பார்த்த வண்ணம் ஏதோ மந்திரஞ் செபித்தார். மூன்று நான்கு நிமிஷத்திற்குள் இடுப்புவரை ஏறியிருந்த வலி படிப்படியாக இறங்கி, இரண்டு நிமிஷத்திற் குள் முற்றும் நீங்கி விட்டது. வலி நின்றதும், மந்திரவாதி புறப்பட்டுப் போய்விட்டார். நானும் போய்ப் படுத்துக் கொண்டு, என் தாயாருடன் பேசிக்கொண்டே தூங்கி விட்டேன். நான் கனவு கண்டது விடியற்காலை வேளை. பால் வெள்ளைப் புரவிகள் இரண்டு பூட்டிய 'பீடன்' வண்டி ஒன்று எங்கள் ஊரை நோக்கிச் சாலை வழியே வந்து எங்கள் தெருக் கோடியில் நின்றது. முக்காடிட்டு முகத்தை மறைத்துக் கொண்ட யாரோ ஒருவர் வண்டியிலிருந்து இறங்கி எங்கள் புது வீட்டிற்கு வந்து, கதவு முத்தாளிட்டு இருக்கும்போதே, நான் தூங்கிக் கொண்டிருந்த அறைக்குள் நுழைந்தார். சொப்பனத்திலேதான் ஒருவர் இப்படி உள்ளே வரமுடியும். வந்தவர் என்னை அணுகி, என் பக்கத்தில் உட்கார்ந்து, என் கையை மெதுவாய்ப் பிடித்துக்

கொண்டு, தன் முகத்தை மூடியிருந்த முக்காட்டை நீக்கினார். ஆ! ஆ! என்றுமே மறக்க வொண்ணாதது அவ் விமைப்பொழுது; தெய்விக அழகைக் கண்ணாற் கண்டு கொண்டேன்; எல்லாவற்றிற்கும் அப்பாலுள்ளதாய்த் திடீரென்று தோன்றிய அக்காட்சியிலே, 'நினைப்பு' என்பது நசித்து இன்பமாயிற்று; பல ஆண்டுகளுக்குப் பின்பும், இனிய மோனத்தமர்ந்து ஞாபக சக்தியால் அத் தோற்றத்தை என் மனக் கண்முன் வருவித்த போதெல்லாம், அவ் வானந்தத்தைச் சிறிது அனுபவிப் பேன். இப்பொழுதுதான், ஞாபகத்தளர்ச்சியால், அத்தோற்றம் என் மனக் கண்ணிற்கு மங்கி மழுங்கித் தோற்றுகின்றது. ஆ! இன்னும் அவ்விதக் காட்சி யொன்றைக் காண்பதற்கு என் வாழ் நாளில் மிகுதியுள்ள வருஷங்கள் எல்லாம் தூங்க வேண்டும் என்றால் சந்தோஷமாகத் தூங்கிக் கழிப்பேன்; அவ்வளவு உள்ளக் கிளர்ச்சியை உண்டு பண்ணிற்று அத் தெய்விகக் காட்சி. ஆனால், அத்தெய்விகத் தன்மை ஒரு வினாடிதான் இருந்தது. அவ்வினாடிக்கு மானுட வாழ்க்கை யில் ஆயிரக்கணக்கான வருஷங்களைக்கொண்ட யுகமும் ஒவ்வாது என்னலாம். அடுத்த நிமிஷம், என் நண்பன் 'பம்பா'வின் முகத்தையே பார்த்தது போலாயிற்று. ஆனாலும், யாதொரு விசேஷமுமின்றி சாதாரணமாகத் தோன்றும் 'பம்பா'வின் முகத்தைப் போலவும் தோன்ற வில்லை. ஏனெனில், அப்பொழுதும் அம்முகத்திலே, ஒரு பெருந்தன்மையும், ஒருவிதக் கவர்ச்சியும், சோதியும், சொல்ல முடியாத இனிமையும் குடிகொண்டிருந்ததால், முழுதும் தெய்விகம் வாய்ந்தது என்று சொல்ல இயலாதென்றாலும், அக்காட்சியை அமானுஷம் என்றே ஒப்புக்கொள்ள வேண்டும். குரலும், என் நண்பனது வரட்டுக்குரலாக இராமல், வானுலகங்களினின்று எழுகின்ற இசையின் நாதத்தைப் பெற்றிருந்தது. என்னோடு பேசிய இன்மொழிகள் பலவற்றில் ஒன்றுமே எனக்கு ஞாபகம் இல்லை; மறு நாட் காலையிலேயே என் ஞாபகத்திற்கு வரவில்லையே. அக்காட்சி எவ்வளவு நேரம் நிலைத் திருந்தது என்றும் எனக்குத் தெரியாது. திடீரென்று, அது பறந்து செல்வதுபோல் மறையவும், அதனை மறைந்து போக விடாமல் பற்றிப் பிடிக்க முயன்றபோது, என் கை

ஜன்னற்கம்பியிலே படவே, ஏக்கமுற்றவனாய் விழித்துக் கொண்டேன். அப்பொழுது விடியற்காலை 5 மணி இருக்கும். மனங்கசிந்து பச்சைக் குழந்தைபோலத் தேம்பித் தேம்பி அழுதேன். என் இருதயமானது இருக்கவேண்டிய இடத்தைவிட்டு, பிடுங்கி யெறியப் பட்டது போல எனக்குத் தோன்றிற்று. என் மார்பகத்தில் ஒரு பகுதி தோண்டிப் பறித்தெடுக்கப்பட்டது போல் வெறிச் சென்று இருந்தது. நான் கண்டது வெறுங்கனவு என்றும் நம்பக்கூடவில்லை. அதனால், உடனே பரபரப்புடன் படுக்கையை விட்டு எழுந்து, தெருக்கோடிக்குச் சென்று பார்த்தேன். அங்கே பீடனோ, வெள்ளைக் குதிரைகளோ, 'பம்பா'வோ ஒன்றையும் காணாது, அவை "போய் விட்டன வாயினும் ஒருவேளை எட்டிப் பிடிக்கலாம்" என்ற நம்பிக்கையிலே, சாலை வழியே சுமார் ஒரு மைல் தூரம் நடந்து சென்றேன். பால சூரியனுடைய சண்ட கிரணங்கள் என்மீது சுள்ளென்று உறைத்து, சடுதியிலே என்னைச் சுயபுத்திக்குக் கொண்டு வந்தன. போனவழியே மெதுவாக வீடு திரும்பினேன். என் மனம் சில்லுச் சில்லாக உடைந்துபோய் ஒட்டுப்போட்டும் சரிப்படுத்த முடியாதபடியாய் விட்டது என்று தோன்றிற்று; என்னால் முன்போல் சாப்பிடவும், பழைய புஸ்தகங்களி லும் விளையாட்டுகளிலும் முன்போல ஈடுபடவும் முடியுமா? முடியவில்லை. ஒரு வார காலம் என் தாயார் என்னைப்பற்றிய கவலையாகவே, என்ன செய்வதென்று அறியாமல், மனங் கலங்கினாள். என் நண்பன் 'பம்பா' விற்குக் கடிதம் எழுதி, குறிப்பிட்ட அந்த நாள், இரவிலே அவன் என்ன செய்துகொண்டிருந்தான் என்று தெரிவிக் கும்படி கேட்டுக்கொண்டேன். அதற்கு அவன் அன்று இரவு 8 மணி முதல் மறுநாட் காலை 6 மணி வரை, தான் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்ததாயும், நான் தூக்கத்திலே வெருண்டிருக்க வேண்டும் என்றும் பதிற் கடிதம் எழுதி யனுப்பினான். ஆனாலும், முன்போல இராமல், அன்று முதல் நான் வேறு மனிதனாகி விட்டேன். என் வாழ்க்கை சாரமற்ற பாழிட மொன்றை உடையதாயிற்று; என் மன மானது அடிக்கடி ஒரு நிலையிலே நில்லாது உழன்று காரண மொன்று மின்றியே ஏக்கமுறுவதாயிற்று. உண்மையில், அப்பொழுது நான் அனுபவித்த பேரானந்தம் என்

ஊனையும் உயிரையும் துளைத்து ஊடுருவி உட்புகுந்து என் சுபாவத்திலே ஒன்றிப் பதிந்து விட்டதாகையால், அப்படிப் பதிந்த உணர்ச்சியானது, நாளடைவிலே எவ்வளவு மழுங்கிப்போனாலும், நான் ஆசந்தி சேருமட்டும் என்னைவிட்டு அகலாது என்பது திண்ணம்.

அடுத்த விடுமுறையின்போது (தை மாதத்திலே) எனக்கு மறு விவாகம் நடந்தது. வேண்டியமட்டும் என் சிற்றப்பனுடைய அபிப்பிராயங்களை நான் ஏற்றுக் கொண்டவன் ஆதலால், விவாகஞ் செய்து கொள்வது படிப்பிற்குத் தடையாகும் என்று முதலிலேயே ஆக்ஷேபித்தேன். இதுதான் முதன்முதலாக என் தகப்பனாரின் இஷ்டத்திற்கு விரோதமாக நான் எதிர்த்துப் பேசியது; அவருக்கு அதனாற் சற்று மன வருத்தம். பெண் வீட்டாரோ எவ்விதத் தாமதமும் கூடாது என்று நெரித்தார்கள். 'என் மனத்தையும் என்னையுமே ஆள வருபவ'ளை நான் முன்னதாகவே பார்க்க வேண்டும் என்று என் தாயாரிடம் தெரிவித்தேன். பெண்ணைச் சார்ந்தவர்கள், 'இது என்ன, நாட்டியக்காரியை அச்சாரங் கொடுக்குமுன் பார்வையிட்டு நிச்சயிப்பது போல் இருக்கிறதே!' என்று முதலில் ஆக்ஷேபித்தார்கள். என்றாலும் கடைசியில் ஒத்துக் கொள்ளவே, மணப் பெண்ணைப் பார்க்க அவளூருக்குச் சென்றேன். அதற்கு முன்னமேயே ஜாதகங்களை ஒப்பிட்டுப் பார்த்ததில், மொத்தத்தில் பொருத்தம் இருப்பதாகக் காணப்பட்டது.

பெண் வீட்டிற்கு நான் போய்ச் சேரும்போது இராத்திரி ஒன்பது மணி இருக்கும். ஊர் முழுவதும் இருண்டு தூக்கத்தில் ஆழ்ந்திருந்தது; அந்த வீட்டில் மட்டும், என் வரவை எதிர் பார்த்து, சிறு விளக்கு ஒன்று மங்கலாய் எரிந்துகொண்டிருந்தது. அவ்விளக்கின் அருகிலே நான் போய் உட்கார்ந்தேன். திரியை நொந்தவே, சில சுடர்கள் தெறித்த பின், விளக்கின் பிரகாசம் சற்று அதிகமாயிற்று. அவ்வறையிலே, ஒரு மூலையில் ஒரு பழம் புடைவையின் மீது இரண்டு ஸ்திரீகள் படுத்திருப்பது தெரிந்தது. சுடர்கள் தெறித்ததை 'நல்ல சகுனம் விளக்கு புஷ்பித்தது' என்று சொல்லிக்கொண்டார்கள். சமையலறையினின்றும் ஒரு

கிழவி வந்து தூங்கிக்கொண்டிருந்த இருவரையும் எழுப்பினாள். அவர்களுள் ஒருத்தியை - சுமார் பத்து வயதுள்ள சிறுமியே - பல முறை பிடித்துக் குலுக்கிக் கண்ணைத் துடைத்துவிட்டு ஏதோ மெல்லெனக் காதோடு சொல்லி, என்னைச் சேவிக்கும்படி செய்தார்கள்; அவளே எனக்காகப் பார்க்கப்பட்ட பெண் என்று என்னிடம் சொன்னார்கள். அவள் என்னைச் சேவித்து எழுந்ததும் உள்ளே போய் மறைந்து விட்டாள்; போகும்போது வெட்கத்தால் சற்று முகஞ் சிவந்தாள் என்று எனக்குத் தோன்றிற்று. ஆனால், அதற்குள் என் நோக்கம் மற்றவளிடம் பிணிப்புண்டிருந்தது. அவளும் விழித்துக் கொண்டாள்; ஆனாலும், அரைத் தூக்கமாய் அவள் விளக்கு முகமாய் உட்கார்ந்திருந்தாள். அவள்து அழகிய கருங்கூந்தலானது நாற்புறமும் சுருள் சுருளாய்ப் படிந்து பட்டாடைபோலப் பெருகித் தோன்றிற்று. அவளுக்கு 18 வயது இருக்கலாம். தூக்கக் கலக்கத்தில் அவள் விழித்துப் பார்த்தது கூட அந்தத் தெய்விகக் காட்சியை நன்றாக என் ஞாபகத்திற்குக் கொணர்ந்தது. அவளுடைய அழகானது, நிறத்தாலோ, உருவத்தாலோ, மூக்கு, விழி, அதரங்கள் இவைகளாலோ, காட்சிக்கு இனிய கூந்தலாலோ, வேறு எதாலோ என்று வகுத்துரைக்க வொண்ணாததாய் இருந்தது. ஒவ்வொரு அமிசத்திலும் தனிப்பட்டதோர் அதிசயமும் அழகும் வசீகரமும் காணப்பட்டன. எல்லாமும் சேர்ந்து என் முன்னர் பெண் வடிவிலே வீற்றிருந்த காட்சியானது என் உள்ளத்திலேயுள்ள ஆண்மையை எழுப்பி, காதலாகிய அதிர்ச்சியை விளைவித்தது. நான் கண்ட கணவு ஒருவாறு அனுபவத்திற்கு வந்துவிட்டது என்ற உணர்ச்சி உண்டாயிற்று. அது முதற்கொண்டு, எனக்கு அவளைக் காணும்போதெல்லாம்,

**காதல் என் ஆவியாம் யாழினைக் கைக் கொண்டு**
**நாத நரம்புகளை நைதலுறப் புடைத்து**
**என்னையே யான் மறக்கும் இன்பம் விளைத்திடுமால்;**
**காதல் ஒளிர் கரங்கள் காலக் கலம் ஏந்தி**
**ஆதரத்தின் மெல்ல அசைதர அவ்வேளை,**
**பொழுது கணங்கணமாய்ப் பொன்மணலிற் போந்திடுமால்**

அவ் விளம் பிராயத்தில், யாதொரு களங்கமில்லாத தாய், என் பிரேமை பனிக்கட்டியிலும் தூயதாகவும் சரீர

சுகத்தைப்பற்றிய எண்ணத்தாலே பாதிக்கப்படாததாகவும் இருந்தது. அந்த நாட்டியப் பெண்ணிடம் கொண்ட ஆசையைக் காட்டிலும், இந்தப் பிரேமை எத்தனையோ மடங்கு பரிசுத்தமும் ஆழமும் வாய்ந்தது. இவள் இருந்த ஊரிலே இருந்தாற் போதும், இவளாலே உட்கொள்ளப் படும் காற்றை உட்கொள்ளக் கிடைத்தாற் போதும் என்று இருந்தது எனக்கு. இவள் உடுத்திய ஆடையின் தலைப்பு நுனி என்மேற் படுமாயின், கனாவிலேனும் கிடைக்கும் என்று நினையாதபடியான பரமானந்த நிலையை அடைவேன். என் ஆசையை எதனோடு ஒப்பிடுவேன்.

**மின்மினி விண்மீனை விரும்புவது என்கோ?**
**இரவு விடியலுக்கு ஏங்குவது என்கோ?**
**இந்த நம் துன்பியல் வாழ்க்கைக்கு அப்பால்**
**நந்தலில் ஒன்றை நாம் நசைவதே என்கோ?**

வெகு தூரத்திற்கு அப்பாலுள்ள ஒன்றினுக்கு என்றே நான் விரதம் பூண்டு வாழ்வது போல் ஆயிற்று என் ஆசை. அவளை அக்கணமே என் உள்ளக்கோயிலின் உள்ளுளே வாழ்க்கையின் காப்புக் கடவுளாக அமைத்துக் கொண்டேன்; நற்செயல்களால் நிரம்பிய பல ஆண்டுகள் அவளைத் தொழுது போற்றுவதை யொழிய, எப்பொழுதேனும் அவளை நான் என் பொருளாய்ப் பெற இயலுமோ? மானுடத் தன்மைக்கு தினந்தோறும் உதவுகின்ற பொருளோ பேரொளியும் பெரு நலமும் வாய்ந்த இவள்? ஒருமுறை இவளை நினைத்தாலும் போதும், எவ்விதமான கெட்ட மனப்போக்கும் நேர்வழியே திருந்திவிடும். மிக இழிந்த எண்ணமும் உயர்ந்த நற்குணமாக மாறிவிடும். என் உள்ளத்திலே களிப்பும் இனிய உபசாந்தமும் நிறைந்து விடும். பிற்கால வாழ்க்கையில் மனம் போனவாறு சரீர வேட்கைகளுக்கு நான் இடங்கொடுத்த தெல்லாம் இவளை ஸ்மரிப்பதாகிய ரக்ஷையை நான் அணிந்து என்னை ரக்ஷித்துக் கொள்ளத் தவறியதாலேதான். என் மனைவியை ஆதி முதலாகக் காதலித்தே வருகிறேன். அதனால் அதினும் வேறான இக் காதல், ஒருவன் இரு பெண் மணிகளை ஒருங்கே காதலித்தல் கூடும் என்பதை நிரூபித்து விட்டது. கவி சொல்கிறார்:

மனம்வரு கீழ்மையை அடக்க மாட்டுமோ
 களம்படு மேம்பாட்டெண்ணம் கனி நயத்
தன்மொழி, நன்மரி யாதை, இசையவா,
 உண்மைப் பற்று முதலிய உயர்குணம்,
ஆண்மகன் ஆக்குவ அனைத்தும் பயிற்ற, மென்
 தோள் மகள் ஒருத்திமீது தோன்றுறும்,
கன்னிக் காதலின் வல்ல கலைக்குரு,
 மன்னுலகத்து யான் அறியேன் மாதோ

என்று.

என் மனைவியும் எனக்குக் காப்புத் தெய்வமாய் வாய்ந்தவளுமாக, இவ்வுயர் பாடலின் உண்மையை நான் மன வருத்தத்துடன் உணருமாறு உதவினார்கள். காதலிக்கத் தொடங்கு முன்பேயே ஒருத்தி எனக்கே சொந்தமாகி விட்டாள்; மற்றவளோ, சொப்பனத்திலும் நான் அடையக் கூடாதபடியாய் வேறொருவனுக்கு உரியவளாகி எனக்கு என்றும் கிட்டாதவளாகி விட்டாள். இவற்றால் என் 'கன்னிக் காதல்' வளர்ச்சி பெறாது குன்றிச் சூம்பியது; அதனால் காதலாகிய குரு என்னிடம் செலுத்தக்கூடிய வல்லமையை இழந்து எனக்கு நற்குணங்களைப் பயிற்ற இயலாதவனாகி விட்டான். ஆகவே, மானிடன் அடையக் கூடிய பரிபூர்ண நிலையை அடையாதவன் ஆனேன்.

மறுநாள், என் மணப்பெண் வீட்டில் வளையவரும் போது சாவகாசமாய் அவளைப் பார்த்துவிட்டு, சரி என்று ஒப்புக் கொண்டேன்; பட்டுப்போல் மிருதுவாய்த் தளதளத்த அவளது பொன் மேனியைக் கண்டே அவளை இல்லாளாகக் கொண்டேனே யல்லாமல், 'வெகுநாள் நிலைபெற்று உதவக்கூடிய நற்குணங்களையுடையவளா அவள்?' என்று ஆராய்வதற்கு எனக்கு அவகாச மின்மையால் அவ்வாறு ஆராய்ந்து கொள்ளவில்லை. என்னைப்பற்றி அவள் என்ன நினைத்தாள் என்று கேட்டறிந்து கவனிப்பதுண்டோ? இல்லையே. அதனால் இன்னும் பதினைந்து நாளுக்குள் என் விவாகத்தை நடத்துவது என்று தீர்மானித்தார்கள்.

என் கல்யாணத்தின் போது நேர்ந்த விசித்திரமான சம்பவம் ஒன்றை மட்டும் குறிப்பிடுகிறேன். எனக்குச்

சிற்றப்பாவும் குருவுமாகிய மகாதேவன் வராமல் இருப் பானா? நான் காப்புத் தெய்வமாகக் கொண்ட என் மைத் துனியை அவன் கண்டான். 'என் உள்ளக் கோயிலிலே வைத்து வழிபடப் பெற்றவளைப் பற்றி நான் லக்ஷ்ய புருஷனாகக் கொண்டவன் என்ன நினைக்கிறான்?' என்று அறிய ஆவலுற்றேன். பெண்ணழகை மதிப்பிடு வதிலே திறமை வாய்ந்தவன் என்று சொல்லிக் கொள்ளும் மகாதேவன் அவளைக் கண்டதும் வியப்புற்றான் என்று, அவன் என்னிடம் வாய்விட்டுச் சொல்லாவிட்டாலும், எளிதிற் கண்டு கொண்டேன். ஆனால், அவளைப் பற்றித் தன் சிநேகிதன் ஒருவனிடம் பச்சையாகவும் தாறுமாறா கவும் அவமதிப்போடு பேசியது என் காதில் விழவே, எனக்கு அளவிலடங்காத மன வருத்தமும் ஆத்திரமும் உண்டாயின. எனக்கு இருந்த சொற்பக் கருணையைக் கொண்டு, அவனை மன்னிப்பதோ அவனோடு போராடா மல் இருப்பதோ பெருங் காரியமாகிவிட்டது.

*பத்தாவது அதிகாரம்*

## பழக்க வழக்கங்களில் நேர்ந்த சில மாறுபாடுகளைச் சிறிது குறிப்பிட்டு, பிற்காலத்திய அபிப்பிராயங்களிற் சிலவற்றையும் கூறுவது

என் சிற்றப்பனோடு வசிக்க நான் சென்னைக்கு வந்த போது, அவன் 'இன்ஜினீரிங்' படித்துக்கொண்டிருந்தான். சொந்தச் சிப்பந்தி வைத்து, தனிக் குடித்தனம் போட்டி ருந்தான். அவன் நண்பன் ஒருவன் ஒட்டுக் குடியாக அவனோடு இருந்தான். அவர்கள் இருவரும் வேலையா ளாக ஒரு மராட்டியச் 'சூத்திர'னை அமர்த்தியிருந்தார்கள். அவன் பின்கட்டில் இரண்டு அறைகளிலே குடியிருந்தான். அவனே அவ் விருவர்களுக்கும் வேண்டிய சிற்றுண்டிகள் உட்பட காபி டீ யாவும் தயாரித்துக் கொடுப்பான். இரண்டு வேளைச் சாப்பாட்டை மட்டும் அதே தெருவிலிருந்த

சாப்பாட்டு விடுதியிலிருந்து ஒரு பிராம்மணப் பையன் கொண்டுவந்து கொடுப்பான். பண்டைக்கால வைதிக விதிவிலக்குகளை மீறி, சுயேச்சையை ஆதரிக்கும் எண்ணங் களிலும் சர்வ ஜன சமரச நோக்கத்திலும் கொள்கைகளிலும் பழகிய எனக்கே, பிராம்மணல்லாதான் ஒருவன் கையாற் செய்யப்பட்ட உண்டிகளை உண்பதில் அருவருப்பு நீங்கு வதற்கு ஒருவார காலம் வேண்டியதாயிற்று; ஆயினும், அதிசீக்கிரமாகவே சம்மாளித்துக் கொண்டதோடு நில்லாமல், பறையர் நடத்தும் சிற்றுண்டிச் சாலைகளுக்கும் போஜன விடுதிகளுக்கும் ஸங்கோசமின்றி என் ஆதரவைக் காட்டலானேன். அவ்விடங்களில் கள்ளுச் சேர்த்துச் செய்த ரொட்டி, ஐஸ்கிரீம், டீ, காபி, கோலா, சோடா, லெமனேட், பிஸ்கோத்து, முதலியவற்றைச் சாப்பிட்டேனேயல்லாது, மாமிசமோ சாராயமோ அவை கலந்த ஆகாரங்களோ ஒன்றையும் சாப்பிடுவதில்லை; நான் இல்லாதபோது என் சிற்றப்பன் இது விஷயத்திலே அவ்வளவு ஜாக்கிரதையாக இருக்கவில்லை என்றே நினைக்கிறேன்.

தொழிற் படிப்பிற்குரிய வயது எனக்கு ஆகவில்லை என்று, பொதுக்கல்வி பயிற்றும் கலாசாலையொன்றிலே சேர்ந்து 'பி.ஏ.' பட்டப் பரீக்ஷைக்கு வாசிக்கத் தொடங் கினேன்; என் சிற்றப்பனுடைய யோசனைப்படி 'கணக்கு' என்பதை உபபாடமாகக் கொண்டேன். சென்னைக்கு வந்த புதிதில் பட்டணத்துக் காட்சிகள் அனைத்தையும் நான் கண்டு முடியுமுன், 'ஜட்காவாலா'க்கள் என்னை எத்தனை தடவை ஏமாற்றினார்கள் என்று இங்கே நான் விவரிக்க வேண்டியதில்லை. குஜிலிக்கடை யருகிலே நான் உலாவித் திரிந்து பழம் புஸ்தகக் கடை யொன்றில் வைக்கப்பட்டிருந்த புஸ்தகங்களைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது, நோட்டும் ரூபாயுமாக ரூபாய் ஐம்பதிற்கு மேல் இருந்த என் பணப்பை என் உட்சட்டையில் ஜாக்கிரதையாக இருக்கிறது என்று நான் நினைத்துக்கொண்டிருக்க, அது மாயமாய் மறைந்து போயிற்று எனறால், இந்த 'ஜட்காவலாக்'கள் என்னை ஏமாற்றியது எம் மாத்திரம்?

இதை வாசிப்போர் யாவருக்குமே சென்னையிலே மாணவர்கள் மேலெழுந்தவாரியாக வாழும் வாழ்க்கை அனேகமாய்த் தெரிந்திருக்கும். எங்கள் வாத்தியார்களிற்

சிலர் எங்களிடம் பிரியத்துடன் இருப்பார்கள்; வேறு சிலர் எங்களைக் கவனிப்பதேயில்லை. சிலர் திறமை வாய்ந்தவர்கள்; வேறு சிலர் உதவாக்கரைகள், மாணவர் களாகிய நாங்கள் இவர்களைப் பற்றி எங்களுக்குள் கூச்ச மின்றியே பேசிக்கொள்வோம்; பரிகாசமாக அவர்களுக்குப் பட்டப் பெயர்கள் இடுவதும் உண்டு. ஆயினும், நான் ஒரு வருஷகாலம் மட்டுமே படித்த கலாசாலை யொன்றில் இருந்த பெரிய பாதிரி வாத்தியார் ஒருவர் மட்டும் என் மனத்தில் என்றும் அகலாதவாறு அமர்ந்திருக்கிறார். யாவரினும் அவரே சிறந்த கல்விமானும் ஆசானுமாய் இருப்பினும், தம்மைக் காட்டிலும் திறமையிற் குறைந்த வாத்தியார்களுக்குச் சாதாரணமாகக் கிடைக்குஞ் சம்பளத்தில் ஒரு பகுதிதான் அவர் ஊதியமாகப் பெற்றுக்கொள்வது; இப்படித்தம் அருமைத்தாய் நாட்டையும் அதினும் அரிய குடும்பத்தையும் இள வயதிலேயே பிரிந்து வந்து, தூரதேசமாகிய இந்த அயல் நாட்டிலே அறிவையே பத்தினியாகவும் மாணவர்களையே மக்களாகவும் கொண்டு, தம் வாழ்நாளை இங்கேயே கழித்து வருகிறார். மாணவரைப் போலவே தாமும் பிரும்மசாரியாகவே எளிய தனி வாழ்க்கை வாழ்ந்து, தாம் பெறும் சொற்பச் சம்பளத்திலும் சிறிது மிகுத்து, மிகுந்ததோடு தமக்குப் பிது ராச்சிதமாகக் கிடைத்த சொத்தின் வருமானத்தின் பெரும் பாகத்தையும் சேர்த்து, தாம் உழைக்கும் கலா சாலையை அபிவிருத்தி செய்வதிலும் தம் மாணவர்களுக்கு வேண்டிய வசதிகளைத் தேடிக் கொடுப்பதிலும் செலவிடுகிறார். மானுடர்க்கு அமைந்த இயற்கை நற்குணத்திலும் கல்வியைப் பரப்புவதிலும் அவருக்கு அபாரமான நம்பிக்கை இருந்தது. அவரது மனமானது கருணையென்னும் பாலால் நிரம்பப் பெற்றது. உலகாயதக்கொள்கைகளாலும், சுயநலத்தை மட்டுமே கருதித் தமக்குறும் பயனையே எதிர்பார்க்கும் நடவடிக்கைகளாலும், ஸர்வ நாசஞ்செய்யும் நாஸ்திக புத்தியாலும் இருண்டு குழப்பமுற்றிருக்கும் லௌகிக வாழ்க்கையாகிய பெருங்கடலிலே மொத்துண்டு அங்குமிங்குமாய்த் தத்தளிக்கும் வாலிபர்களின் மனங் களாகிய கப்பல்களுக்கு, அந்நாளிலே, ஆத்ம ஸமர்ப்பண மாகிய தியாகச் செயலாலும் தயாளக்கொடையாலும் மேம்பட்டு விளங்கிய அவரது வாழ்க்கையானது, கடலின் நடுவே ஒரு

தனிப் பாறையிலே நாட்டப்பெற்ற தீபஸ்தம்பம் போல ஒளி விசித்திகழ்ந்தது. ஒரு புருஷாயுஸ் முழுவதையும் நிலைத்த நற்பயன்களைப் பயப்பதாயும் தூய உயர் கொள்கைகளைக் கடைப் பிடித்ததாயும் நிகழ்ந்த அவரது பரோபகார வாழ்க்கையை இப்போது நான் நினைத்துப் பார்க்கையில், அவ்வாழ்க்கையின் ஆதிக்கத்திற் குள் என்னை ஒரு வருஷகாலமேனும் புகுத்தியதே என்று தெய்வத்தைப் போற்றுகிறேன்.

என்னுடன் படித்த மாணவர்களுள் புதிதாக அதிகச் சிநேகிதர்கள் ஏற்படவில்லை. எங்கள் வகுப்பு மிகவும் பெரிது. கலாசாலையை விட்டு வெளியே வந்தாலோ, நாங்கள்,பெரிய பட்டணத்திற் பல இடங்களிலே பரவி இருந்தமையால், ஒருவரை யொருவர் சந்திப்பது அபூர்வம். கலாசாலையில் வாதச் சங்கங்கள் சில உண்டு; இங்கிலாந்து மன்னனான முதலாவது சார்லஸ் என்பவரைக் கொலை செய்தது சரியா? கட்டுக்கடங்கிய அரசு மேலா, அல்லது சர்வஜன ஆட்சி மேலா? முதலாவது நெப்போலியன் சீரழிந்து கெட்டதற்கு உண்மைக் காரணங்கள் யாவை? கொலையாளி என்று வக்கீல் அறிந்துகொண்டும் அக் குற்றவாளிக்காக நியாயசபையில் முன் வாதாடலாமா? இந்திய ஸ்திரீகளையும் புருஷர்களோடு கலாசாலைகளிற் படிக்க விடலாமா? கட்டுப்பாடில்லாமல் சுயேச்சையாய் வியாபாரம் செய்ய வசதி அளிப்பது நல்லதா? சகல ஜனங்களுக்கும் வாக்குரிமை அளிக்க வேண்டாமா? இவை போன்று முக்கியத்துவம் பெற்று உபயோகமுள்ளவை யான பல விஷயங்களையும் பற்றி நாங்கள் பேசி வாதாடி நிர்ணயிப்போம். இவ்வாதங்களில் எல்லாம் நான் அதிக ஊக்கஞ் செலுத்துவேன். 'இங்கர்ஸால்' என்பவரின் சொல்வன்மையை நான் நன்கறிந்து பின்பற்றினவன்; ஆதலால், நான் பேசுகையில் என் நண்பர்கள் காதைத் துளைக்கும்படி கரகோஷம் செய்வார்கள். சாதாரணமாக, நான் அதிகம் பேசாமல் நாணியொதுங்கி நடப்பவன் ஆகையால், இப்படி நான் பொதுச் சபையிலே பேசும் பேச்சு என்னை உற்சாகப்படுத்தி, அப்படிப் பேசுவது முக்கியம் என்று எனக்குத் தோன்றும்படியான பிரதானி யத்தைப் பெற்றது. 'இங்கர்ஸா'லின் நல்லாவியே! அன்று, அவர் மரணமடையு முன் 'இங்கர்ஸா'லாக இருந்து

இப்பொழுது பூச்சியும் புழுவுமாய் இருப்பவைகளே!- ஆவியோ, ஆத்மாவோ ஒன்றும் இல்லை என்று மறுத்தவர் ஆயிற்றே அவர்! உங்களுக்கு நான் மிகவும் கடன் பட்டவன்; ஆனாலும் இவ்விஷயத்தில் நான் துக்கப் படுகிறேனே யொழிய, உங்களுக்கு நான் யாதொரு நன்றியும் செலுத்த இடமில்லை - நீங்கள் 'இங்கர்ஸா'லாகிச் செய்த பிரசங்கங்களை யெல்லாம், 'டால்மே'ஜை எதிர்த்து வாதாடி நீங்கள் விடுத்த சொற்பாணங்களை யெல்லாம் மனப்பாடமாய், அறிந்து ஒப்பிப்பதில் உற்சாகங் கொண்ட எனக்கே, ஒருவாக்கியம் மட்டுமே இப்பொழுது ஞாபகத்தில் இருக்கிறது. அவ் வாக்கியத்தை இங்கே எடுத்துக்கூறி, உங்களிடம் எனக்குள்ள எல்லாக் கடமைகளினின்றுமே என்னை முற்றிலும் விடுவித்துக் கொள்கிறேன்; "வெளிப் படையான மேனியழகு நாளாவட்டத்திலே குன்றியழியும் போது, யாருங் காணாமலே மறைந்திருந்து வேலை செய்யும் 'ஆலோசனா சக்தி' என்னும் கைதேர்ந்த சிற்பி யானவன் முகமண்டலத்திலே அகத்தழகைக் குறிக்கின்ற சுருங்கு வரிகளை அமையாமலிருந்தால், பின்பு என்ன இருக்கின்றது? எல்லாம் வீணாகிவிட்டதன்றோ? கவர்ச்சி யொளியும் போயிற்று; திரைந்து சுருங்கிய மட்கலத்தை ஒளியுடையதாக்கிய ஞானதீபமும் அவிந்தே போயிற்று."

இத்தகைய வாக்குத் திறமை யுடையவர் யெளவன தசையினாலே கனிந்த மனமுடைய இளைஞரின் ஒளிய உள்ளத்தைப் பிரமிக்கச் செய்து தம் வசமாக்கினார் என்றால் அது ஓர் ஆச்சரியமா?

## பதினொன்றாவது அதிகாரம்

# போலி நாணமுடையோரும் அறியாதவர்களும் படியாது விடக்கூடிய சம்பவமொன்றைக் கூறுவது

கோடை விடுமுறை நாட்களில் நான் ஊருக்குச் சென்றபோது, என் சிற்றப்பன் என்னுடன் வரவில்லை,

பட்டணத்திலேயே இருந்துவிட்டான். நானோ, என் தாயாரால் நன்கு சீராட்டிப் பாராட்டிப் போஷிக்கப்பெற்று, தில்லையிலே சுகமாய்ச் சோம்பேறியாய்ச் சில வாரம் கழித்துவிட்டு, பட்டணத்திற்குத் திரும்புமுன் என் வேட்டகத்தாரோடு சில நாள் இருந்து அவர்களைக் கௌரவிப்பதற்காக என் மனைவி பிறந்த ஊருக்குச் சென்றேன். இப்பொழுது நான் வேண்டிய மட்டும் என் மனைவியைக் காண முடிந்தது. ஒருவரோடொருவர் நேர்முகமாகப் பேச முடியாது போனாலும், மற்றொருவரும் கவனிக்கவில்லை என்று நாங்கள் எண்ணிய போதெல்லாம் கண்ணுடன் கண் கலந்து, அன்பு மொழிகளாகிய நோக்கங்களால் ஆசை கூர்ந்து மகிழ்ந்தோம். இதை யாரேனும் காண நேர்ந்து பரிகாசஞ் செய்தால், அவள் மனமகிழ்ந்து, கன்னஞ் சிவக்க நாணமுற்று உள்ளே ஓடிப்போய் விடுவாள். அவள் என் முன்னிலையிலோ அருகிலோ உட்காரவோ நிற்கவோ தோன்றவோ மாட்டாள். ஆகையால், அண்டை வீட்டிலிருந்தேனும், வாய்க்காலினின்று தண்ணீர் மொண்டு கொண்டேனும் தெருவாசல் வழியாக வீட்டிற்குத் திரும்பும் சமயத்திலே நானும் தெருத் திண்ணையிலே உட்கார்ந்திருந் தால் மட்டுமே, நாங்கள் இருவரும் இவ்வாறு கண் ஜாடைகளால் ஆசை மொழிகளைப் பேச முடியும்; அவ்வேளைகளில், அவள் வீட்டிற்குள் நுழைந்து மறைந்து போகும் வரையில், நாங்கள் மெல்லத் தந்திரமாய்ச் சில வினாடிகள் கடைக் கண்களால் ஒருவரையொருவர் கண்டு கொள்ளத் தருணம் வாய்க்கும். அப்படிப்பட்ட தருணங் களில், நான் முற்றிலும் தனித்து இருந்தால், அவள் என்னைக் கண்டதும் மெல்ல நடப்பவளாய் வெள்கிய முகத்தோடு என்னையே பார்த்த வண்ணம் சிறுச் சிறிது புன்னகை கொள்வதைக் கண்டேன்; அல்லது புன்னகை கொள்கிறாள் என்று நான் நினைத்துக் கொண்டேன் என்றே வைத்துக் கொள்ளுங்கள். ஒருமுறை, நான் மனத் துணிவு கொண்டு அவளிடம் ஏதோ பேசத் தொடங்கினேன். ஆனால் என் ஆசை நாயகி என் துணிச்சலைக் கண்டு திகைத்துப் போய் வெட்கத்தால் முகஞ் சிவக்கவும் உள்ள மகிழ்ச்சியால் புன்னகை தோன்றவும் ஓடிப்போய் விட்டாள். அப்பொழுதுதான் அவள் நாளுக்கு நாள்

வளர்பிறைபோல் வளர்ந்து பெண்மையால் நிறைந்து தோன்றும் சமயம்; அவள்மீது எனக்குள்ள ஆசை அளவு கடந்தது என்று உணரலானேன். அவளுக்கு எழுதப் படிக்கத் தெரியாது என்பதும், அவளைப் பள்ளிக்கூடத் திற்கு அனுப்பியோ வீட்டிலேயே சொல்லிக் கொடுத்தோ படித்தவளாகச் செய்ய வேண்டி நான் வணக்கத்துடன் செய்த பிரார்த்தனையை எங்கள் இருவருடைய தாய் தந்தையரும் மறுத்துவிட்டார்கள் என்பதும் உண்மையே. ''ஆனால் என்ன? என்னோடுகூட வந்திருக்க வேண்டிய வளே ஆகையால், அப்பொழுது இந்தக் குறையைப் பூர்த்தி செய்துவிடலாம்'' என்று எண்ணினேன். இப்பொழுதே வீட்டு வேலைகளில் எல்லாம் கெட்டிக்காரி யாய் இருப்பதையும் பழக்கப் பழக மேன்மேலும் விருத்தி யாகக் கூடிய இனிய மென் குரலையுடையவள் என்பதை யும் கண்டறிந்து களிப்புற்றேன். கள்ளங் கபடறியாத அவளது அழகிய முகத்தைப் பிரதி தினமும் ஆவலோடும் ஆச்சரியத்தோடும் கண்ணுற்று என்னிடம் சுபாவமாயும் களங்கமில்லாமலும் மனத்தைக் கவரும்படி யாக நடந்து கொண்ட வினயத்தையும் கவனித்தறிந்த நான் அவளால் அரியதோர் இல்லற சுகத்தை அடைவது திண்ணம் என்று உறுதிகொண்டேன்; அதனால், கூட கோபுரங்கள் வாய்ந்த அனேக மனக்கோயில்களைக் கட்டி, அந்தக் கோயில்களில் எல்லாம் அவளையே உள்ளுறை தெய்வமாக மூலஸ்தானத் திலே இருத்தி, நானும் ஏகாந்த மாய் அன்பு மிகுந்தொழுகு கின்ற பக்தனாய் அவள் முன்னிலையிலே தனித்து நின்று யாதொரு தடங்கலுமின்றி அவளை வழிபடலானேன். இந்த என் புயங்கள் இரண்டையும் அவள் வந்து அணையும் போது, நிஷ்களங்கமாய் அன்பால் நிறைந்த அவளது இருதயத்தை அதுபோன்றேயுள்ள எனது இருதயத்தோடு கட்டி யணைத்தற்கு உரியவனாய் இருக்க வேண்டும் என்றும், அவள் பொருட்டு என்னை உள்ளும் புறமும் முற்றிலும் பரிசுத்தமாக என்றும் வைத்துக் கொள்ள வேண்டும் என்றும், பொறுக்கி யெடுத்த வார்த்தைகளைக் கொண்டு நீண்டதொரு சங்கற்பத்தைச் செய்து, அதற்கேற்ற புண்ணிய விரதத்தை, மேற்கொண்டேன். அவளது ஒப்புயர்வற்ற அழகிய வடிவம் என் கண் அகலாது

எப்பொழுதும் இருந்ததால், ஒருவேளை நான் பிசக முயன்றாலும் என் விரதம் பங்கப் படுவது அசாத்தியம் என்று எண்ணினேன். அக்காலத்தில் நான் மாசில்லாத ஆனந்தத்தை யடைந்ததையும் அப்பொழுது மேல் வரப்போகும் இன்ப சுகங்களைக் குறித்து நான் கண்ட ஆசைக் கனாக்களையும் இப்பொழுது பின்னோக்கி நினைவிற்குக் கொண்டு வரும்போது, என் வாழ்நாட்கள் முழுவதிலும், அந்நாட்களுக்கு முன்பேனும், பின்பேனும் எப்பொழுதேனும், அவ்வளவு ஆனந்தத்தை அடைய வில்லை என்றே உணர்ந்துகொண்டேன். என்னைக் காக்குந் தெய்வமாக விளங்கியவளிடம் மற்றொருவகைக் காதல் என் உள்ளத்திலே குடிகொண்டிருந் ததும், முன்னிலும் சிறிது நெருங்கிப் பழக நேர்ந்ததால் அக்காதல் இத்தறுவாயில் பாவன குணத்திலும் பலத்திலும் முற்றி முதிர்ந்திருந்ததும் மெய்யே; ஆயினும், சாந்தகரமான அந்த தெய்வீகக் காதல் என் மனைவியிடம் இருந்த உண்மை யான மானுடக் காதலைப் பாதிக்கவில்லை; அது எனக்கு லக்ஷ்யப் பொருளாய் என்னால் எட்டிப் பிடிக்க முடியாத உயர் நிலையில் இருந்தது; எனக்குக் கிட்டக்கூடிய தாய் மட்ட நிலையிலுள்ளதாயின், அது தெய்வீகம் வாய்ந்த லக்ஷ்யப் பொருளாகுமோ? சாதுரியமாகவும் சுருக்கமாகவும் கவி பின்வருமாறு கூறியுள்ளாரன்றோ?

''மக்கள் மிக முயன்று பெறும் பேற்றினுக்கும் அப்பால் இருப்பது உள்ளத்து லக்ஷ்யம்; இராவிடின் வான் என்பது எத்ற்கு?''

என் உள்ளக்கோயிலிலே நிலை பெற்ற இவ்விரண்டு தெய்வங்களையும் தன்னகத்தே கொண்ட அவ்வூரை விட்டுப் புறப்பட வேண்டிய காலம் வந்தபோது, அவ்விரு வர்களுள் ஒருவருடன் என் வாழ்நாள் முழுவதையும் இனிது கழிப்பதற்கு என்னைத் தயார் செய்து கொள்ளவே நான் பிரிந்து செல்கிறேன் என்ற எண்ணத்தாலும், நான் வாழ்க்கையில் வெற்றி பெறுவதைக் கண்டு அவ்விருவர் கண்களும் மகிழ்ந்து ஒளி வீசாது அமைய மாட்டா என்ற நம்பிக்கையாலும் என்னையே நான் தேற்றிக் கொண் டேன். அச்சமயத்தில், 'பைரன்' என்னும் கவிஞர் கூறிய உயர்ந்த கருத்துக்கள் என் உள்ளத்திலே பிரதிபலித்தன:

''எந்த நாளினும் எவரினும் ஏற்றமா இயல்பும்
முந்து நாவுரை நசைந்துனை முயன்றிவன், புகழே,
என்ற னாருயிர் நிலையனாள் என்பெருங் காதற்
கந்த நாண்மலர் தகவெனக் காதல் என்கருத்தே.
புகழ்க்குழைத்ததும் புகழ்புரிந்ததும் அவள் பொருட்டே,
திகழ் அனாள் திருநோக்கமே கீர்த்தியின் நிலவும்;
மகிழ்வொடென் செயல்கேட்டவள் மான்வழி மதர்க்கின்
நிகழ்மனக்குறி யுணர்ந்து 'அதேபுகழ்' என நினைத்தேன்''

என்று அவர் பாடினாரன்றோ?

இப்படியாக நான் சென்னைக்குத் திரும்பியபோது, என் இயல்பு வெகுவாய் மாறிவிட்டது. அவ்விளமைக் காலத்தில் நான் அடைதற்குரிய புகழை நாடி, மிக்க ஆவலோடும், ஊக்கத்தோடும் படிப்பில் ஈடுபட்டேன்; அதன் பயனாக அதி சீக்கிரத்தில் கடுஞ்சுரம் கண்டு படுத்த படுக்கையாய்க் கிடந்தேன். அப்பொழுது என் சிற்றப்பன் ஊரில் இல்லை. மேடு பள்ளங்களைக் கணித்துக் கண்டறியும் வேலையைக் கற்றுக் கொள்வதற்காக, பட்டணத்திற்கு அருகாமையிலுள்ள இடத்திற்குப் போயிருந்தான். ஆயினும், வைத்தியரின் திறமையாலும், எங்களோடு ஒட்டுக் குடியாய் இருந்தவரான என் சிற்றப்பாவின் நண்பர் என்னிடமுள்ள பிரியத்தால் என்னைக் கவனித்துப் போஷித்து வந்ததாலும், நோய் குணப்பட்டது. சிற்றப்பனோடு பழகுவதைக் காட்டிலும் சகஜமாகவே இந்த நண்பருடன். பழகியிருந்தேன். சிற்றப்பனிடம் எனக்கு இருந்த மட்டு மரியாதையும் ஒளிவு மறைவும் இவரிடம் எனக்கு இல்லை. இவர் வியாபார ஸ்தலம் ஒன்றிலே குமாஸ்தாவாக இருந்தார்; நல்ல குணம்; ஸரஸமான ஸ்வபாவம். சுரம் விட்டபின் என் உடம்பு தேறிக்கொண்டு வந்த நாட்களில் ஒருநாள், சாயங்காலம் இவர் வேலை முடித்துக்கொண்டு வீட்டிற்குத் திரும்பி வருமுன், ஆழ்ந்த தூக்கத்தினின்றும் நான் விழித்துக் கொண்டு அதிக தாகமாயிருந்ததால், 'ரங்கா, ரங்கா' என்று எங்களுக்குச் சகல வேலைகளையும் செய்துவந்த மராட்டிய வேலைக்காரனைக் கூப்பிட்டேன். ஒன்றும் பதில் இல்லை. தாகம் பொறுக்க முடியாதிருந்ததால் மீண்டும் மீண்டும் நான்

உரக்கக் கூவினேன். அப்பொழுது அவன் குடியிருக்கும் பக்கத்திலிருந்து பிராம்மண யுவதி யொருத்தி வெளியே வந்து, தூணுக்குப் பின் பாதி மறைந்து நின்று, "என்ன வேண்டும்? ரங்கன் ஏதோ வேலையாக வெளியே போயிருக்கிறான்" என்று நாணிய குரலிலே தெரிவித்தாள். "தாகத்திற்குத் தண்ணீர் வேண்டும்" என்றேன்; அவளும் தண்ணீர் கொண்டுவர உள்ளே சென்றாள். 'அவள் யார்? எங்கள் வீட்டிற்கு எப்படி வந்தாள்?' ஒன்றும் எனக்குப் புரியவில்லை. அவளோ இளம் பெண்; வயது பதினேழுக்கு மேல் இராது. கட்டழகி என்று வர்ணிக்க முடியாது என்றாலும் 'மூவைந்து பதினைந்தானால் மூளியும் பெண்ணாவாள்!' என்னும் வசனப்படி, இளமையும் திட சரீரமும் ஆரோக்கியமும் கூடி, பெண்டிருக்குரிய வனப்பு கள் யாவும் வாய்ந்தவளாயும், விகாரங்கள் ஏதுமில்லாத படியால் கண்ணுக்கு இனியவளாயும் தோன்றினாள். அவள் பிராம்மணப் பெண். ஆகையால் ரங்கனுடைய மனைவி யாக இருக்க முடியாது. அவனுடைய அறையிலே வைப்பாட்டி ஒருத்தி இருந்ததாகவும் அதுவரை எனக்குத் தெரிய வராது. உண்மையிலே, நான் அந்த வீட்டிற்கு வந்து பதினைந்து நாட்களுக்கு மேலாகியும், அங்கே ஒரு ஸ்திரீ வசிப்பதாக நான் எள்ளளவும் சந்தேகப்படவில்லை. 'டம்ள'ரில் ஜலத்தைக் கொண்டு வந்து அவள் என் கையிலே கொடுத்தபோது, நான் எவ்வளவோ ஜாக்கிரதை யாக இருந்தும், அவள் கை என் கைமேற் பட்டது. உடனே அவள் நாணி முகஞ் சிவந்தவள் போல் ஜாலங் காட்டிப் புன்னகை செய்தாள். அவளுடைய ஸ்பர்சமும் செய்கை யும் புதியதோர் ஆத்திரத்தால் என் உடல் முழுவதையும் பூரித்துச் சிலிர்க்கச் செய்தன. என் மனத்திலே உற்சாகம் பொங்கிக் கொந்தளிக்கவே, வெறி கொண்டாற்போல என் இருதயம் படபடத்தது. நாக்குழறி, மனம் தடுமாற, 'நீ யார்?' என்று அவளைக் கேட்டேன். அதற்கு அவள், "நானா? ரங்கனோடு கூட இருக்கிறேன். உங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும், உங்களோடு பேசவேண்டும் என்று எனக்கு எவ்வளவோ ஆசை" என்று பதிலுரைத்து, எனக்குச் சுரம் அப்பொழுது இருக்கிறதோ இல்லயோ என்று பாாக்கும் பாவனையில் என் சட்டைக்குள்ளே கொழ

கொழ வென்றிருந்த தன் சிறு கையை விட்டு என்னைத் தொட்டுப் பார்த்தாள். உடனே காமவெறியால் என் இருபுயங்களாலும் அவளை வாரித் தழுவி என் மார்போடு அணைத்துக்கொண்டேன். அவள் என் படுக்கையை விட்டு நீங்கியபொழுதே, நான் முற்றிலும் வேறுபட்டவனாகி விட்டேன். தகாதென்று விலக்கப்பட்ட கனியை உட்கொண்டவன் ஆனேன்; பிற்சுவை தாங்க முடியாத அருவருப்பை எனக்குத் தந்தது. அப்பொழுது எனக்கு உற்ற மனக் கசப்பிற்கு ஈடு எதிர் உண்டோ? என்றுமே, சாந்துணையுமே, அந்த அருசி என்னால் மறக்க ஒண்ணாதது. என் மனைவியின் உருவமும் என் காப்புத் தெய்வமான மற்றவளின் உருவமும் என் மனக்கண் முன் விரைந்து வந்து தோன்றின. விசனத்தாலும் நிந்தையாலும் நிறைந்து விஷந் தீட்டிய பாணங்களைப் போல, அவ்விருவருடைய நோக்குகளும் என்னைச் சித்திரவதை செய்தன. நான் கொண்டிருந்த விரதத்திற்குப் பங்கம் நேர்ந்ததால் எழுந்த அவமானமும் கிலேசமும் என் மனத்தைத் துன்புறுத்தின. என்னிடம் நித்தியமாயும் தெய்விகமாயும் நிலைபெற்றிருந்த ஓர் அமிசத்தை நான் மீட்க முடியாதவாறு இழந்து விட்டேன் என்றும், என்னிடம் எஞ்சியிருந்தது மிருகத் தனமே என்றும் எனக்குப் புலப்பட்டது. இனி என்றேனும் என் மனைவிக்கு அவளுடைய இருதயத்தைப் போன்று மாசற்ற தூய இருதயத்தை நான் சமர்ப்பிக்கச் சொப்பனத்திலே கூட முடியுமோ? எங்கள் புதுமணப் பாயல் தூய கன்னிச் சுவர்க்கமாய் விளங்கும் என்று ஆதி முதற்கொண்டு ஓயாமல் கண்டு களித்துக் கொண்டிருந்த பகற்கனா முழுதும் பாழாகிவிட்டதே. சற்று முன்புவரை பூர்ண சந்திரனைப்போலே பிரகாசித்துக் கொண்டிருந்த எனது நற்பெயர், இப்பொழுது இனி என்றுமே தூயதாக்க முடியாத வண்ணம் கறையுண்டு கரியாகிவிட்டதே! அந்தோ! என்ன கொடுமை!

"நாட்கள் வாரங்களாகி, வாரங்கள் மாதங்களாகி, மாதங்கள் பல கூடி வருஷங்களாகி, ஆண்டுகள் பல்சென்று நூற்றாண்டுகள் ஆயினுமே, என்றுமே என் பெயர் நிந்தைக்கோர் இலக்காகவே நிற்குமன்றோ?"

விவாக முகூர்த்த சமயத்திலும் அதையொட்டி நடந்த வைதிகச் சடங்குகளிலும், ஒருவர் பக்கத்தில் ஒருவராய், கையிலே கையைப் பிடித்துக் கொண்டு அக்கினி பகவானின் முன்னிலையில் நின்றபோது, எனக்குத் தன் காதலை இடைவிடாது ஞாபகப்படுத்துவதற்கு அறிகுறியாக என் கையை மெல்ல அமுக்கி, வெட்கிய முகத்திலே இனிய புன்னகை தோன்ற நின்ற கட்டழகியான கன்னி, என் செல்வப் பெண்ணாட்டி, இப்பொழுது என்னைப் பற்றி என்ன நினைப்பாள்? எனக்குக் காப்புக் கடவுளாய் விளங்கும் மற்றவளும் என் உடலம் கறைபட்டு மாசுண் டதை அறிந்தபோது என்ன நினைப்பாள்? ஏனெனில், இனி யாரும் என் முகத்தைப் பார்த்த மாத்திரத்திலே என்னை 'பாபகிருத்தியன்' என்று சுட்டிக் காட்டக்கூடும் என்பதில் எனக்குச் சிறிதேனும் சந்தேகம் ஏற்படவில்லை. 'நான் செய்த குற்றமானது யாராலும் துடைக்க முடியாதபடி என் முகத்திலே கல்வெட்டைப் போலப் படிந்துவிட்டது; அதை இனி ஒரு பொழுதும் மாற்றிவிட முடியாது' என்றே எனக்கு அப்பொழுது தோன்றிற்று.

அந்தோ! உண்மையில், நான் என்ன செய்து விட்டேன்? வினாடிப் பொழுது இன்புறுவதற்காக என் வாழ்நாள் முழுதுமுள்ள முற்றின்பத்தைப் பாழாக்கி விட்டேனே! இதற்குப் பரிகாரம் ஒன்றும் இல்லையே! நான் செய்த அகிருத்தியம் அவ்வளவு கொடிய பாபமன்று என்றும், என் பெயரின்மீது படர்ந்த மாசு அவ்வளவு இருண்டதன்று என்றும் போலி நியாயங்களைச் சிருஷ் டித்துக்கொண்டு, அவள் என்மீது உண்மைக் காதல் கொண்டவள் என்று நான் என் மனச் சாட்சியை ஏமாற்றிக்கொள்ளாத வண்ணமாய், கொழுந்து விட்டு எரிகின்ற தீயிலே எண்ணெயை வார்ப்பவளாய், தீங்கு ஒன்றுமே அறியாத எனது நிஷ்களங்கமான தூய்மையை யும் ஆனந்த நிலையையும் ஒருங்கே குலைத்து நாசஞ் செய்த படுமோசக்காரி, மீண்டும் என் படுக்கைக்குவந்து, என் அருகில் உட்கார்ந்து, என்மீது மெல்லச் சாய்ந்து கொண்டு, "ஒரு வாரத்தில் திரும்பித் தருகிறேன்" என்று இரண்டு ரூபாய் கடன் கேட்டாள். மனம் நொந்து யோசனை

யில் ஆழ்ந்திருந்ததால், முதலில் அவள் திரும்பி வந்ததை நான் கவனிக்கவில்லை. அப்புறம் விழித்துக்கொண்டு, என்னைக் கொஞ்சி யணைக்கவந்த அவளது கைகளை உதறித் தள்ளி அவள் முகத்தையும் விழித்துப் பார்க்கவே, அவள் என்னை ஒரு நிமிஷம் உற்றுப்பார்த்துவிட்டு, பயந்துபோய் அதிவேகமாய்ப் பின்வாங்கி உள்ளே போய்விட்டாள். 'அவள்மீதும்; அவளைச் சற்றும் யோசனைசெய்யாமல் என் வழியே வரும்படி விட்டு வைத்த என் சிற்றப்பன் மீதும் உயிர்ப் பழி வாங்கியபின், என்னையும் மாய்த்துக் கொள்வது' என்று அப்பொழுது தான் நான் ஆழ்ந்து யோசனை செய்து கொண்டிருந்த சமயம். கொண்ட விரதத்தை அனுஷ்டிக்க முடியாமல், பாபச் செயலைச் செய்யுமளவிற்குக் கோழைமனத்தை யுடையவனே என்றாலும், 'செய்த பின்னேனும் மனம் வருந்தி, பாபத்தின் விளைவாகிய மரணத்தை ஏற்குமளவு மனோதிடமுள்ளவன்' என்பதை என்னுடைய காப்புத் தெய்வமாகியவளுக்கும் என் மனைவிக்கும் ருசுப்படுத்தி, மரணத்தை மேற்கொள்வதால் அவர்கள் இருவரும் துன்புற்றுக் காட்டும் அனுதாபத்தையும் மதிப்பையும் பெற எண்ணினேன். தன் மனமே தன்னை இகழ, அவமான மடைந்து உயிர் வாழ்வதிலும் மரணத்தையே மேலாக மதித்தேன். என் மனக்கசப்பை அந்தப் பெண்ணின் சொற் கள் எவ்வளவோ அதிகப்படுத்தின. எவ்வாறு என்றால், விளக்குகிறேன். 'கோலாற்'றுத் தங்கச் சுரங்கங்கள் இரண்டு கிடைப்பதாய் இருப்பினும், மனமார (என்னுடையதும் என் மனைவியுடையதுமான) எங்கள் இருவருடைய வாழ்க்கை யின்பத்தையும் ஒருங்கே இவ்வாறு இழப்பதற்கு இணங்க மாட்டேன். அப்படிப்பட்ட அரும் பொருளையன்றோ கேவலம் இரண்டு ரூபாய் மதிப்புள்ள அற்ப சுகத்திற்காக விற்றுத் தொலைத்து விட்டேன்; அந்தோ!

சரி, பாபமோ பண்ணியாய் விட்டது; இனி தன் பலனை அனுபவிக்க வேண்டியது தானே! நான் ஒரு மதத்திலும் கட்டுப்படாமல் சுயேச்சையாய் இருந்தவன். யாரும் என்னைக் கட்டாயப் படுத்தவில்லை. சுதந்திரனாய், புத்திசாலியாய், இங்கர்சால், ப்ராட்லா, பெஸண்ட்,

ஹக்ஸ்லி, டின்டால், ட்ரேபர் முதலிய பெரியோர்களின் சிஷ்யனாய், தானே தனக்குள்ளே தீர்க்காலோசனை செய்து, காரணங்களைக் காட்டி, தெய்வம் என்று ஒன்று இருக்கிறது என்பதை மறுப்பதற்குரிய மனோதைரிய முடையவனாய், நம் நாட்டிலே புராதனமாய்ப் போற்றப் பெற்று வருகின்ற கொள்கைகளைச் சீர்தூக்கி அவற்றிலே குற்றங்குறைகளைக் காணுமளவிற்குத் துணிவு கொண்ட வனாய், இவ்வளவு மனோபலம் வாய்ந்த மேதாவியாய் விளங்கும் நானே, உலகத்தில் எவருமே நிர்ப்பந்தித்து, 'செய்' என்று ஏவ முடியாத பாப காரியத்தை நானாகவே மனதாரச் செய்துவிட்டு, அன்றாடம் வயிறு வளர்ப்பதற்காக மானத்தை விலைப்படுத்தும் அறிவிலியான அபலைப் பெண்ணையும், காதவழிக்கு அப்பால் வேலை மேற் சென்றிருக்கும் என் சிற்றப்பனையும் பழி கூறுவது எத்துணை நியாயமாகும்! இந்த எண்ணம் மனத்திற் பிறக்கவே பயங்கரமான புன்னகை என் முகத்திலே தோன்றிற்று. ''ஆம்! பாபம் செய்தவன் மட்டுமே பாபத்தின் பயனை அடைய வேண்டும; ஆதலால் என் உயிரை மட்டுமே மாய்த்துக் கொள்வேன். ஆயினும்அப்படிச் செய்யுமுன், ஒரு விதத்திலே என் சிற்றப்பனும் இதற்குக் காரணமானான் என்பதை அவன் அறிய வேண்டும்'' என்று தீர்மானித்தேன். அவனுக்குத் தெரிவிப்பதில் எனக்கு ஒருவிதக் குரூரமான திருப்தி; 'நியாயத்திற்குப் பிராணனை விட்டவன்' என்று பிறர் அறிந்து மெச்ச வேண்டும் என்ற ஆசை யாருக்குத்தான் இல்லை? ஆகையால், என் சிற்றப்பனுடைய நண்பர் வரும்வரையும் காத்திருந்து, எல்லாவற்றையும் அவரிடம் சொல்லிவிட்டு, பிறகு, பயனற்றதாயும் வெறுக்கத் தக்கதாயுமுள்ள இவ்வுடலைத் தாங்கிப் பூபாரமாய் இராமல் என்னை மாய்த்துக் கொள்வது என்று தீர்மானித்தேன்.

என் சிற்றப்பனுடைய நண்பர் தாம் வேலை பார்த்த பண்டசாலையினின்றும் வருவதற்குத் தாமதமாயிற்று. அதற்குள் இப்படி வெறி பிடித்தவன் போல் தவித்த எனக்கு; பித்தாவேசத்தால் மீண்டும் கடுமையான சுரம் கண்டுவிட்டது. அவர் வந்ததும் நான் படும் அவஸ்

தையைக் கண்டு வைத்தியரை உடனே வரவழைத்தார். யாதொரு காரணமுமின்றி இப்படித் திடீரென்று சுரம் திருப்பிக் கொண்டதே என்று அவரும் சற்றுப் பயந்தவராய் என் சிற்றப்பனுக்கு ஆள்விடச் சொன்னார். இப்படிச் சுரம் திரும்பியது ஒருவாறு எனக்குச் சந்தோஷந்தான்; தற்கொலை செய்து கொள்ள வேண்டிய சிரமம் இல்லை என்று எண்ணினேன். சுரம் வரவர அதிகரித்தது. என் சிற்றப் பன் திரும்பி வருமுன் ஜன்னி கண்டு புலப்பமும் ஏற்பட்டு விட்டது. என் நிலைமையைக் கண்டதும், சிற்றப்பனும் மிகப் பயந்தவனாய் என் தாய் தந்தையர்க்குத் தந்தி அனுப்பினான். புலப்பத்திலே நான், 'என் சிற்றப்பனும் அவனுடைய நண்பனும் சேர்ந்து ஸ்திரீ சுகம் என்பதே அறியாத என் கன்னித் தூய்மையைக் கெடுத்து, என்னை யும் தங்களைப் போல், கட்டுங்கடங்காத விடனாகச் செய்யும் துர்எண்ணம் கொண்டார்கள்' என்று அவர்கள்மீது குற்றஞ் சாட்டினேன் என்றும், அந்தப் பெண்ணைப் பற்றி மாறி மாறி வருந்தியும் மெச்சித்தும் சிலாகித்தும் பழி தூற்றியும் பிதற்றினேன் என்றும், பின்னால் அவர்கள் என்னிடம் சொன்னார்கள். வேறு என்னவெல்லாம் புலம்பினேனோ, முக்கியமாய் என் மனைவியைப் பற்றியும் எனக்குக் காப்புத் தெய்வமாகியவளைப் பற்றியும் என்ன பிதற்றினேனோ, அதை யெல்லாம் அவர்களிட மிருந்து தெரிந்துகொள்ள முடியவில்ல. ஆனால், மூன்றா நாள் எனக்கு மீண்டும் ஸ்மரணையுண்டாகி என் தாய் தந்தையரும் என்னை வந்து பார்க்கும்போது, அந்த மராட்டிய வேலைக்காரனும் பிராமணப் பெண்ணும் வீட்டிலே இல்லை; அதற்குப் பின் ஒருபோதும் நான் அவர்களை எங்கேனும் கண்டதும் இல்லை. தந்தி கிடைத்த நிமிஷம் முதற்கொண்டு பட்டினியாய்த் துக்கித்து ஓயாமல் அழுதுகொண்டிருந்த என் அருமைத் தாய் தந்தையர் என்னை உயிரோடு கண்டதும் ஆனந்தக் கண்ணீர் வடித்தனர். இரண்டு வார காலம், நான் பலமடைந்து மறுபடியும் கலாசாலைக்குப் போகத் தொடங்கும்வரையில், அவர்கள் என்னை விட்டுப் பிரியாமல் என் பக்கத்திலேயே இருந்து, அப்புறந்தான் எங்களூருக்குத் திரும்பிச் சென்றார்கள்.

*பன்னிரண்டாவது அதிகாரம்*

## என் சிந்தனைகளில் சிலவற்றைக் கூறி வாழ்க்கையில் எனக்கு ஏற்பட்ட மாறுபாடுகளைச் சுருக்கிக் கூறுவது

சுரம் விட்டபின் எனக்கு உடம்பு அதிக பலவீனமாக இருந்தது; மனமும், அதற்கேற்ப, பலவீனமுற்று இருந்தது. இதனால், நான் அறியாமலே, தற்கொலை செய்து கொள்ளும் எண்ணம் என்னை விட்டு அகன்றது. சிற்சில வேளைகளில் அந்தப் பாபச் செயலே வெறுங்கனா என்றும் புத்திப்பிரமை என்றும் தோன்றிற்று. வேறு சில சந்தர்ப்பங்களில், நான் அந்தப் பாப காரியத்தை மீண்டும் செய்தவனைப் போல, பாப வுணர்ச்சி முழுவலியோடு என் மனத்தைத் தாக்கி என் உதிரத்தைக் கொதிப்பித்து என்னை வெள்கி வருந்தி வேகச் செய்தது. என் தகப்பனார் இதற்குமுன் சென்னப் பட்டணத்தைப் பார்த்ததில்லை. என்றாலும், இரண்டு வாரகாலமாய் அதைக் கவனித்துப் பார்த்ததில், என்னைச் சூழ்ந்து கொண்ட அகிருத்தியங்களிலே தூண்டுவதற்கு எத்தனை துன்மார்க்கங்கள் இருந்தன என்பது அவருக்கு நன்றாக விளங்கிற்று. எப்பொழுதுமே அவருக்கு என் சிற்றப்பனைக் காணப் பிடியாது. வரம்பு மீறி மனம்போன வழியெல்லாம் நடக்கும் அவனது சுபாவத்தால் எங்கள் குடும்பத்தின் பெயருக்கே ஏதாவது கேடு விளையும் என்று அவர் சதா பயப்பட்டுக் கொண்டு இருப்பார். இப் பொழுதோ, அவனுடைய சகவாசத்தால் நானும் சற்றுக் கெட்டுப் போயிருப்பேன் என்று சமுசயித்த, எனக்கு வேறுவிதமாய் என்ன ஏற்பாடு செய்யலாம் என்று சுற்றி நோக்கினார். தாசிகள் வீடுகளிலும் அவற்றினும் கேவல மான இடங்களிலும் மாணவர்கள் கூடியிருப்பதையும், சாப்பாட்டு விடுதிக்காரர்கள் பெரும்பாலும் தங்களிடம் சாப்பிட வருவோர்களில் பணம் படைத்த வாலிபர்கள் கெட்ட வழியிலே புகுவதற்கு உதவி புரிவதையும், அவர் களை அவ்வழிகளிலே புகுத்துவதற்காக அவர்களை வசீகரிக்கப் பெரிதும் முயலுவதையும் கண்கூடாகக்

கண்டார். யாசித்துக் கிடைத்த பணத்தைக் கொண்டோ, வேலை செய்தபின் ஒழிந்த நேரத்தில் பணக்காரர் வீட்டுக் குழந்தைகளுக்குப் பாடஞ் சொல்லிக் கிடைக்கும் அற்ப ஊதியத்தைக் கொண்டோ, அல்லது சம்பளமில்லாமல் பள்ளிக்கூடத்திலே சேர்க்கப்பட்டோ, வேறுஎவ்வித மாகவோ சமாளித்துக் கொண்டு படித்து வரும் ஏழை மாணவர்கள் சிலர் மட்டுமே இப்பெரு நகரத்தினிடையே பொல்லா தூண்டுதல்களுக்கும் துரெண்ணங்களுக்கும் அப்பால் விலகியிருக்கிறார்கள் என்பதும் அவருக்குப் புலப்பட்டது. அன்றியும், என்னை என் சிற்றப்பன் காவலிலே இனிமேலும் விட்டுவைப்பது சரியென்று தோன்றினாலும்கூட, அடுத்த வருஷம் அவன் பட்டணத் துப் படிப்பை முடித்துக்கொண்டு வெளியூருக்குப் போய் விடுவான். ஆகவே, தில்லைக்குத் திரும்பிச் சென்று சொற்ப காலம் அங்கே இருந்து குடும்ப விஷயங்களை ஒருவிதமாக ஒழுங்கு படுத்திக்கொண்டு, என்பொருட்டு எல்லோரையும் கூட்டிக்கொண்டு பட்டணத்திற்குவந்து குடித்தனம் போட்டு விட்டார். ஆ! ஆ! அவர் மனம் எவ்வளவு நன்றாக உரம் பெற்றிருந்தது! 'ட்ரேபர்' 'ஹக்ஸ்லி' என்ற பெயர்களைக் கேட்டறியாதவர் என்றாலும், மேனாட்டுக் கல்வி பயின்று நாகரிக முறைகளிலே தேர்ச்சி பெற்று, சர்வகலாசாலையில் யோக்யதா பத்திரமும் பெற்ற எத்தனையோ பேர்களைவிட அவர் மேம்பட்டவரே. அவர் எப்பொழுதும் தெய்வத் திற்குப் பயந்து நடந்தும், மக்கள் அனைவரையும் உடன் பிறந்தாராகக் கொண்டு அன்பு செலுத்தியும் வந்தார். இத்தகையது என்று காரணங் கூறி விளக்க முடியாததான இவ்வுலகம் ஏன் உண்டாயிற்று, எங்கிருந்து வந்தது, என்றெல்லாம் அவர் ஒருபோதும் கவலைப்படுவதில்லை; தம் முடைய வாழ்நாளிலே தாம் செய்யவேண்டிய கடமை களைப் பற்றியும் அவருக்குச் சிறிதேனும் சந்தேகம் இல்லை.

கடமை வழிகள் முரணபடுங்காலை
திடனறு நல்லோர் நெஞ்சம் தூண்டும்
தடமே தவறிலாச் சத்திய வழியாம்-

இந்திய மக்களுள் தற்காலத்தில் குறைந்து மறைந்து போகின்ற ஓரினத்தார்க்கு உதாரணமாகச் சிறந்து விளங்கிய

அவர், தமக்கு விதிக்கப்பட்ட வாழ்நாட்களை இவ்வித மாகவே கழித்துவிட்டுத் தம் முன்னோர் சென்ற பிதுர் லோகத்திற்குத் தாமும் போய்ச் சேர்ந்தார். இது நிற்க.

மேற்கொண்டு கதையைத் தொடங்குவோம். எங்கள் குடும்ப மத்தியில் என் காலம் சந்தோஷமாகக் கழிந்தது. கொண்ட கொள்கைகளை விடாத பிடிவாதக்காரியும் ஓயாமற் பேசி அலட்டுபவளுமான நாணிப் பாட்டியிட மிருந்தும், ஸ்நாநம், ஸந்தியாவந்தனம், தெய்வ பூஜை, ஸம்ஸ்கிருதப் படிப்பு ஆகியவற்றையே தினந்தோறும் இடையறாத வேலையாகக் கொண்டு வெளிப்பார்வைக்குக் கடுமையாயும் வாஸ்தவத்தில் மிருது ஸ்வபாவமுடையவரா யும் இருந்த தந்தையிடமிருந்தும், ஹிந்து மனைவிக்குரிய நல்லொழுக்கத்தை விளக்குவதற்கு ஏற்றதொரு சிறந்த உதாரணமாய், வாய் திறவாமல் மௌனமாய் தேவதாம்சம் பெற்றவளைப் போல் இருந்த தாயிடமிருந்தும், இப்புஸ் தகத்திலே 'கோமளம்' என்னும் பெயரால் நான் குறிப்பிடு கின்றவளான உல்லாச குணமுடைய சிறிய சகோதரியிட மிருந்துமே, நான் பல விஷயங்களைக் கற்றுக் கொண்டேன். துன்மார்க்கத் தூண்டுதல்களினின்றும் அடாது செய்யும் மௌட்டியச் செயல்களினின்றுமே விலகி, வீட்டிலே சகல சௌகரியங்களும் வாய்க்கப் பெற்றுச் சுகமாக வாழ்ந்து, கல்வியிற் சிறந்து நிரம்பிய பலனை அளிப்பதான கலாசாலைப் படிப்பிலே நான் கழித்த காலத்தை இப்பொழுது பின்னோக்கிப் பார்க்கும்போது, என் தகப் பனார் சற்றுமுன்பாகவே இவ்வாறு யோசனை செய்து, அவமானத்திற்கு இடமான அந்தப் பாபச் செயலினின்றும் என்னைத் தடுக்காது போனாரே என்ற பச்சாத்தாபமே மேலிடுகின்றது. அந்தப் பாபச் செயலானது என் சுய மரியாதையைப் போக்கடித்து, மனோதிடத்தில் எனக்குள்ள நம்பிக்கையைக் குலைத்து, மாசற்று விளங்க வேண்டும் என்று எனக்கு இருந்த ஆசையைக் குறைத்து, பின்னாளில் நான் ஒழுக்கத்தினின்று விலகித் தாழ்வடைவதற்கு வழிகோலிற்று. 'உலகத்தோர் எல்லோர் கண்ணிலும் மண்ணைத்தூவி ஏமாற்றி விடலாம்; ஆயினும், தானாகவே கண்களை இறுக மூடிக்கொண்டு பார்க்க மாட்டேன் என்று மறுத்தாலொழிய, தன்னைத் தானே ஏமாற்ற யாராலும்

முடியாது' என்ற உண்மையை நன்றாகக் கண்டறிந்தேன். இது உண்மைக் கூற்று; நான் கஷ்டப்பட்டு அறிந்து கொண்ட விஷயம்; யாரும் எக்காலத்தும் அடையாத மனக்கசப்பால் நான் உணர்ந்து கொண்டது. இவ்வுண் மையை என் வாலிப நண்பர்களின் பொருட்டு நான் இங்கே எடுத்துரைக்கிறேன்: "இக வாழ்க்கையில் நீங்கள் உண்மை யான சுகத்தைப் பெற விரும்பினால், இரவும், பகலும், கண்ணிமை கொட்டாமல், உங்கள் தூய்மையைப் பறி கொடாது காத்துக் கொள்ளுங்கள். நமது இந்திய நாட்டில் விவாகமாகாத கிழவர் கிழவிகள் அனேகமாக இல்லை என்றே சொல்லலாம். விவாகம் என்பது நமக்குக் கடமை யாகவும் முக்கிய ஸம்ஸ்காரமாகவும் உள்ளது. ஆகையால், நமது சுகானுபவம் முழுவதும் பாவனமான வீட்டு நாற்சுவருக்குள்ளேயே பொதிந்துள்ளது. எவனொருவன் மனைவியிடம் காதல் கொண்டு 'உன்னையன்றி மறு மாத்ரைச் சிந்தையாலும் அறியேன்' என்று மனப்பூர்வ மாய்ச் சொல்லக்கூடுமோ, அவன் மட்டுமே தன் வாழ்க் கையின் முழுச் சுகத்தையும் பெறக்கூடும்; ஆகையால், என் நண்பனே! ஜாக்கிரதை! செய்வதை ஜாக்கிரதையாகச் செய்!"

தங்களுடைய வாழ் நாட்களிலே அதிகமாய் ஆபத்து நேரக்கூடிய இளமைப் பருவத்தில், சகலவித ஸத்ஸஹவா ஸங்களினின்றும் நீக்கப்பட்டு, புத்தியைக் கெடுத்து உள்ளத்தைக் கவர்கின்ற ரூபங்களில் நடமாடுகின்ற தீவினையும் பாபமும் நிறைந்த நகரங்களிலும் பட்டணங் களிலும் சிதறுண்டு, ஆரோக்கியத்தை இழந்து தவிக்கும் வாலிபர்களை நூற்றுக் கணக்கிலே காண்கின்ற என் மனம் இரக்கத்தால் உருகுகின்றது. அசாத்தியமான காரியங்களைச் செய்யும்படி நான் அவர்களை ஏவுவது போல் எனக்குத் தோன்றுகின்றது. ஏனென்றால், அவ் வாலிபர்களுள் ஒருவனாவது பின்வருமாறு எனக்குப் பதிலளிக்கலா மன்றோ: "நாங்கள் என்னதான் செய்ய வேண்டும் என்று சொல்கிறீர்? பாலிய விவாக வழக்கமும் இக் கொடிய சூரிய வெப்பமும் எங்களுடைய மனதை அதி சீக்கிரமகவே விரும்பத் தகாத வழிகளிலே புகுத்துகின்றன. இங்கேயோ, கலாசாலை வாசற்படியைத் தாண்டி வந்துவிட்டால், ஏன்

என்று எங்களைக் கேட்பவர் கிடையாது. யாதொரு கட்டுப்பாடும் இல்லை. கல்விப் பயிற்சி யில்லாதவர் எனினும் கற்பரசிகளாய் விளங்கும் தாய்மார்களின் ஆதீனத் திற்கு உட்பட்டுச் சிறந்து விளங்கும் எங்கள் வீடுகளோ, வெகு தொலைவில் உள்ளன. வீட்டிலே வாழ்வதால் உண்டாகும் நற் பழக்கங்களும் அவற்றால் விளையும் நற்பயனும் எங்களுக்கு இங்கு இல்லை; அதற்கு மாறாக எத்தனையோ துர்விஷயங்கள் கண்கவர் காட்சிகளாய் நாற்புறமும் எங்களைச் சூழ்ந்துகொண்டு எங்கள் மனங் களைச் சூறையாடி எங்கள் புத்திகளையும் தீவழியிற் இழுத்துச் செல்கின்றன. இம்மட்டோ? எங்களைத் தும்புமீறித் துள்ளி வெளியேறாதவாறு அடக்க வல்ல பொது ஜன அபிப்பிராயம் என்ற நிர்ப்பந்தம் சிறிதேனும் காணப்படவில்லை. இவ்விதமாக நாங்கள் இங்கே மாதக் கணக்கிலும் வருஷக்கணக்கிலும் இருந்தால், எங்களுக்கு ஒன்றும் தெரியாமற் போகுமா? நாட்டிலே தலைசிறந்தவர் கள், பொதுக் கூட்டங்களிலும் மந்திராலோசனை மண்டபங் களிலும் சரமாரியாகப் பிரசங்கஞ் செய்து பிரஸித்தி பெற்ற பேச்சாளர்கள் என்று புகழ்படைத்த கீர்த்திமான்கள், இவர்களிற் பலருடைய அந்தரங்க வாழ்க்கையைக் கொஞ்ச மேனும் நாங்கள் அறியாதவர்களா? அதோ பாரும், உமக்குத் தைரியமிருந்தால்; அதோ சடசடவென்று ஓடும் இரட்டைக் குதிரை சாரட்டுக்குள்ளே பாரும்; உள்ளிருந்து ஒளி வீசும் அவ்விரண்டு கண்களும் அவ்வண்டிக்குச் சொந்த யஜமானராகிய பிரபுவின் மனையாட்டியின் கண்கள் தாமா என்று சொல்லும். ஏன், ஐயா, நேற்றிரவுதானே, அதே கண்கள் இரண்டு என்னைக் கண்டு களித்து ஒளிவீசின. அப்பொழுது நான் மனம் பூரித்து ஆனந்தமடைந்து பெருமை கொண்டேன் என்றால், ஆச்சரியமோ? "இவர்களின் அந்தரங்க வாழ்க்கை யெல்லாம் பொது விஷயமா, என்ன? ஏன் அவற்றைப் பற்றிப் பேசுகிறீர்' என்பீரோ, எங்கள் வாழ்க்கையும் அப்படித் தானே, இது போகட்டும், மனைவிமாரைப் பற்றிப் பேச வந்தீரே, அவர்கள் இவ்வித விஷயங்களை யெல்லாம் கவனியாமலும் பொருட்படுத்தாமலும் ஏதோ சிற்சில சமயா சமயங்களிலே நாம் பெரியமனது வைத்து அவர்களிடம்

காட்டி வரும் அனுக்கிரகங்களைக் கொண்டு திருப்தியும் ஆனந்தமுமே அடையும்படி அவர்களிற் பெரும்பாலோரைப் பழக்கி விட்டவர் நாம் அல்லமோ? எதற்கு, ஐயா, இவ் வீண் பேச்சு? ஒருமுறையாவது நீர் மனதறிந்த உண்மையை ஒளியாமல் பகிரங்கமாய் ஒப்புக்கொள்ளும், "பெண்மக்களுள் கற்பு என்பது எவ்வளவு அதிகமாய் இருக்கிறதோ, ஆண்மக்களுள்கற்பு அவ்வளவு குறைவாய் இருக்கிறது" என்று. பிறனொருவனைத் தன் மனைவி கண்ணெடுத்துப் பார்த்துப் புன்னகை கொண்டாள் என்றால், அவளை அங்கேயே அப்பொழுதே கொலை செய்ய வேண்டும் என்று சொல்பவன் அதே மனைவியின் கண்ணெதிரே, தன் சொந்த வீட்டிலேயே வைப்பாட்டியை அழைத்து வந்து அவளோடு உல்லாஸமாகக் குதூகலிப்பதற்குச் சற்றேனும் தயங்குவானோ, தயங்கவே மாட்டான். எங்கள் சங்கதியையும் சொல்லிவிடுகிறோம், கேளும். பொதுவாக, ஸ்திரீ சகவாசத்தை நாடுவதே புருஷ ஸ்வபாவம் என்பது உமக்குத் தெரியாதோ? எங்களுக்கு அப்படி எவ்வித ஸ்திரீகளின் சகவாசம் கிடைக்கின்றது? எங்கள் மனைவியர், தாய்மார், உடன்பிறந்தார் முதலியவர்கள் அனைவரும் எள்ளளவு படிப்பும் இல்லாத முட்டாள்கள்தாம், மூட நம்பிக்கைகளைக் கொண்டவர்கள்தாம் என்றாலும், அவர்களுடைய சகவாசங்கூட இந்தக் கலாசாலைக் கல்வி கற்கும் நாட்களிலே எங்களுக்குக் கிடைப்பதில்லை. நகரத்திலுள்ள நன்னடத்தை வாயந்த ஸ்திரீ ஒருத்தியேனும் எங்களை முகம் பார்த்து எங்களுடன் ஒரு வார்த்தையேனும் பேசுவாளோ, மாட்டாள். உயர்தரக் கணித சாஸ்திர வினாக்களுக்கு விடை காண்பதிலும் இந்த வீரன் என்ன செய்தான், இவன் பாட்டன் என்ன செய்யாமற் போனான் என்றவை போன்ற சரித்திர சம்பந்தமான விசாரணையிலும் காலத்தைக் கழிக்க முடியாதவர்கள் எங்களில் எத்தனையோபேர்! நாங்களும் ஆண் மக்களே, மனித சகவாசத்தை விரும்பும் இயல்புடையவர்களே. இப்பொழுது எங்களுக்குக் கிடைப்பதான சகவாசத்தினும் மேலான சகவாச நலத்தைத் தரும் வசதிகளை நீர் ஏற்படுத்தித் தருமளவும், எங்களுக்கு எளிதிற் கிடைப்பதான இவர்கள் சகவாசத்தை விடமாட்டோம்.'

“மெய்தான் இது! இருந்தாலும், அந்தோ, பரிதாபம்!” வாலிப மாணவர்கள் இவ்வாறு கெடுவதென்றால் எவ்வளவு பரிதாபம்!

ஒரு தடவை சர்வ கலாசாலை ‘பி.ஏ.’ பட்டப் பரிக்ஷையிலே தவறியபின், மறுவருஷம் ஒப்பேறிப் பட்டத்தைப் பெற்றபோது, நான் என்ன உத்தியோகஞ் செய்வது என்று தீர்மானிக்க வேண்டியதாயிற்று. என் தகப்பனார் என்னை ‘வக்கீல்’ ஆகவேண்டுமென்று தூண்டினார். ஆனால் எனக்கு அந்தத் தொழிலிலே உண்மையான அருவருப்பு இருந்தது. “நேராகப் பொய் புகல வேண்டும்; அல்லது, மெய்யை மறைத்து ஈரடியாகப் பேசவேண்டும்; இல்லாவிட்டால், அத்தொழிலிற் பயின்று ஜீவனஞ் செய்வது ஒரு சிலருக்கே சாத்தியமாகும்” என்று நான் நினைத்தேன்.

இந்த அருவருப்பிற்கு முக்கிய காரணம், நான் படித்த நூல்களிலே கண்ட சில அபிப்பிராயங்களால் என் மனம் மாறுபட்டிருந்ததே. அந்த அபிப்பிராயங்களில் சிலவற்றை, வினோதார்த்தமாக, கீழே தொகுத்துரைக்கிறேன்.

1. ‘தலையில் மயிர்க்குல்லாவும் கழுத்தில் வெண்பட்டயமும் தரித்துக் கொண்டவுடன், இவ்வாடம்பரங்கள் ஒன்றும் இல்லாதிருப்பின் ஒரு ராஜ்யம் கிடைக்கும் என்றாலும் இழிவானது என்றும் கேடு விளைப்பது என்றும் தான் கருதக்கூடிய காரியத்தை, ஒரு பவுன் கிடைப்பதற்காகத் துணிந்து செய்து, ஒருவன் கொடுத்த வாக்கு மூலத்தை உண்மையென்று நம்பவேண்டியிருக்க, அதன் உண்மையைத்தான் நேரிற் கண்டறிந்த போதிலும், பல போலி நியாயங்களைக் கூறியும், தீவிரமாக வற்புறுத்தியும், ஆக்ரோசத்தால் உரக்கப் பேசியும், வாக்குச்சாலத்திற்குத் தக்கவாறு கைச்சாலஞ் செய்தும், பேச்சுக் கருத்தினுக்கு ஏற்றவாறு முகத்தை மாற்றிக்கொண்டும் வாதஞ் செய்து இந்த உண்மைச் சாட்சியைப் பயமுறுத்தி விரட்டியும் மற்றவனைக் கலங்கச் செய்தும் வழக்கை நிர்ணயிக்கும் மத்தியஸ்தர்கள் அந்த வாக்குமூலங்களை யெல்லாம் பொய்யென்று எண்ணி நிராகரிக்குமாறு தன்னால் இயன்ற வரை முயற்சி செய்வது எவ்வளவு அயோக்கியத்தனம்!

2. வக்கீல்கள் வார்த்தைகளையும் கோபத்தையுமே வாடகைக்கு விடுபவர்கள்; கட்சிக்காரனிடமிருந்து பெறும் பணத்திற்குத் தக்கபடி ஆக்கிரகங் கொண்டு, பெற்ற பொருளுக்கு ஏற்றவாறு, மிதமாகவோ அமிதமாகவோ கடுகடுத்துப் பேசுபவர்கள்,

3. மனிதர்களை வக்கீல் நல்லோராக்குவதில்லை; ஆனால் அவனால் விளையும் கேடு பிறரைத் துன்புறுத்து வதில்லை; நம்முடைய கெட்ட குணமே அவனை அவசியமாக்குகின்றது; நம்முடைய ஆவசியமே அவனைக் கனவானாக்குகின்றது.

4. எவ்விதப் பயமும் இன்றி ஒருவன் தைரியமாய்ப் பொய் புகலக்கூடிய தொழில்.

5. இந்த (வக்கீல்) படிப்பை நான் அறிவேன். இதில் எனக்கு விருப்பமில்லை. சட்டங்கள் என்பவை, எந் நாட்டிலும், உடன்பிறந்து நம்மை வருத்தும் வியாதிகள்; தலைமுறை தலைமுறையாக நம்மைப் பற்றிக்கொண்டு வரும் கொடிய சாபம்.

இவ்வபிப்பிராயங்களுக்கு மாறாக "மானிட கலா ஞானங்களுள் முதன்மை பெற்றுச் சிறந்தவற்றுள் சட்ட ஞானமும் ஒன்று" என்று ஒரு பெரியார் அபிப்பிராயம் கூறியுள்ளது மெய்யே. ஆயினும், அவரும் - அவரும் ஒரு வக்கீலாக இருந்தார். ஆதலால் அவரைப் பக்ஷபாத மில்லாதவர் என்று சொல்லக்கூடாது - அவருமே, சட்டப் படிப்பு எவ்வளவுக் கெவ்வளவு மனத்தைத் தூண்டி ஊக்கந் தருகின்றதோ, அவ்வளவுக் கவ்வளவு மனத்தை விசாலப் படுத்தித் தாராளத் தன்மையை அளிக்காமற் போகின்றது. அதிர்ஷ்டவான்களான சிலருக்கு மட்டுமே அது பொருத்த முடையது" என்று கூறியிருக்கிறார்.

நான் படிப்பாற் சிறந்த உத்தியோகத்திற்கே வாசிக்க வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. இன்ஜினியரிங் படிப்பிற்கு வேண்டிய கணக்கு என் மந்த புத்திக்கு எட்டாது என்று நான் பயப்பட்டேன். வைத்தியப் படிப்போ, 'பிராம்மணனுக்குக் கொஞ்சமும் தகாதது, அதைப்பற்றிப் பேசவே கூடாது' என்று என் தகப்பனார் தடுத்துவிட்டார். வாத்தியாராக இருப்பதில் அதிகச் சம்பளமும் கிடையாது;

எனக்கும் அபிருசி இல்லை. ஆகையால், கடைசியில் 'சட்டம் படிப்பதுதான்' என்றாகி, சட்டக் கலாசாலையிற் சேர்ந்தேன்; பரீக்ஷை வந்ததும் தவறிவிட்டேன். அதற்கு முன் என் மனைவி என்னுடன் வாழ வந்துவிட்டாள். நாணிப்பாட்டியை என் மனைவிக்குத் துணையாக வைத்து விட்டு, என் தாய் தந்தையர் தில்லைக்குத் திரும்பச் சென்றார்கள். சட்டப் பரீக்ஷையிலே நான் தவறியது குடித் தனத்தில் ஏற்பட்ட இந்த மாறுபாட்டால் என்றே உறுதி யாகக் கொண்டேன்; என்னுடன் கொஞ்சி விளையாடு வதற்கு கட்டழகியான என் மனைவி அருகில் இருக்கும் போது, 'டார்ட்ஸ்' (பொல்லாப்புகள்) 'ஈஸ் மெண்ட்ஸ்' (அண்டை நிலத்துமீதுள்ள உரிமைகள்) இம்மாதிரியான விஷயங்களை நிர்ணயிக்கும் சட்ட திட்டங்கள் எல்லாம் என் புத்திக்கு எட்டாது போய் விடுமன்றோ?

மேலும், நாணிப்பாட்டி சளசள வென்று கூக்குரலிட்டு ஆக்ஷேபித்த போதிலும், நான் தினந்தோறும் சிறிதுநேரம் என் மனைவிக்குப் படிப்புச் சொல்லிக் கொடுப்பதிலே செலவிடத் தொடங்கினேன்; அவளும் இரண்டு மாதத்தில் ஆங்கில எழுத்துக்களையும் தமிழ் எழுத்துக்களையும் கற்றுக் கொண்டாள். ஒரே காலத்தில் இரண்டு பாஷை களையும் அவளுக்குச் சொல்லிக் கொடுத்தேன். குறள், கம்ப ராமாயணம், 'ஷேக்ஸ்பியர்' எழுதிய நாடகங்கள், 'பைரன்' 'டெனிஸன்' இவர்களின் பாடல்கள் என்னிட மிருந்த வேறுநூல்கள் - இவற்றையெல்லாம் அவள் தானாகவே வாசித்தறியும் திறமையுள்ளவளாகும் வரை யிலே போதும் என்று சும்மா இருக்கக் கூடாது என்று நிச்சயித்துக் கொண்டேன். எல்லா விஷயங்களும் அடங்கிய நூதனக் கல்விமுறை யொன்றை நான் கண்டுபிடித்தேன்; இலக்கணமும் இலக்கியமும் கைகலந்து சென்றன. ஆயினும், அவளுக்குப் படிப்பிலே முதலாண்டு முடியும் போது, அவ்விரண்டு பாஷைகளிலுமே யன்றி கண்ஜாடை கொண்டு பேசும் ஊமைப் பாஷையிலும், "காதலுற்றேன்" என்னும் வினைமுற்றின் முன்னிலை படர்க்கை விகாரங் களை மட்டுமே நான் அவளுக்குக் கற்பிக்க முடிந்தது என்பது துலங்கிற்று. மேற்கூறியவாறு நான் என் பரீக்ஷையில் 'பிளாங்கி'யானேன். என் மனைவி திடமான தேகக்கட்டு வாய்ந்தவள் என்றாலும், நாளடை விலே அவள் மேனி தளர்ந்துவிட்டது. தலைவலியின் உபத்திர

வழும் கருப்பையில் ஏதோ கோளாறு உண்டாகி மூர்ச்சை யடைவதுமாக ஆய்விட்டது; அதிகப் பணம் செலவிட்டு அவளுக்கு ஐரோப்பிய வைத்தியரைக் கொண்டு சிகித்ஸை செய்ய வேண்டி வந்தது.

இப்பொழுது எனக்கு இருபத்தைந்தாவது ஆண்டு நிறைவு சமீபித்துவிட்டது; அதற்குப் பின் சர்க்கார் உத்தியோகத்தில் புகமுடியாது; சட்டப் பரீக்ஷைக்கு மறுபடியும் வாசித்துப்பட்டம் பெறலாம் என்று ஆசைப்படவும் இல்லை. எனவே, சர்க்கார் வேலையிலே இப்பொழுதே புகவேண்டும் என்று தீர்மானித்து, என் தகப்பனாருடைய அனுமதியை முன்கூட்டியே பெற்று, எனக்கு வாத்தியாராக இருந்த ஐரோப்பியருள் ஒருவ்ரின் சிபார்சினாலும் 'பி.ஏ.' என்றும், 'பி.எல்.' பரீக்ஷையில் 'பெயில்' ஆனவன் என்ற காரணத்தைக் கொண்டும் ''போலீஸ் இன்ஸ்பெக்டர்'' வேலையிற் பழகுவதற்குத் தெரிந்தெடுக்கப் பெற்றேன். ஜில்லாவின் முக்கிய பட்டணமாகிய ஓர் ஊரில், வேலையிற் சமர்த்தரும் நல்ல அனுபவஸ்தருமான இன்ஸ்பெக்டர் ஒருவரிடம் என்னை வேலை கற்றுக் கொள்வதற்கு அனுப்பினார்கள். நோயாளி யான மனைவியுடனும், அவளுக்குத் துணையாக அமைந்த கிழவியுடனும், மருந்துப் பட்டிகளை எழுதிய துண்டுக் காகிதங்கள் ஒரு கற்றையும் பலவித மருந்துப் புட்டிகளும் வைத்து நிறைத்த பெட்டியை எடுத்துக்கொண்டு, வேலையை ஒப்புக் கொள்வதற்காக அந்த ஊருக்குப் புறப்பட்டுச் சென்றேன்.

### பதின்மூன்றாவது அதிகாரம்

## நான் கட்டிய மனக் கோட்டைகளிலும் உண்மை நிகழ்ச்சிகளிலும் சிலவற்றை ஒப்பிட்டுக் கூறுவது

கூரிய புத்தியுடைய என் சிற்றப்பன் சொல்லியவாறு, 'என்னை 'கனாக்காணுங்கவி' என்றே ஒரு வகையிற்

சொல்லலாம்; அன்றியும், எனக்கு இயற்கையாயுள்ள அடக்க வொடுக்கமும் வீட்டுப் பழக்கத்தைத் தவிர வேறு பழக்கம் இல்லாத குறைவும் என் கனாக்களை எவ்விதத் திலும் குலைந்து போகாதபடி காத்தன. கலாசாலை மாணவனாக இருந்தபோது, நியாய வுணர்ச்சி, ஆண் பெண்களின் சமத்துவம், சுயேச்சைப்படி நடக்கச் சுதந்திரம், மனச்சாட்சிக்கு மாறுபடாத ஒழுக்கம் முதலிய வற்றைப் பற்றி மிக உத்கிருஷ்டமான கொள்கைகளை யுடையவனாய் இருந்தேன். மாணவர் சபையில் வாக்குவாதமாக நான் பேசிய பேச்சுக்கள் எல்லாம் என் மனத்தில் இக்கருத்துகளை வளர்த்து முதிரச் செய்தன. ஆகவே, சர்வ கலாசாலைப் பரீக்ஷையிலே தேர்ந்து அத்யக்ஷர் கையால் அளித்த 'பி.ஏ.' பட்டப் பத்திரத்தைப் பெற்றுக் கொள்ளும்போது, அப் பட்டப் பெயரால் விளங்கும் யோக்கியதைக்குத் தக்கபடியாக இகவாழ்க்கை யில் நான் ஒழுகுவேன் என்று வாக்களித்தது வெறும் வார்த்தையன்று; பின்னாட்களில் அவ்வாக்கின்படியே மனப்பூர்வமாயும் பயபக்தியுடனும் நடந்துகொண்டு நல்லொழுக்கத்தால் என் வாழ்க்கையை நிறைவேற்றும கருத்தோடேயே அவ்வாறு உறுதி கூறினேன். ஆனால் நான் வேலையை ஒப்புக்கொண்டு, தினசரி வாழ்க்கையில் உலக நடவடிக்கைகளை உள்ளவாறு கண்டறிந்தபோது, நான் அருமையாகப் பாராட்டிப் போற்றிவந்த வெறுங் கனவுகளான மனக்கோட்டைகளுக்கும் பிரதிதினமும் என் கண் முன்னே சமுசயத்திற்கு இடமின்றி நடந்தேறிய உண்மை நிகழ்ச்சிகளுக்கும் இடையிலுள்ள நெடுந் தூரத்தைக் கண்டு என் மனம் திகைப்புற்றது. நடுநின்று நியாயஞ் செலுத்துவதற் கென்று வேதனம் பெற்று வாழ்பவரே நியாயத்தைத் துட்டுக்கு விற்பதையும், சட்டத்தை நிலைநிறுத்தி நாட்டைக் காப்பதற்கென்று சம்பளம் வாங்குவோர்களே சட்டத்தை மீறி நடப்பதையும் கண்டேன். சுயநலங் கருதுவதும் கைக்கூலி வாங்கிக் கொண்டு அநியாயஞ் செய்வதுமே எங்கும் பரக்க நடைபெறுவதை உணர்ந்தேன் போலீஸ் உத்தியோகஸ்த னாக நான் முதலில் அறிந்துகொள்ள வேண்டியது என்ன என்று என் குரு போதித்தார் என்றால், 'சோழியன் குடுமி

சும்மா ஆடாது; யார் எது செய்தாலும் அவர் சுயநலத்தை நாடியே செய்திருப்பர் என்பதால் அச்சுயநலம் யாது என்று அறிந்து கொள்ளவேண்டும்' என்பதே. மகா பரிசுத்தமாக நடந்து கொள்ளவேண்டிய உறவு முறையார்களும் காமத்தாலும் பணவாசையாலும் பிரதிதினமும் கள்ளத்தன மாக நடந்து கொள்வதைக் கண்டேன். 'உலகெங்கிலும் எல்லோரும் ஒருங்கே தெய்வமாகக் கொண்டு கும்பிடுவது பணப்பேயைத்தான். மதிவன்மை நல்லொழுக்கம் முதலியவற்றை அன்று' என்று உணர்ந்து கொண்டேன். இங்கர்ஸால் முதலிய அறிவாளிகளின் நூல்களைப் படித்து என் மனத்தைக் கட்டுப்படுத்திய விலங்குகளை தறித்துவிட்ட நான் உலகத்தோடு நெருங்கிப் பழகாததால், ஜாதி குலம் ஸ்தானம் முதலியவற்றால் ஏற்படும் கட்டுப் பாடுகளின் கொடுமையை உணராதிருந்தேன்; இப் பொழுதுதான், நமக்குள் அவை எவ்வளவு ஆதிக்கமும் சக்தியும் பெற்றுள்ளன என்பதை உணர்ந்தேன். குற்றவாளி யின் சாதி, குலம், மதம், அந்தஸ்து முதலியவற்றால் அவனுக்கு விதிக்கப்படும் தண்டனை எவ்வளவு ஏறவும் குறையவும் கூடும் என்பதை அடிக்கடி நான் காணலானேன். பரம பரிதாபத்திற்கும் பரிபாலனத்திற்கும் பாத்திரர்களான கீழ்ச்சாதி ஏழை மக்களையே மற்றோரைக் காட்டிலும் அதிகப்படியாகத் தண்டிக்கிறார்கள். பெண் மக்களோ நிரக்ஷரகுக்ஷிகளாய் ஓயாது வீட்டு வேலைகளில் உழன்றும், எஞ்சிய பொழுதை வீண் வம்பளப்பதிலே கழித்தும் வருகிறார்கள். அவர்களைக் கொண்ட கணவன்மார், அவர்களைப் பாத்திரம் பண்டம் முதலிய சங்கமப் பொருள்களாகவே பாவிக்கிறார்கள். இதினும் மேலான பதவிக்கு உரியவர்களாக அவர்களைக் கருதவும் இடமில்லை. படித்துத் தேர்ந்த மேல் வகுப்பினருள்ளும், பிறரிடமுள்ள பணத்தையும் பவிஷையும் கண்டு பொங்கு கின்ற பொறாமையே எங்கும் வியாபித்திருப்பதையும் மூவர் கூடினால் அங்கு இரண்டிற்குக் குறையாத கட்சிகள் ஏற்படுவதையும் கண்டேன். எல்லாவற்றிற்கும் மேலாக, செல்வத்தாலோ அதிகாரத்தாலோ பெருமை பெற்றவர் களுக்குச் செலுத்தும் மரியாதையும் கௌரவமும் காரணமாக, படிப்பாலும் நற்பயிற்சியாலும் சிறந்தவர்களுக்

குள்ளும், உண்மை யுரைப்பதில் அவமதிப்பும் முகஸ்துதி யில் அபிருசியும் மனச்சாட்சிப்படி உண்மையாக நடந்து கொள்வதிலே பயமும் பிறருடைய இரகசியங்களை அறிந்து கொள்வதில் அளவிலாத ஆசையும், அற்பத்தனமாய் தாமாகவே வலியச் சென்று பிறருக்கு உதவி புரிவதும் புத்தி சொல்வதுமான குணக்கேடுகளும் மலிந்திருக்கக் கண்டேன். சத்தியம், மானம், சுயமரியாதை, கௌரவம் முதலிய வரம்புகளை எளிதில் மீறி நடப்பதையும் மற்ற துர்க்குணங் களுக்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல் சொல் ஒன்று செயல் ஒன்றாக இருப்பதையும் கண்டுகொண்டேன்.

உலகம் இத்தன்மையது என்ற உண்மை அழுத்தமாக என் மனத்திற் பதியவே, நான் கண்ட பொன்மயமான கனவுகள் எல்லாம் சிதறுண்டு மனநிலையை ஆட்டிக் குலைத்துவிட்டது. ஆனாலும், சர்வகலாசாலை அத்யக்ஷர் முன் நான் கொண்ட பிரதிக்ஞையை நிறைவேற்றத் துணிந்து, என்னால் இயன்ற மட்டும் இத்தகைய தீமைகளை நீக்க முயல்வது' என்று உறுதி கொண்டேன். அவ்வூரில் உத்தியோகஸ்தர்களும், வாத்தியார்களும், வக்கீல்களும் கூடும் சங்கம் ஒன்று இருந்தது. அதிலே சேர்ந்துகொண்டு, இயற்கையாய் எனக்கு இருந்த தன்னடக்கத்தையும் மௌனத்தையும் விட்டுத் துறந்து, என் கொள்கைகளையும் பொதுஜன ஆசாரங்களைச் சீர்திருத்த நான் கண்ட கனவுகளையும் பற்றி விஸ்தாரமாய்ப் பேசத் தொடங்கினேன். குரலைக் கேட்டறியாத அபூர்வ பக்ஷியைப் போலவே என்னைக் கருதி, அவர்கள் என் பேச்சுக்குச் சற்றுச் செவிகொடுத்தார்கள். அதனால் அதிகத் தைரியங் கொண்டவனாய், ஓயாது சீட்டுக் கச்சேரி நடத்துவோர்களையும் வம்பளப்பவர்களையும் என்னிடம் இழுத்து வைத்துக்கொண்டு, ஆண்மையையும் புத்திவிருத் தியையும் அடைவதற்கு இவற்றினும் நல்ல வகையிலே பொழுது போக்குங்கள் என்று அவர்களை நல்வழியிலே திருப்ப முயன்றதும், 'இது என்ன சள்ளை' என்றும், என்னை 'பிரும்மரக்ஷஸ்' என்றும், அரைப் பைத்தியம் என்றும் நினைக்கத் தொடங்கினார்கள். மனத்தில் உள்ளதை உள்ளவாறே வெளியிட்டுச் சொல்வதால், என்னைக் கண்டு விலகத் தொடங்கினார்கள். 'தாம் கொண்ட அபிப்பிராயங்

களைக் கண்டித்து எதிர்வாதஞ் செய்தேன்' என்று என்மீது டிப்டி கலெக்டர் பெருங் கோபங் கொண்டார்; சட்டத்திற்கும் நீதிக்கும் அதிகாரியாய் அவர் கோர்ட்டிலே இருக்கும்போது காட்டப்படும் மரியாதையும் கௌரவமும், சங்கத்திலும் எல்லோரும் காட்டவேண்டும் என்று எதிர்பார்த்திருந்தார். அவரோ, அந்த இலாகா முழுவதிற்கும் மாஜிஸ்திரேட்; நானோ, இன்னும் 'காயமாகாத வேலை' பார்க்கும் 'ப்ரொபேஷனரி' போலீஸ் இன்ஸ்பெக்டர்; ஆகவே, அவரை நான் இவ்வாறு அலக்ஷியஞ் செய்த மனத் துணிவைக் கண்டதும், சங்கத்தோர் அனைவரும் ஆச்சரியப் பட்டார்கள். பிறகு என்னைக் கண்டதும் மெல்ல என்னை விட்டு நழுவத் தொடங்கினார்கள். 'இப்படிப்பட்ட சங்கத்தில் இருப்பதால் என்ன பயன், விட்டு நீங்குவதே நலம்' என்று ராஜிநாமா செய்துவிட்டேன். இதற்கிடையே என் மனைவியைக் கொண்டு சங்கத்து அங்கத்தினர்களின் வீடுகளுக்குச் சென்று அவர்களுடைய மனைவிமார்களைக் கண்டுபேசி, ஒருவரோடு ஒருவர் பழகி அளவளாவுதற்கும், புத்தியை விசாலப்படுத்திக் கொள்வதற்கான விஷயங்களில் ஒருமித்து உழைப்பதற்கும், பொழுது போக்குவதற்குமாக, 'ஸ்திரீகள் சங்கம்' ஒன்றை ஸ்தாபிக்க முயன்றேன். இவ்வாறு போய்ப் பார்த்த ஸ்திரீகளில் மிகச் சிலரே எதிர் உபசாரமாக என் மனைவியைக் காண வந்தார்கள். அவர்களுக்குமே என் உபதேசம் பிடிக்கவில்லை. போலீஸ் உத்தியோக முறையிலேயும் எனக்குத் தெரிய வராத சில வம்புச் செய்திகளைப் புதிதாகத் தெரிந்து வந்து என் மனைவி எனக்குச் சொன்னாள் என்பதைத் தவிர வேறு பலன் ஒன்றும் இதனால் விளையவில்லை. நாளடைவிலே, என்னை 'தனக்குரிய ஸ்தானத்தை உணராமல், வயதிலும் அந்தஸ்திலும் பெரியோராய் இருப்பவர்களுக்கு உரிய மரியாதை காட்டத் தெரியாதவன்', அதிகப் பிரசங்கி, உலகநடை தெரியாதவன், துடுக்குவாயன் என்றெல்லாம் அவ்வூரார் பேசத் தொடங்கினார்கள்.

உத்தியோகத் துறையிலும் இப்படியே ஆயிற்று; அதிசமர்த்தரான என் குரு என் கொள்கைகளை எளிதில் அறிந்து கொண்டார். இவற்றை யெல்லாம் நன்றாகத் திருத்திக்கொண்டு வழிக்கு வராவிட்டால், பரீக்ஷார்த்தம்

தாத்காலிகமாக அளிக்கப்பட்ட உத்தியோகம் திடீரென்று முடிந்துபோம் என்று எச்சரிக்கை செய்தார்; நான், கீழ் உத்தியோகஸ்தர்கள் கேஸ்களிலே கையாளும் புரட்டல் களையும் சாக்ஷி தயாரிக்கும் உபாயங்களையும் முறை களையும் உற்று நோக்கி, போலீஸ் உத்தியோகத்தை நன்றாய் நடத்த வேண்டும் என்று ஆத்திரத்தோடும் ஊக்கத்தோடும் உழைத்து, அந்தக் கீழ் உத்தியோகஸ் தர்களிற் பலரைக் கஷ்டத்தில் வைப்பதையும், கேஸ்களைச் சீக்கிரத்தில் முடிவிற்குக் கொண்டு வருவதையும்கண்டு, என் குருவானவர், 'இவ்வாறு செய்யாமல், சாதாரண விஷயங்களிலே கீழ் உத்தியோகஸ்தர்களைச் சுயேச்சைப் படி நடந்துகொள்ள இடங் கொடுத்து அவர்கள் நடவடிக்கை களிலே தலையிடாமலும் கவனியாமலும் இருப்பதே நல்லபேர் பெற்று மேன்மை யடைவதற்கு வழியென்று எனக்குப் போதனை செய்தார். நானோ, இவர் சொற்படி நடப்பது அவர்களின் தீய செயல்களையும் அருவருக்கத் தக்க நடத்தையையும் ஆதரித்து, அவர்களை உற்சாகப் படுத்தியதாகும் என்று கருதுபவன். மேலதிகாரியான 'சூப்பிரண்டென்டென்ட்' அவர்களிடம் இவர் இவ்வாறு எனக்குப் போதனை செய்தார் என்று முறையிட வேண்டும் என்று நான் நினைத்துக் கொண்டிருக்கும்போது உத்தியோகமே எனக்கு இல்லாமற் போயிற்று. அது எப்படி நேர்ந்தது என்றால், அப்போது 'ஸெஷன்ஸ்' நடந்து கொண்டிருந்தது. இரண்டு கொலை கேஸ்களும் நான்கு கொள்ளைக் கேஸ்களும் கோர்ட்டிலே போலீஸார் நடத்த வேண்டும். நியாயாதிபதி அந்த ஊருக்குப் புதிது; பொதுவாக, போலீஸைப் பற்றியும், விசேஷமாக உள்ளூர்ப் போலீஸைப் பற்றியும் திடமான கெட்ட அபிப்பிராயங் கொண்டவர். ஆகையால், ஜூரியிலுள்ள வர்களின் உதவி கொண்டு அவரை விரலசைக்க முடியாமல் செய்து, கேஸ்களில் எங்களாலே குற்றஞ் சாட்டப்பட்ட வர்களைத் தண்டனையில் மாட்டி வைப்பது என்று போலீஸார் தீர்மானித்தார்கள். அவரவர்களுடைய அதிகார எல்லையுள் உள்ள 'ஜூரி' மனிதரை அவரவர்கள் சரிப்படுத்தி கேஸ்களில் எங்களாற் குற்றஞ் சாட்டப்பட்ட வர்களே உண்மைக் குற்றவாளிகள் என்று அவர்கள் தீர்ப்புக்

கூறும்படி ஏற்பாடு செய்ய வேண்டும் என்று அந்தந்த 'டிவிஷன் இன்ஸ் பெக்டர்'களுக்கு உத்தரவு வந்தது. ஜில்லாவின் முக்கிய பட்டணமாகிய ஊரிலும் சில ஜமீன்மார் இருந்தார்கள். அவர்களுள் சிலரை என்னுடைய மேலதிகாரி யான குரு பிரியமாயும் சரசமாயும் பேசிச் சரிப்படுத்தி விட்டார். சரிப்பட மாட்டார்கள் என்று எங்களுக்குத் தோன்றியவர்கள் மூன்று வியாபாரிகள்; 'நியூஸென்ஸ்' சட்டத்தைக் கொண்டு அவர்களுக்குப் புத்தி கற்பிக்க வேண்டியது என்று, அவ்வேலை எனக்கு இடப்பட்டது. இதற்கெல்லாம் நான் இணங்கமாட்டேன் என்று அந்த வேலையைச் செய்ய மறுத்ததோடு நில்லாமல், இவ்வித நடத்தை எவ்வளவு இழிவானது, இது என்ன கொடுமை என்றெல்லாம் என் குருவிற்கே உபதேசஞ் செய்தேன். அவர் என்னைப் பற்றி மேலதிகாரிகளுக்கு என்ன சொன்னாரோ, அறியேன்; ஆனால் இரண்டு வாரம் ஆகுமுன், "பரீக்ஷார்த்தம் நியமிக்கப்பட்ட என் உத்தி யோகம் தீர்ந்து விட்டது" என்றும், "என் சேவகம் எப் பொழுது சர்க்காருக்குத் தேவையோ அப்பொழுது எனக்கு உத்திரவு அனுப்பப்படும்" என்றும் உத்திரவு கிடைத்துவிட்டது.

பதினான்காவது அதிகாரம்

## நான் உலக வாழ்க்கையின் முன்னேற்றம் அடைந்து ஊரார் மெச்ச நடந்துகொண்டதைக் கூறுவது

**நா**ன் பிறந்த நாட்டில் அமைதியும் நன்மையும் குலையாதவாறு காக்கும் சிறந்த கண்காணியாகச் சர்க்கார் அலுவல் என்னும் ஆட்டத்தை ஆடித் தோல்வியுற்ற பின்பு, இனி என்ன வேலையிலே தலையிடுவது என்று சுற்றி நோக்குமுன், என் தகப்பனார் மரணாவஸ்தையில் இருக்கும் செய்தி கேட்டு, உடனே ஊருக்குப் போக நேர்ந்தது. அவருடம்பு கொஞ்ச காலமாகவே சரியாய்

இல்லையென்றாலும் இவ்வளவு சீக்கிரம் அவர் போய் விடுவார் என்று நான் எண்ணவே இல்லை. அவரை இழந்த பின்பே, அவர்மீது நான் வைத்திருந்த மனமார்ந்த வாஞ்சையும் எவ்வளவு ஆழ்ந்தது என்று முழுதும் உணரலானேன்; குடும்பத்தைப் பராமரிப்பது எவ்வளவு கஷ்டமான காரியம் என்பதையும் அப்பொழுதுதான் அறிந்தேன். என் அருமைத் தாயார் கூந்தலைக் களைந்து முக்காடிட்டுக் கொண்டு வெள்ளாடை தரித்த அலங்கோலத்தைக் காண என் மனம் சகிக்கவில்லை; 'கணவனுக்கு முன் போகாத கைம்பெண் ஆனேனே' என்று அவள் வருந்தியதைக் கண்டு, 'அப்படி அவள் போயிருந்தாற்கூட நலமாயிருக்கும்' என்று நானும் அவளோடு வருந்தினேன். குடும்பத்திற்கு நானே இப்பொழுது எஜமான்; அன்பிற்குரிய ஸ்திரீகள் நால்வர் என் கை பார்த்து நிற்கும்படி நான் வீட்டிற்குப் பெரிய ஆண் பிள்ளையாகி விட்டேன். பரீக்ஷையில் ஜயித்து என்ன, பட்டம் பெற்று என்ன? பனையோலையில் எழுதிக் கட்டிக் கிடந்த குடும்பக் கணக்குகள் ஒன்றும் எனக்குச் சிறிதும் விளங்கவில்லை. என் சொத்தாகிவிட்ட வயல்களுக்குள் ஒன்றையும் நான் கண்டதில்லை. அதனால், படிப்பு வாசனை யறியாதவராயினும் உலகியலறிந்து புத்திசாலியாயிருந்த பண்ணையாராகிய என் மைத்துனருடைய உதவியை நாடினேன். அவர் வந்து என் சொத்துக்களைக் கணக்கிட்டுத் தந்தார். அதுவரை, என் தகப்பனார் அப்போதைக்கப்போது எனக்கு அனுப்பிவந்த பணம் எங்கிருந்து கிடைத்தது என்ற கவலை எனக்கு இல்லாதிருந்தது. என் மட்டிலும், அந்த ரூபாயெல்லாம் வயற்காட்டினின்றோ தோப்புத் துரவுகளின்றோ வெட்டி யெடுக்கப்பட்டிருக்கலாம். இப்பொழுதோ, என் சொத்து முழுவதுமே பதினாயிரத்திற்கு மேல் விலை பெறாது என்றும், அதிலே ஆறாயிரம் வரை இரண்டு புள்ளிகளுக்குச் சேரவேண்டிய் கடன் என்றும் உண்மை துலங்கிற்று. பரம்பரையாக வந்த பூசொத்தில் எதையுமே விற்கக் கூடாது என்றாள் நாணிப்பாட்டி; என் தாயார் மனமும் அப்படியே இருந்ததால், அவள் மனத்தைப் புண்ணாக்கி, கணவரை இழந்தோமே என்று வருந்தும்படி செய்வதற்கு என் மனம் ஒப்பவில்லை.

ஆகையால் மேற்கொண்டு ஆயிர ரூபாய் கடன் வாங்கிக் கொண்டு அவ்விரண்டு கடன்காரர்களுக்குமாக என் சொத்து முழுவதைம் ஏழாயிரத்துக்கு அடமானம் வைத்து, அசலை நான் என்று திரும்பிக் கொடுக்கிறேனோ அன்றுவரை என் சொத்தை வட்டிக்காக அனுபவித்துக் கொண்டு, பிறகு என் கைவசம் மீண்டும் ஒப்புவிக்க வேண்டும் என்று ஏற்பாடு செய்தேன். பிறகு, தில்லையை விட்டுக் குடும்ப சகிதமாய்ப் புறப்பட்டு, பிழைக்கும் வழி தேடி, பழைய பதவியையும் மீட்க வேண்டும் என்று எங்கள் ஜில்லாவின் முக்கிய பட்டணமாகிய மூங்கிலூரை அடைந்தேன்.

நாஸ்திகனாய், 'தெய்வம் என்று ஒன்று இருப்பதை அறியேன்' என்று பெருமை பேசும் நான் அக் கொள்கையின் படி என் தகப்பனாருக்கு உத்தரகிரியைகளையும் அவற்றை யொட்டிய வைதிகச் சடங்குகளையும் ஒன்றையும் செய்யக் கூடாது என்றாலும், துக்கத்தில் ஆழ்ந்த தாயாரைத் திருப்தி செய்யவும், மறைப்பானேன், ஊர்வாய்க்குப் பயந்தும், அவற்றையெல்லாம் செய்யச் சம்மதித்தேன். அப்படியே மாசிக ஆப்திக சிரார்த்தங்களும் முறையே நடைபெற்றன.

மூங்கிலூருக்கு வந்து குடித்தனம் போட்டதும், பசிப் பிணியைப் போக்க வேண்டும் என்னும் தீராத ஆவசிய கத்தால், மீண்டும் சட்டப் புஸ்தகங்களைப் படிக்கத் தொடங்கி, ஊக்கத்தோடும் விடாமுயற்சியோடும் படித்து, பரீக்ஷையில் ஒப்பேறி, உள்ளூர் நியாயஸ்தலங்களிலே வக்கீலாகப் பேசும் உரிமையை எளிதில் சம்பாதித்துக் கொண்டேன். லௌகிக ஞானமும் இதற்குள் எனக்கு ஏற்பட்டுவிட்டது. உலகத்தை அனுசரித்து நடந்து கொள்ளவும், பொய், பித்தலாட்டம், மோசம் முதலிய வற்றைக் கண்டு மனம் தவியாமல் ஒருவாறு சமாளித்துக் கொள்ளவும், படிப்படியாகப் பழகிக் கொண்டேன். குடியிருந்த வீட்டை விட்டு மாறி, விசாலமான பங்களா ஒன்றை வாடகைக்கு அமர்த்திக் கொண்டேன். மிடுக்கனான குமஸ்தா ஒருவனை அமர்த்திக் கொண்டேன். பெட்டி வண்டி என்ன, வேலைக்காரன் என்ன, பெருத்த கேஸ் கட்டுகள் நிறைய இல்லாவிட்டாலும் கைப் பெட்டி என்ன, பட்டணத்துப் பெரிய வக்கீலுக்குள்ள ஆடம்பரங்களை

யெல்லாம் மேற்கொண்டேன். என் கைப் பெட்டியும் கனத்திற் குறைவாக இல்லை; ஆனால் கேஸ்கட்டு களுக்குப் பதிலாக, எனக்கு இஷ்டமான கவிகளின் பாடற் புஸ்தகங்களும் 'கட்டுப் பாடற்ற சுயேச்சை'யைப் பற்றிய துண்டுப் பத்திரிகைகளுமே அதில் நிறைந்திருந்தன. இந்த டம்பமெல்லாம் ஆயிர ரூபாய் கொண்ட என் பணப்பையைச் சுருங்கச் செய்தது என்றாலும் உலக இயல்பை அறிந்த நான் தைரியமாகவே இருந்தேன். ஒருவர் பின் ஒருவராய் கக்ஷிக்காரர்கள் என் பங்களாவுக்குள் நுழைய ஆரம்பித்தார்கள். 'பொய்க் கேஸ்களை நான் ஏற்றுக் கொள்வதில்லை; பொய்ச் சாக்ஷியம் தயாரிப்பதிலும் நான் உடந்தையாக இல்லை' என்று அறிந்ததும் பலர் ஏமாந்து திரும்பிப் போய்விட்டார்க்ள் என்றாலும், வரவர என் பெயர் பொதுமக்களால் நன்கு மதிக்கப் பெற்றது. பொய் பிரட்டு முதலியன மலிந்துள்ள இவ்வுலகிலே யோக்கியத் தன்மைக்கு எளிதிற் கிடைக்கும் கௌரவமும் மரியாதையும் நியாயாதிபதிகள் என்னிடம் காட்டினார்கள். 'இங்கர்சால்' படிப்பும் இப்பொழுது பயன் பெற்றது. அதைக் கொண்டு, என் எதிரிகளைக் கேலி செய்தும் சாதுரியமாகப் பேசியும் அவர்களை வாய் திறக்க வொட்டாமற் செய்ய முடிந்தது.

சில வருஷங்களுக்குள், நான் படிப்படியாக உயர்ந்து மேலான ஸ்திதியை அடைந்தேன்; பூர்விக சொத்தை மீட்டுக் கொண்டேன்; நாகரிக பதவிகளைப் பெற்று, ஊருக்குப் பெரிய மனுஷ்யர்களுள் ஒருவன் ஆனேன்; தாலுகா போர்டிலும் ஜில்லா போர்டிலும் நியமனம் பெற்றது மன்றி, ஜில்லாவிலுள்ள அதிகப் பணம் படைத்த தரும ஸ்தாபனங்களை யெல்லாம் பரிபாலித்து மேற் பார்வையிடும் சங்கத்திலே ஆயுள் பரியந்தம் ஸ்தானம் வகிக்கும் பதவியையும் பெற்றேன். இத்தகைய சங்கங் களிலே பழகிய போதுதான் ஸ்தாபனங்களிலேயுள்ள சுய ஆட்சியானது ஏவ்வளவு மோசம்? என்ன வீண் கேலி?' என்று நான் முதன் முதலாகக் கண்டு கொண்டேன். நன்றாய் எழுதப் படிக்கத் தெரியாதவரும் ஆங்கிலம் என்றொரு பாஷை இருப்பதையே அறியாதவருமான பலர் இச்சங்கத்திலே என்னுடன் அங்கத்தினராக இருந்தார்கள்.

அவர்கள் பணம் படைத்தவர்கள் ஆதலால் நியமிக்கப் பெற்றிருந்தார்கள். தங்களுக்கு வேண்டியவன் எவனாவது சங்கத்தோடு வேலை யொப்பஞ்செய்த பின்பு அதிகச் செலவாயிற்று என்று கணக்கு அனுப்பி மேற்கொண்டு பணம் கேட்டபோது, அவனுக்கு அனுகூலமாக அவன் செய்த வேலைக்கு அதிகப்படியாகக் கொடுப்பது சரியே என்று தீர்மானிப்பதாக ஒப்புக்கொண்டு கூட்டத்திற்கு வந்தபோதன்றி, மற்றைச் சமயங்களில் சபைக்கு அங்கமாக வந்து போவதற்குத் தரப்படும் வழிச்செலவுத் தொகையைப் பெறுவதிலேயே கண்ணாய் இருந்தார்களேயொழிய, 'சபையிலே என்ன பேசித் தீர்மானிக்கப்படுகின்றது' என்பதைப் பற்றிய விசாரமே அவர்களுக்கு இராது. அக்கிராசனாதிபதியின் சமிக்ஞைகளைக் கவனித்து, கைகளை உயர்த்தி ஆமோதிப்பதோ, தலைகளை அசைத்து மறுப்பதோ செய்வார்களே அல்லாமல், ஜலதாரை கட்டவோ தலைவரின் தலையை வெட்டவோ எதற்கு உத்தரவிடுகிறோம் என்பதைக்கூட அறியாமல் இருப்பார்கள். இதனால், சபைத்தலைவரான சர்க்கார் உத்தியோகஸ்தர், படிப்பாளிகளாயுள்ள இரண்டொரு அங்கத்தினரிடம் மரியாதை சிறிதுங் காட்டாமல் அசட்டை செய்து, தாம் கொண்ட அபிப்பிராயங்களுக்கு முரண்படப் பேசினால், செவிசாய்க்காமலோ ஆத்திரங் கொண்டோ வீற்றிருப்பார். சர்க்கார் தரப்பு வலுவாயுள்ள இச்சங்கங்களிலே, சர்க்கார் மனம் வைத்தால் மட்டுமே மீண்டும் நியமனம் பெறலாம் என்பதை மட்டும் அறிந்து எழுத்தறியாத மூடர் அங்கத்தினராக இருக்கவே, சர்க்கார் அதிகாரியின் பேச்சே எப்பொழுதும் நிலைத்து நின்றது அதிசய மன்று. அந்த உத்தியோகஸ்தர் மற்றை அங்கத்தினரைவிட அதிகம் சுயபுத்தி வாய்ந்தவராய், ஜில்லாவின் நன்மைக்கு விரோதமாக நடப்பது அபூர்வமாய் இருந்தது தான் ஒருவாறு ஆறுதலைத் தந்தது.

ஆயினும், உண்மையில் இத்தகைய பரிபாலனத்தை 'ஸ்தல சுய ஆட்சி' என்று சொல்வது சிறிதேனும் பொருந்துமோ? நகர பரிபாலன சபைகள் இவ்வளவு மோசமாக இல்லை என்றாலும், அங்கும் காலக்கிரமத்திலே, அக்கிராசனப் பதவிக்குத் தேர்ந்து எடுக்கும் வேளைகளிலே

நேரும் விவாதங்களின் பயனாக, கக்ஷிப் பிரதி கக்ஷிகளும் சில்லறைச் சச்சரவுகளும் பிரமாதமாய் விளையும். இவ்விதத் தேர்தல் ஏற்பாட்டின் குற்றங்களை யெல்லாம் விளக்கிக் காட்டுவன கோயில் முதலிய தரும சொத்துக்களைப் பரிசீலனை செய்வதற்காக அமைக்கப்பட்ட கமிட்டிகளே. தருமங்களுக்கு ஏற்பட்ட சொத்துகள் கொஞ்சம் அல்ல; கமிட்டியார் இஷ்டப்படி கோயிலதிகாரி, தருமகர்த்தா முதலிய சிப்பந்திகளை நியமிப்பதால், வேண்டியவர் களுக்கு வேலை கொடுத்துதவுவதற்கு, தாராளமாய் இடங் கொடுத்தது. கமிட்டியிலிருப்பவர்களோ, பெரும்பாலாரும் படிப்பறியாத பணக்காரர்கள். நியமனங்களைப் பகிரங்க மாக ஏலம் போட்டு அதிகப் பொருள் கொடுப்போர்க்கு விற்பதும், சொந்த ஆட்களுக்குப் பதவிகளைக் கொடுத்துத் தரும சொத்துக்களை அவர்கள் சூறையாடுவதற்கு உடந்தையாக இருப்பதும் ஸஹஜமாயிருந்தன. உதாரண மாக, நான் கமிட்டியிலே இருந்த காலத்தில் நடந்த சம்பவம் ஒன்றை இங்கே எடுத்துக் கூறலாம். கமிட்டியில் ஒருவர் இறந்துபோனதால் அவர் வகித்த ஸ்தானத்திற்கு ஊரிலே அதிகப் பணமும் செல்வாக்குமுடைய இருவர் போட்டியாக நின்றார்கள். இருவருள் ஒருவர் ஜில்லாவிலே மிகப் பெரியதாகி அதிக வருவாயுள்ள கோயிலுக்குத் தருமகர்த்தா; ஆயினும், அதினும் அதிக வருமானம் இந்தக் கமிட்டியில் இருந்தால் கிடைக்கும் என்று எதிர்பார்த்து அந்தத் தர்மகர்த்தா வேலையை ராஜிநாமா செய்யத் தயாராக இருந்தார்; ஆனால் அவருக்குப் போட்டியாக நின்ற மற்றவர் வெகு சமர்த்தர். எதிராளியோடு மெதுவாய்ப் பேசித் தமக்குப் போட்டியாக நில்லாமல் விலகினால், ஆயிர ரூபாய் கைக்கூலி தருவதாகச் சொல்லி அவரைச் சரிப்படுத்தி விட்டார். ஆகவே, யாதொரு போட்டியுமின்றி ஒழுங்காய்க் கமிட்டி ஸ்தானத்தை அடைந்தார். அடைந்தபின் தம் அதிகாரமும் செல்வாக்கும் அதிகரிப்பதற்காகச் சில மாதங்கள் காத்திருந்தார். பிறகு திடீரென்று, 'தம்துபழைய எதிராளி தருமகர்த்தா வேலை பார்க்கும் கோயிலுக்குப் போய் ஸ்வாமி தரிசனஞ் செய்ய வேண்டும்' என்று தோன்றவே, அவ்வூருக்குப் புறப்பட்டுச் சென்றார். அங்கே போய்ச் சேர்ந்ததும், தமக்குரிய கடமையைக் கைப்பிடித்து

நிறைவேற்ற வேண்டும் என்ற உணர்ச்சி திடுமென எழுந்து அவரை உபத்திரவப்படுத்திற்று; அதனால் கோயிற் சொத்துகள் துர்விநியோகிக்கப்படவில்லை என்று தாமே நேரிற் கண்டு தம் மனத்தைத் திருப்தி செய்துகொள்ளும் பொருட்டு, கோயிற் கணக்குகளைக் கொண்டுவரச் சொன்னார். என்ன செய்வது என்று தெரியாமல், தருமகர்த்தா திகைத்துப் போய்விட்டார். பிறகு, கோயிற் சொத்தைத் துர்வி நியோகம் செய்த குற்றத்தினின்றும் தம்மைத் தப்புவித்துக் கொள்வதற்காக, தாம் முன்பு கறந்து வாங்கி ரூபாய் ஆயிரத்தையும் ஒரு வட்டி வீதம் வட்டி சேர்த்து திரும்பிக் கொடுக்க வேண்டியதாயிற்று. இவ்வாறு இந்தக் கமிட்டி யிலே தங்களுக்குக் கிடைத்த ஸ்தானத்தை ஆஸ்தியாகக் கருதியவர்கள் பலர் எனக்கு விரோதிகள் ஆனார்கள். 'படிப்பைப் பரவச் செய்வதிலும் பொதுஜன நிஷ்டூரங் களை நிவர்த்திப்பதிலும்' உபயோகித்தற்குரிய தரும சொத்துக்களை, இப்படி வெட்கம் மானம் இல்லாமல் ஒழுங்காய்ச் சூறையாடுவதைக் கண்டு வைத்தும், விரலசைக்க முடியாமல் இச்சபையில் இருந்து பாபத்தையே சம்பாதித்துக் கேடுறுவதிபும்.'இவர்களுடைய சகவாசத்தை விட்டுத் தொலைப்பதே மேல்' என்று கமிட்டிப் பதவியை ராஜிநாமா செய்து விட்டேன். இந்தக் கமிட்டியிலே நான் வேலை பார்த்த கொஞ்ச காலத்திலும், கோயில்களைப் போய்க் காணவேண்டும் என்று கமிட்டியார் மனம் வைத்தபோது, 'எனக்குத் தான் முதல் ஸேவை, எனக்குத் தான் முதல் மரியாதை' என்று அவர்கள் சண்டை போடுவதும், அந்தக் கோயில்களைச் சார்ந்த தேவடியாள் களைத் திருப்தி செய்து மனங் களிப்பிப்பதில் ஒருவரோடு ஒருவர் போட்டி போடுவதும் வேடிக்கையாய் இருந்தது.

நான் கலாசாலையிலே கல்வி கற்ற நாட்களில் இமய மலைபோல் தனித்துநின்று யாரோடும் ஸஹஜமாகப் பழகாமல் இருந்ததுபோய், இப்படி உலகோருடன் தாராள மாய்க் கலந்து கொள்ள நேரிடவே, அதன் பயனாக என் புத்தியின் வேகமும் தரும சிந்தனையும் என்னை யறியாமலே தளர்ந்துவிட்டன. வாஸ்தவமாக, சகவாசத் திற்கு உதவாத சுத்தக் காட்டுப் பிராண்டியாய்த் தோன்றி னாலும் பாதகம் இல்லை; பிறருடன் கலகலப்பாய் இராமல்,

அமரிக்கையாய் தனித்திருப்பதும், தற்பெருமை கொண்டு வீண் கௌரவம் பாராட்டுதலுங் கூட, ஒருவனுக்குள்ள நற்குணங்களைப் பாதுகாக்கின்றன. எவன் ஒருவன் (லௌகிக) பரிபாஷையில் 'கொடுக்கல் வாங்கல்' செய்கிறானோ, எல்லாரையும் திருப்தி செய்ய வேண்டும் என்று அவாக் கொண்டும், பிறர் மனம் புண்படுமே என்று பயந்தும் உள்ளதை உள்ளபடி உரைக்கத் தயங்குகிறானோ, எவனொருவன் வழவழத்த வாயனாய், பிறர் பிரீதியை நாடி, முகத்திலே சதா புன்சிரிப்பை வரவழைத்துக் கொண்டு வளைய வருகிறானோ, அவன் உலகத்தைப் பிரீதி பண்ணுவதற்காக அதிகம் பறி கொடுக்க வேண்டியவனாகிறான். மானம்போய், எவருடைய நன்மதிப்பிற்கு விலை உண்டோ அவருடைய நன் மதிப்பையும் இழந்து, தனக்கோ பிறருக்கோ உண்மையான நன்மை ஒன்றையும் செய்யத் திறனற்றவனாய் விடுகிறான். ஆ! அற்ப விஷயத்திற்காக அரும் பொருள் அனைத்தையும் அன்றோ அவன் இழப்பவன் ஆகின்றான்!

பதினைந்தாவது அதிகாரம்

# வீட்டு வாழ்க்கையையும் வெளி வாழ்க்கையையும் விவரிப்பது

**கா**லக்கிரமத்தைப் பின்பற்றாமல், என் வாழ்க்கையில், குடும்ப வரம்பினுள்ளும், அந்த மாயச் சக்கிரத்தின் புறம்பிலேயும் நிகழ்ந்த முக்கிய நிகழ்ச்சிகளையும் நான் செய்த செய்கைகளையும் இங்குத் தொகுத்து எழுதுவேன். நோயாற் சிறிதுகாலம் வருந்திய பின் நாணிப்பாட்டி காலமானாள். அதின் பிறகு, தாயார், தங்கை, மனைவி ஆகிய மூவரே என் குடும்பத்தினர் ஆயினர். கிறிஸ்துவ வேதமாகிய 'பைபிள்' நூலிலே 'தந்தையையும் தாயையும் கைவிட்டு மனைவியுடனே கூடி வாழவேண்டும்' என்று கூறியுள்ளதை அனுசரித்து, மூத்தன் முதலிலே என் மனைவியைப் பற்றி எழுதுவேன்.

தலைவலி முதலிய பிணிகளால் வருந்தி, அவளுக்கு உடம்பு கட்டுத் தளர்ந்து குலைந்து போனதை முன்னமே குறிப்பிட்டிருக்கிறேன். என் குடும்பத்தில் எல்லோரும் ஒரே பிடியாய் 'அவளுக்குப் பிசாசு பிடித்திருக்கிறது' என்று கூறி வந்த அந்நோய், வர வர அதிகரித்து ஆங்கில சிகிச்சையால் குணப்படாது போகவே, உள்நாட்டுப் 'பண்டிதர்' கையிலும் மந்திரவாதி கையிலும் கூசாமல் அவளை ஒப்புவித்ததுமன்றி, அவள் பொருட்டு அவர்கள் சொற்படியெல்லாம் வைதிகச் சடங்குகளையும் பூஜைகளையும் செய்ய வேண்டியதாயிற்று. ஒன்றையுமே நம்பாத எனக்குள்ள தீவிர அவநம்பிக்கை ஒருபுறமிருக்க, என் மனமானது அந்த மந்திரவாதிகளிற் சிலர் காட்டிய திறமையாலும் அற்புதச் செயல்களாலும் மயங்கியதால், அவர்களை ஆஷாடபூதிகள் என்றோ, மதிமூடர்கள் என்றோ திரஸ்கரிக்கவும் முடியவில்லை. சிலவேளைகளில் என் மனைவி கல்லோ மரமோ என்று கண்டோர் பிரமிக்கும்படி மணிக்கணக்காய் உயிரற்றவள் போலக் கிடப்பாள். மருந்துத் தூபங்களோ, ஊசிகொண்டு குத்தியிறக்கும் மருந்துகளோ ஒன்றும் பயன்படாது. பிறகு மந்திரவாதி வருவார்; ஏதோ முணு முணுத்துக்கொண்டே ஒரு சிமிட்டு விபூதியை அவள்மீது தூவுவார். உடனே அவள் திடுக்கென்று எழுந்து உட்கார்ந்து அவருடன் பிசாசுகளையும் பூதங்களையும் பற்றி, கதை கதையாகப் பேசத் தொடங்குவாள். இது 'ஹிப்னாடிஸமோ', 'மெஸ்மெரிஸமோ'. வேறு யாதோ, எதாயினும் சரி, அந்தத் தாந்திரிக'ரிடம் அதிசயச் சக்திகள் இருந்தன என்பதிற் சந்தேகம் இல்லை. ஆகையால் அவற்றைப் பயன்படுத்திக் கொள்ள நான் பின்வாங்கவில்லை. இப்படி மூன்று வருஷங்கள் சென்றன. நான் பட்ட துன்பத்தையும் ஓயாத மனக் கவலையையும் பார்த்தால், செலவழித்த பணம் ஒரு பொருட்டாகத் தோன்றவில்லை. முடிவிலே இராமேசுவ்ர யாத்திரையும் செய்தோம். அதிகச் செலவிலே பரிஹாரமாகச் சில கருமங்களைச் செய்துவிட்டுத் திரும்பியதும், என் மனைவியின் உடம்பு தேறிற்று. அதுமுதல், முன்போல் நினைவு தவறி, பைத்தியக்காரி போல் இருக்கவில்லை. அவள் ஆவேசமுற்று ஆடும்போது அந்த மந்திரவாதிகளில்

ஒருவர் அவளைக் கடுமையாகப் பிரம்பால் அடித்த அடியை நினைத்தால், இப்போதும் என்னுடல் பதறுகின்றது. இப்படி ஒருவிதமாய் தேக நிலை திருந்தி முன்போல் ஆகுமுன், அவளுக்குத் தமிழெழுத்துகளும் ஆங்கில எழுத்துகளும் அடியோடு மறந்து போயின. நான் மறுபடியும் அடி யிலிருந்து ஆரம்பிக்க வேண்டியதாயிற்று. படிக்கும் பருவத்தைத் தாண்டியவளாயும் சற்று மந்த புத்தியுள்ள வளாயும் அவள் இருந்ததாலும், **ஆத்திரக்காரனாயும்** அவ்வளவு நல்ல வாத்தியாராயும் நான் இல்லாததாலும், அடிக்கடி மனஸ்தாபங்கள் உண்டாகி, ஒருவரை ஒருவர் குறை கூறுவதும் ஏற்பட்டது. இந்தச் சள்ளை வேண்டாம் என்று அவளுக்கு வேறு வாத்தியாரை அமர்த்தினேன். 'தொள்ளுகிழவரானாலும் புருஷர்தானே' என்று அவரிடம் படிக்கக் கூடாது என்றுஎன் தாயார் தடை செய்தாள். அப்புறம், எத்துணையோ சிரமப்பட்டு 'கொள்ளைப் பணம்' செலவழித்து ஒரு 'வாத்திச்சி'யை அமர்த்தினேன். அதற்கும் என் தாயார் அவள் ''பறைச்சி' என்றும் கிறிஸ்துவச்சி என்றும் விட்டிற்குள் ஏற்றக்கூடாது என்றும் தடுக்கவே, நான் மனநொந்து என் தாயாருடன் சண்டைக்கு நின்றேன். இவ்வாறு என் தாயாருடன் முதல்முதலாகச் சண்டையிட நேர்ந்தது என்னாற் சகிக்க முடியவில்லை. ஆனாலும் நான் விட்டுவிடவில்ல. வீட்டிற்குச் சற்று வெளிப்புறமாக, தனித்திருந்த ஆபீஸ் அறையில் அந்த வாத்திச்சியிடம் ஒரு மணிக்கூறு படித்துவிட்டுப் போக வேண்டும் என்று என் மனைவிக்கு உத்தரவிட்டேன். என் தாயார் இதற்கு ஆக்ஷேபிக்க முடியாமல், 'அந்தப் பொல்லாத படிப்பு முடிந்ததும், பாபத்தைப் போக்கிக் கொள்வதற்காக நேராகக் குளத்திற் குப் போய் ஒரு முழுக்கு முழுகிவிட்டே, நாட்டுப்பெண் வாசற்படியேறலாம்' என்று கூறி, என் மனைவியைத் தினந்தோறும் ஸ்நானம் செய்யும்படி கட்டாயப்படுத்தி னாள். இவ்வளவு ஆகியும் 'வாத்திச்சிக்' குத் திறமை போதாததால், என் மனைவி படிப்பில் அதிக விருத்தி யடையவில்லை. குழந்தைகளும் குடும்பக் கவலைகளும் உண்டானபின், படிப்பது என்ற வெளிவேஷமும் நின்று போயிற்று. அதனால் இன்றும் என் மனைவி

எழுத்தறியாதவளாய், நிரக்ஷரகுக்ஷியாய் இருக் கிறாள். அக்காலத்தில் இது எனக்கு எவ்வளவு வருத்தத் தைத் தந்தது என்று சரிவர வருணிக்க முடியாது. 'கம்பன்' 'ஷேக்ஸ்பியர்' முதலியோரின் காவிய ரசத்தையெல்லாம் அவளோடு பருகி இன்புறலாம் என்று நான் கண்ட கனாக்களையெல்லாம் கைவிடுவதற்கு என் மனம் எவ்வளவு வருந்திற்று? அவளைக் கெஞ்சினேன், பயமுறுத் தினேன், அவளுக்கு இடையறாது போதனைகள் செய்தேன், ஒன்றும் பயன்படவில்லை. படிப்பதற்கான வயதைக் கடந்து, புத்திக்கூர்மை யற்றவளாய், ஆயிரக்கணக்கான நச்சு வேலைகளாலும் தொல்லைகளாலும் கவலைப்படு கின்ற நிலையிலுள்ளவளைப் படிப்பிக்கப் போதுமான சௌகரியங்கள் இல்லாமையாலும் கணக்கில்லாத இடையூறுகள் இருந்தமையாலும், நான் இளமைப்பருவத் தில் தேனைப் போற் சேகரித்து வைத்திருந்த இனிய கனாக்கள் எல்லாம் நாளடைவிலே சிதறுண்டு மண்ணோடு மண்ணாய்ப் பாழாகிவிட்டன.

உண்மையிலே, எனக்கு ஆடம்பரம் வெளிவேஷம் முதலியவை ஒன்றும் பிடிக்காது. ஸ்திரீகள் தங்களுக்கு இயற்கையிலே அமைந்த அழகுடன் இருப்பதே எனக்குத் திருப்தி; எவ்வளவு அதிகமாக ஒருத்தி நகைகளை அணிந்து கொள்கிறாளோ, அவ்வளவு அழகில் மட்டுப்பட்டவளாக அவள் என் கண்ணிற்குத் தோன்றுவாள். என் தாயாரும் மனைவியும் வேறுவித அபிப்பிராயங் கொண்டவர் என்று நான் சொல்ல வேண்டியதில்லை. அவர்களுக்கு ஏதாவது புதிதாய் ஒரு நகை பண்ண வேண்டும் என்று இருந்தால், அதை நான் பண்ணிக் கொடுக்கும்வரை எங்கள் வீட்டுச் சாப்பாட்டுக்கூடம் பள்ளிக்கூடமாயும் பள்ளியறை உபதேச மண்டபமாகவும் மாறிவிடும். தொடக்கத்தில் நான் ஒரே பிடிவாதமாய், விடாமிண்டனாய் நின்று பார்த்தேன்; ஆனால் என் அன்பின் ஆதிக்கம் வர வரக் குறைந்து, அன்பின் பாத்திரங்களும் பொருளாய்த் தோன்றாது போனபின்பு, அவரவர் போக்கின்படி போகட்டும் என்ற தாராள மனத்துடன் தணிந்து நடக்கலானேன். அதனால் இப்போது என் சொத்திலே ஏறக்குறைய சரிபாதி நகைகளாய் இருக்கின்றது. 'எப்படி ஆனால் என்ன?' என்று, இதுபற்றிச் சற்றும் மனங் கவலாதிருக்கிறேன்.

என் மனைவிக்கு முதலில் வரிசையாய் மூன்று பெண்கள் பிறந்தார்கள். அதனால் அவள் அதிகம் ஏமாறிப்போய்த் தன்னையே நொந்துகொண்டு, தாயாரின் கட்டளைப்படியும், ஜோஸியரின் சொற்படியும், கிழவிமார் கூறிய புத்திமதிப்படியும் சில விரதங்களையும் பட்டினி கள்ளயும் அனுஷ்டிக்கத் தொடங்கி அசுவத்த மரத்தையும் அதின் அடியிலேயுள்ள நாகரையும் பூஜிக்கலானாள். படிப்படியாய் மூடபக்தியும் மூட நம்பிக்கைகளும் அவளிடம் வலுத்துவிட்டன; அவற்றால், எங்கள் சுக வாழ்விற்கும் மனோபீஷ்டங்களுக்கும் அடிக்கடி இடைஞ்சலாய் இருந்தது. நகைப் பேச்சு, புஸ்தகப் பேச்சு இவற்றைத் தவிர வேறு சகல விஷயங்களிலும் என் பேச்சைத் தட்ட மாட்டாதவளுக்கு மூடநம்பிக்கைகளால் நிரந்தரமான அபிப்பிராயப் பேதங்கள் அதிகப்படவே, நான் திகிலடைந்தேன். மேலும் 'தெய்வ நம்பிக்கை யில்லாதவன்' என்று பிரசித்தி பெற்றவனாய் என்னை அறிந்தவர்களின் கண்முன், என் மனைவி மூடபக்தியில் ஆழ்ந்தவளாக நடந்து கொள்வதை என் மனம் ஒப்பவில்லை. ஆனாலும், அவளுக்குப் பக்கபலமாக என் தாயார் இருந்ததால், நான் என்ன கோபித்துக் கொண்டும் ஒன்றும் பலிக்கவில்லை. அவளுடைய அழகு மங்காமலோ எங்கள் காதல் குன்றாமலோ இருக்கச் செய்யும் நூதன சக்தி ஒன்றும் இல்லாத குறையால், ஒன்றின்பின் ஒன்றாய் நிகழ்ந்த இச் சிறு சம்பவங்கள், எங்களுக்கு மனச்சலிப்பையும் சச்சரவுகளையுமே கொடுத்தன.

இப்படி மனச்சலிப்பும் மனோவிசாரமும் அழுகையும் அடிக்கடி தோன்றிச் சமாதானத்திலே முடியும்; கொஞ்ச காலம் ஒருவருக்கு ஒருவர் செய்த குற்றங்களை மன்னித்தும் மறந்தும் இருப்போம்; ஆயினும், பாறையைப்போலத் திடனாய் இருந்த முழுமுதற் காதல் பிளவுண்ட பின், முன்போல ஒன்றாகி விடுமோ? வரவர எனக்கு அவள் எப்படி இருந்தால் என்ன என்ற அசிரத்தையே அதிகரித்தது. 'காதற் பெருமாட்டியின் கட்டளையைச் சிரமேற்கொள்ளும் தீரன்'; 'காதலியின் சிறு வேண்டுகோளை நிறைவேற்று வதற்குத் தன் உயிரையும் அளிக்கத் துணிந்த தயாளு' என்பது போய், தன் மனைவியை ஒருவாறு நேசித்த

போதிலும், பொதுவாக நோக்குமிடத்து, அவளைச் சற்றும் கவனியாமலும் ஒரு பொருட்டாய்ப் பாராட்டாமலும் நடந்து கொள்ளும் சாதாரண ஹிந்து மக்களின் கோஷ்டியில் ஒருவன் ஆனேன். என் மனைவி மீதுள்ள காதல் ஒழிந்து விட்டது என்று கொள்வது தவறு; அப்பொழுது வேறு எவளிடத்திலும் விட என் மனைவியிடமே எனக்குக் காதல் அதிகம் என்றால், இப்பொழுதும் அப்படியே; இதுமட்டும் அன்று; காப்புத் தெய்வமாக எனக்கு வாய்த்தவளைத் தவிர்த்து வேறு எவளையும் நான் ஒருபோதும் காதலித்தது இல்லை; அந்தக் காதலும் வேறு தன்மையையுடையது. மேலும், எங்களுக்குள்ள ஆசாபாசத்தை எங்கள் அருமைக் குழந்தைகள் அதிகம் பலப்படுத்தி விட்டன. ஆயினும், ஒரு சிறிதும் குன்றாமல் குறையாமல், என்னை விட்டு அகலாமல், நான் செத்துப் போனாலும் என்னோடு சுடு காட்டிற்கு வரும் என்னும் உறுதி கொண்டு அவளிடம் நான் வைத்திருந்த முழுக் காதல் அன்று, எனக்கு இப்பொழுதும் அவளிடம் தோன்றும் அன்பும் ஆசையும். என் உயிரை சரிவர நிலைநிறுத்தும் என்று நம்பிக்கை கொண்டிருந்த சக்தி என்னை விட்டுப் போய்விட்டது; என்னை நல்வழியிலே நடத்தும் சுக்கானும் ஒடிந்து போய்விட்டது; என் அகத்தேயுள்ள மனச்சாக்ஷி என்னும் காந்தக் கருவியும் திசைகாட்டாது தடுமாறிச் சீர்குலைந்து போய்விட்டது; குடும்பக் கப்பலை நடத்தும் மாலுமியாகிய நான், இவற்றின் உதவியின்றியும், சற்றும் முன்பின் யோசியாமலும், இப்படியும் அப்படியுமாகத் தடுமாறி, தன்னிடத்திலும் தன்னைச் சூழ்ந்துள்ளவற்றிலும் அதிருப்தி கொண்டு, கப்பலைச் செலுத்தினேன் என்றதால், ஆச்சரியம் அன்றே? இப்படி நான் பரிதவித்த நாட்களிலே ஆபூர்வமாய்ச் சில வேளைகளிற் சிந்தனை செய்வேன். அப்பொழுதெல்லாம் குற்றங்களின் பாரத்தை முழுவதும் என் மனைவிமீது சுமத்தி, 'அவள் மட்டும் என் மனத்தின்படி வாய்த்திருந்தால் நான் எவ்வளவு நல்லவனாக இருந்திருப்பேன்?' என்று எண்ணுவது உண்டு. அதுவும் உண்மையாயிருக்கலாம் என்றாலும், யோசித்துப் பார்த்தால், இவ்வாறு நான் பிசகாக எண்ணியது, 'காலதோஷத்தாலே நான் தகாத துயரங்களுக்கு ஆளாகி, துன்பங்களை அதிகமாய்

அனுபவித்தவன்' என்று என்னையே நான் கருதிக் கொள்ள வேண்டும் என்ற அவாவினாலேயே,' என்று இப்பொழுது நன்கு புலப்படுகின்றது. ஏனென்றால், என்னைக் காட்டிலும் அவள் என்மீது அதிருப்தியடைவதற்கு அதிகக் காரணங்கள் இருந்தன; அவள் என்னிடம் காட்டிய காதலிலோ, நடத்தையிலோ, என்னைப்போல் மாறுதலடையாமல், இவ்வளவிற்கும் யோக்கியதை யில்லாத என்னிடத்து, மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றிலும் அப்பு அழுக்கு அற்றுத் தூய்மை வாய்ந்து விளங்கினாள் அன்றோ? எழுத்து வாசனை யில்லாதவளது இருதயம் இவ்வாறு செம்பொன்னாய் விளங்கவும், படித்துப் பட்டம் பெற்றவனுடைய இருதய்ம் அன்றோ பித்தளையாய்ப் போயிற்று! உயர்ந் ஸ்திரீ தர்மத்தினின்று ஒருபோதும் அவள் அணுவளவும் விலகி நடக்கவில்லை. அதனால் அன்றோ என்னையும் அவளாலே காப்பாற்ற முடிந்தது, இதையெல்லாம் நான் எழுத நினைக்கவில்லை. உலகத்தோருக்குச் சொல்லத் தக்கதும் அன்று; அவர்கள் கேட்கவும் விரும்பாதவர்களாய் இருக்கலாம்; என்றாலும் சொல்லியாய் விட்டது.

பெருந் துன்பத்தையே ஆடையாகக் கொண்ட ஒரு ரிஷிபத்தினியைப் போலத் தோன்றிய என் தாயாரை நான் ஹிந்து மனைவிக்குச் சிறந்ததோர் எடுத்துக் காட்டாய்க் கொண்டு, அவளுக்கு ஏற்ற பிள்ளையாய், அவளுடைய மனம் கோணாதபடி நடக்க வேண்டும் என்று தீர்மானித்தேன். பல விஷயங்க்ளில் அவள் இட்டதே சட்டம்; அவள் சொற்படி நடப்பதிலே நான் மனச்சாட்சியின் தூண்டுதலையும் அடிக்கடி மீறி யிருக்கிறேன். 'சுற்றியுள்ள உலகம் பொய்யும் பித்தலாட்டமும் நிறைந்து, ஒருவரை யொருவர் ஏமாற்றுவதும் தம்மைத் தாமே ஏமாற்றிக் கொள்வதுமாய் இருக்கையில், நான் மட்டும் மனச்சாட்சி என்னும் காரணங் கொண்டு, அற்ப விஷயங்களிலும் என் தாயாரின் மனத்தைத் திருப்தி செய்யாமல் இருப்பதா? மனச்சாட்சியை ஒருமூலையிலே ஒதுக்கி விட்டால் என்ன?' என்று நினைத்தேன். அவள் சாகுமுன் ஒரு நாளாவது, நான் காலையில் ஸ்நானஞ் செய்து ஸந்தியாவந்தனாதிகளை ஒழுங்காகச் செய்வதைப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்படுவத்தாக

ஒரு நாள் என்னிடம் சொன்னாள். நானோ நிரீசுவரவாதஞ் செய்யும் நாஸ்திகன்; ஆனாலும் அவளுடைய இஷ்டப்படி நடக்க வேண்டும் என்று வெகு காலம் மறந்திருந்த ஸந்தியாவந்தன மந்திரங்களைக் கற்றுக் கொள்வதற்காக ஸந்தியாவந்தனப் புஸ்தகம் ஒன்றை வாங்கி, என் நண்பர்களும் அயல் விட்டாரும் அதிசயிக்கும் படி, அதி சிரத்தையுடன் யதோக்தமாய் ஸந்தியாவந்தனம் முதலிய கர்மானுஷ்டானங்களைச் செய்து வந்தேன். 'சிறிதும் யோசனையின்றி, திடகாத்திர முடையவர்களுக்குப் பிச்சை போடுவது பிசகு' என்று தீவிரமான கொள்கையு டையவன் ஆயினும், என் தாயாருடைய விருப்பத்திற்கு இணங்கி வாசற்படி ஏறிவரும் யாசகன் எவனுக்கும் இல்லை என்று சொல்லாது பிச்சை போடச் செய்தேன். பிரதி தினமும் என் மனக்கொள்கைகளுக்கு முற்றிலும் மாறாகவே எல்லாக் காரியங்களும் நடைபெற்றன. வீட்டிலே நடத்திய விசேஷங்களுக்கும் விரதங்களுக்கும் தேவாராதனை முதலிய வற்றுக்கும் ஒரு கணக்கு இல்லை. அவைகளிற் பல வற்றிலே நானும் தலையிட்டு, எனக்கிருந்த அருவருப்பைத் தூரத் தள்ளிவிட்டு, என்னாற் கூடியமட்டும் உல்லாஸ மாகவே நடந்துகொள்ள வேண்டியதாயிற்று. எனக்கும் என் தாயாருக்கும் இடையே இருந்த அபிப்பிராய பேதங்களை யெல்லாம் இங்கே ஞாபகப்படுத்திக் கொண்டு, அவ்வச் சமயங்களில் நான் அவளுக்கு எவ்வாறெல்லாம் இணங்கி நடந்து கொண்டேன் என்று எடுத்துக்காட்டுவது வாசிப் போருக்கு வீண் சிரமமாக முடியுமே தவிர, அதனால் வேறு பயன் யாதொன்றும் இராது; அப்படி எழுதுவதும் சரியன்று; அது என்னுடைய நன்றியின்மையையன்றோ குறிப்பிட்டதாகும்! விட்டிற் பூச்சியின் வாழ்க்கையைப் போல் அநித்தியமான இவ்வுலக வாழ்க்கையிலே, பெற்ற தாய் வேண்டினால், அவள் வேண்டியவாறு விட்டொ ழிக்கத் தகாத கொள்கையோ அரும்பொருளோ என்ன இருக்கின்றது?

என் சிறிய தங்கையைப் பற்றி முன்னமே சொல்லியி ருக்கிறேன். அவளுக்கு ஐந்து வயதா யிருக்கும்போது என் பெற்றோர்கள் அவளை ஒரு பணக்காரப் பண்ணையாரின் மகனுக்கு விவாகஞ் செய்வித்தார்கள். அதின் பிறகு நான்கு

வருஷத்தில் அந்தப் பையன் சுரங் கண்டு இறக்கவே, என் அருமைத் தங்கை கோமளம் காதலிப்பதும் காதலிக்கப் படுவதும் எவ்வாறு இருக்கம் என்று அறியுமுன்பே கைம்பெண் என்று ஆனாள். அவள் அதிபுத்திசாலி, நல்ல அழகு வாய்ந்தவள். எப்பொழுதும் வேடிக்கையும் விளை யாட்டுமாய், கலகலவென்று இருப்பவள்; அவளுக்கு இந்தக் கதி நேர்ந்தது என் தாயாருக்கு அதிகத் துன்பத்தை உண்டு பண்ணிற்று. அவளை மறுபடி விவாகஞ் செய்து கொடுக்கலாம் என்றேன். ஆனால் அப்படிச் செய்வதைக் காட்டிலும் என் தாயார் தம் கையாலே வேண்டுமானாலும் அவளைக் கொலை செய்வதற்குச் சம்மதிப்பார் என்று தெரிந்தது. அதனால் ஒன்றும் அறியாத அப்பேதை அப்படியே காலத்தைக் கழிக்க வேண்டியதாயிற்று. சில வருஷங்கள் ஆனபின், மீண்டும் என் தங்கைக்கு கல்யாணஞ் செய்விக்கலாம் என்று எனக்குத் தோன்றிற்று. வைதிகக் குடும்பத்துப் பையன்கள் அவளை மணஞ் செய்துகொள்ள சம்மதிக்க மாட்டார்கள். ஆங்கிலங் கற்று முன்னேற்றமடைந்த பையன்களும் ஊரார் ஏசுவதற்குப் பயந்து அவளை மணப்பதற்கு முன் வராமற் போகவே, எல்லாத் துறைகளிலும் ஒரு கைபார்த்து, நன்னடத்தையும் நற்புத்தியும் இல்லாததால் எங்கும் அபஜயம் அடைந்த ஒரு சோதா, நான் என் தங்கைக்குப் பதினாயிரம் ரூபாய் ஸ்ரீதனமாகக் கொடுப்பதானால் அவளைக் கல்யாணஞ் செய்து கொள்வதாய்ச் சொன்னதைக் கேட்டு, எப்படியா கிலும் அவள் சுகமாக வாழ வேண்டும் என்னும் ஆசையால், அவளிடம் பிரஸ்தாவித்தேன். ஆனால் அவள், நான் எதிர்பாராதபடி நற்புத்தி வாய்ந்தவளாய், 'இப்படிப் பட்டவனோடு நான் என்ன சுகம் அனுபவிக்கப் போகிறேன்?' என்று மறுத்துக் கூறி, தனக்குப் புனர்வி வ்வாகம் செய்வித்தால், விவாகத்திற்கு உரிய பருவத்தை அடைகின்ற என் பெண்களுக்கு நல்ல வரன் கிடைப்பதற்கு அது இடைஞ்சல் ஆகும் என்று ஆக்ஷேபித்தாள். பிறகு ஒரேமாதிரியான உயர்ந்த அபிப்பிராயங்களை யுடையவர் களாய், தங்களுடைய பொது நோக்கங்களாலும் யோசனை களாலுமே கட்டுண்டும், நாட்டில் வழங்கும் கெட்ட வழக்கங்களாற் கட்டுண்டிராமலும், ஊரார் ஏச்சுக்குப்

பயப்படாமலும், தைரியமாய் முன்னிற்பவர்களாய், புத்திசாலிகளாய் இருப்பவர்களை 'நாகரிகச் சீர்திருத்தச் சங்க'மாகச் சேர்த்து எவ்விதத்திலும் திருந்திய வம்சங்களைச் சிருஷ்டிப்பது என்று பிரயத்தனஞ் செய்தேன். அந்தோ, வெகு சிரமப்பட்டுப் பொறுக்கியெடுத்து, பிரத்யேகமாய் இவ்வபிப்பிராயத்தை விவரித்து என்னால் கடிதம் அனுப்பப்பெற்ற நூற்றுவருள், நான் இப்படி வீணாகக் காகிதத்தையும் பொழுதையும் பிரயாசையையும் செல விட்டதின் பயனாக, ஒரு பத்துக் கனவான்களுக்கு மட்டுமே பதில் எழுத மனம் வந்தது; அவர்களும், என் எண்ணமானது எவ்வளவு நன்றாயும் உயர்ந்ததாயும் அத்தியாவசியமான சீர்திருத்தத்தைப் பற்றியதாயும் இருந்தாலும், ஜன ஸமூஹத்தின் தற்கால ஸ்திதியைக் கவனித்தால், அது காரியப்படும் என்று தோன்றவில்லை என்று ஒரே ரீதியாய் அபிப்பிராயப் பட்டார்கள். ஆகையால் என் பிரயாசையும் பரிசிரமமும் வீணாயின.

எனக்குப் பெண்கள் பிள்ளைகள் ஒன்றிலும் குறை வில்லை. எங்கள் ஜாதியில், பையன்களை மாப்பிள்ளை களாக விலை கொடுத்து வாங்குவதும், விவாக சமயத்தில் பெண்களுக்குச் சீதனம் கொடுத்து ஏராளமாகச் சீர் செய்வதும் வழக்கம். பெண்ணிற்கு விவாகமாகும்போது, தகப்பனாருடைய அந்தஸ்துக்குத் தக்கபடி மாப்பிள்ளைக்கு அதிகப் பணம் கொடுக்க வேண்டும். இந்த விஷயத்திலாவது என் மனோபீஷ்டப்படி நடத்த வேண்டும் என்று எண்ணி என் பெண்களைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பியும் வீட்டிலே வாத்தியார் வைத்தும் நன்றாகப் படிக்கச் செய்தேன்; அவர்களுடைய அழகையும் படிப்பையும் கண்டால், படித்த பையன்கள் வலிய வந்து அவர்களை விவாகஞ் செய்து கொள்வார்கள் என்று எண்ணினேன். என் மூத்தமகளுக்கு ஏழு வயதானதுமே, என் தாயாரும் மனைவி யும் அவளுக்கு வரன் தேடும்படி என்னைத் தொந்திரை செய்தார்கள். என் தாயார், வழக்கம்போல், "நான் சாகுமுன், கமலாவுக்குத் தாலிகட்டிப் பார்க்க வேண் டாமா?" என்று சொன்னாள். ஆனால் அவள் சொன் னதைச் சட்டை பண்ணாமல், நானும் வேடிக்கையாய், "நீ இவ்வளவு சீக்கிரம் சாகக்கூடாது, அம்மா! அதற்காகவாவது

கமலாவின் கல்யாணத்தைத் தாமதப்படுத்த வேண்டும்'' என்று பதிலளித்தேன். இந்தமாதிரிச் சாக்குபோக்குச் சொல்லியும் இரண்டு வருஷந்தான் கடத்த முடிந்தது; கமலாவிற்கு ஒன்பதாவது வயதிலேயே மாப்பிள்ளை தேட வேண்டியதாயிற்று. இதற்காகச் சென்னப் பட்டணத்திற்குச் சென்று, அங்குள்ள சகல கலாசாலைகளையும் போய்ப் பார்த்து, மூன்று பையன்களைப் பொறுக்கி யெடுத்தேன். அவர்களில் ஒருவனை 'ஸகோத்திரன்' என்று தள்ளுபடி செய்யவேண்டியதாயிற்று. மற்றிருவரில் ஒருவன், நேராக, வாய் கூசாமல் 'உங்கள் பெண்ணுக்கு ஆயிர ரூபாய் சீதனம் கொடுப்பீரா?' என்று கேட்டதைக் கண்டு ஆச்சரியப்பட்டு, அவனுக்கு ஒரு நமஸ்காரம் பண்ணி விட்டு, பி.எல். பரீக்ஷைக்கு வாசிப்பதற்கு என்னிடமிருந்து பணவுதவியை எதிர்பார்ப்பதாக மட்டும் ஜாடையாய் எனக்கு அறிவித்ததோடு நின்ற மூன்றாமவனையே தேர்ந்தெடுத்தேன். பிறகு ஜாதகங்கள் பொருந்த வேண்டியதாயிற்று. ''தானே பெரியவன் என்றும், உலகங்கள் அனைத்தும் தனக்காகவே அமைக்கப்பட்டன என்றும் மானுடன் அகம்பாவங் கொள்வதற்கு அனுசரணையாக இருப்பது ஜோதிஷம்'' என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். மேலும், கமலாவின் ஜாதக விஷயமாய் ஒரு ஜோஸியர் ஏதோ சந்தேகமாய்ச் சொல்லவே, அப்பொழுதே அவள் ஜாதகத்தைக் கிழித்தெறிந்துவிட்டு, அவள் பிறந்த வேளையைக் குறிப்பிட்டு வைக்கவில்லை என்றும், அதனால் ஜாதகங் கணிக்க முடியவில்லை என்றும் சொல்லிக் கொண்டிருந்தேன். நல்லவேளை, பையனுடைய தகப்பனாரும் ஜாதகமின்றியே சம்மதித்தார். நான் பட்டணத்திலிருந்து ஊருக்கத் திரும்புமுன், மாப்பிள்ளைப் பையன் என்னைத் தனக்கு முந்நூறு ரூபாயில் ஒரு 'சைகில்' வாங்கித் தரும்படி செய்தான். பிறகு, என் தாயார் மேற்பார்வையிலே, கல்யாணச் செலவு, பெண்ணுக்குப் போட்ட நகைகளையும் பிள்ளை வீட்டாருக்குச் செய்த சீர் சிறப்புகளையும் தவிர, ரூபாய் இரண்டாயிரம் ஆயிற்று.

எனக்கு மதவிஷயமாய் இருந்த சந்தேகங்கள் பேச்சோடும் எண்ணத்தோடும் நின்றன. அப்படியே நியாயம், ஜனாசாரம் இவற்றைப் பற்றிய கொள்கைகளும்

பேச்சோடு நின்றுவிட்டன. அவற்றிற்கும் நான் நடத்திய தினசரி வாழ்க்கைக்கும் யாதொரு சம்பந்தமுமே இல்லை. யாரும், சில விஷயங்களைப் பற்றி ஊரார் கொண்டுள்ள பலத்த கொள்கைகளுக்கு விரோதமாய்த் தனித்து நின்று, அக் கொள்கைகளை நிராகரித்துத் தன் அபிப்பிராயப்படி நடத்த முடியாது என்பதையும், முக்கியம் என்றும் பொதுமக்கள் அவற்றிலே தலையிட வேண்டியது அவசியம் என்றும் எனக்குத் தோன்றிய வேறு சில விஷயங்களிலே பொதுமக்கள் சிறிதும் கவனஞ் செலுத்தாமல் இருப்பதையும், நாளடைவில் நான் கண்டுகொண்டேன். ஏதோ பண்டைய நாகரிகத்தின் அர்த்தமற்ற சின்னங்களாய் விளங்கும் சிற்சில பழக்கவழக்கங்களை வெளிக்கு அனுஷ்டிப்பது போல் இருப்பது மட்டுமே நம்மிடமிருந்து எதிர்பார்க்கப்படுகின்றது. பூணூலைப் போட்டுக் கொண்டால், பிராம்மணரல்லாதாருடன் பகிரங்கமாய்ச் சாப்பிட்டாலும் அவர்களோடு கொண்டு கொடுத்துச் சம்பந்தஞ் செய்யாத வரையில், என்னை எல்லோரும் பிராம்மணன் என்றே மதிப்பார்கள்; அந்த உயர்சாதியாரின் உரிமைகள் எல்லாம் எனக்கும் அளிக்கப்படும். சிற்சில அற்ப அனுஷ்டானங்களையும் மேற்கொண்டு விட்டால், என்னை 'வைதிகச் சிரத்தை வாய்ந்த கனவான்' என்று புகழ்வார்கள். மேலும், பலவிதமான பிரத்தியக்ஷ தோஷங்களையும் மறைப்பிக்குஞ் சக்தி பணத்திற்கு எப்பொழுதும் உண்டு என்பதை உணர்ந்தேன். நான் விடனாகவோ, பிறர் மனையேகும் பாபியாகவோ, குடிகாரனாகவோ, பொய்யனாகவோ, படுமோசக்காரனாகவோ இருக்கலாம்; பொய்ச் சத்தியம் செய்யலாம்; இவ்வித விஷயங்களிலே பொது மக்கள் எனக்குச் சுயேச்சை அளித்திருக்கிறார்கள்; இவற்றையெல்லாம் கவனிக்கவே மாட்டார்கள். ஆனால் என் தலைமயிரை ஒட்டக் கத்திரிக்கவோ, மீசை வளர்க்கவோ, தொப்பி போடவோ, பூணூலை எடுத்தெறியவோ, நான் தலைப்பட்டாலும், என் இளைய சகோதரி அமங்கலியானாள் என்று அவளது அழகிய கருங்கூந்தலை எடுக்க நான் சம்மதியாவிட்டாலும், என் மனைவியை என்னோடு திறந்த வண்டியிலே காற்றாட

அழைத்துச் செல்லத் துணிந்தாலும், அவள் வெயிலிலே நடந்துபோக வேண்டியதாயிருந்து, காலிற் செருப்பும் கையிற் குடையுமாகச் சென்றாலும், உடனே இந்தப் பொதுஜனப் பிரமுகர்கள் என்னைத் திரஸ்காரஞ் செய்து, தங்கள் மத்தியில் எனக்கு இருப்புக் கொள்ளாதபடி நடந்து கொள்வார்கள். நான் என் மனைவியை அடிக்கலாம்; அவளைப் பட்டினி போடலாம்; அவள் கண்ணிற்கு எதிரிலே என் வீட்டிலே இருபது வைப்பாட்டிகளை கொண்டு வந்து வைக்கலாம். அவள் மட்டும், 'என் சிநேகிதர்களா னாலும், ஆண்மக்களோடு வாய்திறந்து பேசக்கூடாது; மற்றவர் முன்னால் என் கண்ணில் படும்படி உட்காரக் கூடாது. உலகத்திலேயே மிகச் சிறந்தவை என்று பேர்போன ஏழு அதிசயங்களும் இந்த 'ஊர் வாய்' என்னும் அதிசயப் பொருளோடு ஒப்பிடத்தக்கவை அல்ல; இந்த 'ஊர் வா'யின் புத்தி சாதுர்யத்தோடு ஒப்பிடும்போது, கிரேக்க நாட்டிலே பிரசித்தி பெற்று விளங்கிய முனிவர்கள் எழுவரும் சுத்த முழுமுட்டர்கள் ஆவார்கள். இவ்விதம் கடுங்கோல் செலுத்தும் ஜன சமூகத்தின் இஷ்டப்படி யெல்லாம் நானும் கீழ்ப்படிந்து நடந்து, வீட்டிலும் 'தாயார் மனம் ஒப்ப நடக்கும் பிள்ளை'யாய் இருந்தேன் என்ற மானக்கேட்டை ஒப்புக் கொள்கிறேன்.

ஆனால், நான் வீட்டை விட்டுப் புறப்பட்டு, நீண்ட அங்கியும், தலைப்பாகையும் தரித்து, காலிலே உயர்ந்த தோலால் அமைக்கப்பட்ட ஜோடுகளை அணிந்து காட்சியளிக்கும்போது, வேறொரு கோவிந்தனாகி விடுவேன். "இவ்வொருவனுக்கும் இரண்டு ஆத்ம வடிவு கள் இருக்கின்றன; ஒன்று உலகத்தைத் தாக்குவதற்கு; மற்றொன்று தான் காதலிக்கும் பெண்மணியோடு பழகுவதற்கு" என்று 'ப்ரௌணிங்'' என்னும் ஆங்கிலக் கவி சொல்கிறார். இது இந்தியரல்லாதார்க்கு மட்டுமே போலும்; ஏனென்றால், இந்தியாவிலே ஒவ்வொரு வனுக்கும் குறைந்த பக்ஷம், மூன்று ஆத்ம வடிவங்கள் தேவை. நான் மேலே குறித்த குடும்ப வருணனையி லிருந்து, குடும்பத்தில் பிராணனுக்குச் சமானமாய் நான் கருதக் கூடியவர்களிடம் புத்திகோசரமான எந்த விஷ

யத்தைப் பற்றியும் வியவகரித்துப் பேச முடியாது என்பது விளங்கும். அவர்களோ படிப்பறியாதவர்கள், பக்குவப் படாத புத்தியை யுடையவர்கள்; பிறருடன் ஸம்பாஷிப் பதற்கு ஏற்ற எந்த விஷயத்திலும் புத்தி செலுத்த இயலாதவர்கள். நான், ஒரு தடவை, பேச்சோடு பேச்சாக, நகைப் பைத்தியத்தால் வரும் கேடுகளைப் பற்றி விஸ்தரித்து 'பொலிடிகல் இகானமி' என்னும் சாஸ்திரத்தின் நுட்பங்களையெல்லாம் எடுத்துக் கூறியது எனக்கு நன்றாய் ஞாபகமிருக்கிறது. அவர்களாலும் மறுக்க முடியாத முகாந் தரங்களைக் காட்டி, விஷயத்தைத் தெளிவாய் எடுத்துக் கூறியபோது சற்று மூச்சு வாங்கவே, நான் பேசியதைக் கேட்டுக் கொண்டிருந்தவர்கள் என்ன சொல்கிறார்கள் என்பதை அறிவதற்காகப் பேச்சை நிறுத்தினேன். உடனே என் மனைவி, 'பொன் வெள்ளி இவற்றாலான நகைகள் எப்படிப் பொன் வெள்ளி இவற்றாலான நாணயங்களைக் காட்டிலும் அதிகக் கேடு விளைக்கக் கூடும்! எல்லாம் பொன்னும் வெள்ளியும் தானே' என்று சொன்னாள். இப் பேதைமொழியைச் செவியுற்றதும், இது பிரயோஜன மில்லை என்று இவ்வாறான பேச்சை நிறுத்திக் கொண் டேன். அன்றுமுதல், பிறப்பு, கல்யாணம், சாவு முதலிய நிகழ்ச்சிகளைப் பற்றியும், சமையல், சாப்பாடு, அக்கப் போர் முதலிய முக்கிய விஷயங்களைப் பற்றியுமே என் குடும்பத்தாரோடு கலந்து பேசுபவன் ஆனேன்; மற்ற விஷயங்களை யெல்லாம் 'கிளப்'பிற்கும் பிரசங்க மேடைக் குமே உரியவை என்று அப்புறம் ஒதுக்கி விட்டேன். 'வேரோடு சீர்திருத்தம் செய்ய வேண்டும்', 'உடனே சட்டத்தை ஏற்படுத்தி வர்ணாசிரம வித்தியாசங் களை யெல்லாம் அறவே ஒழித்துவிட வேண்டும்' என்று ஒரு தடவை பிரசங்கஞ் செய்தேன். நானோ, கனத்த தடியைத் தூக்க முடியாமல் இலேசான பிரம்பையே தாங்குகோலாகக் கொண்ட 'நோஞ்சல்'ப் பார்ப்பான். ஆனாலும், இந்தியாவிலே ஆயுத பாணிகளாய் இருப் பதைக் கட்டுப் படுத்தும் 'ஆர்ம்ஸ் ஆக்ட்' சட்டத்தின் கொடுமையையும் அதனால் நமக்கு விளையும் மானக்கேட்டையும் இடிபோல முழங்கிப் பிரசங்கிப்பதிலே சளைக்கமாட்டேன். சகல

மதங்களின் கோட்பாடுகளையும் பக்ஷபாத மின்றித் தூஷித்து, உலகத்திலுள்ள கேடுகளுக்கு எல்லாம் அவையே காரணம் என்று கண்டித்துப் பேசுவேன். அப்படியே, பெண் மக்களுக்குச் சுதந்தரம் அளிக்கப்படவில்லையே என்று மனநொந்து, அவர்களை முன்னுக்குக் கொணர்ந்து, ஆண் மக்களோடு 'சரி நிகர் சமானமாக' வைத்துச் சம வுரிமை வழங்க வேண்டும் என்று வெகு உருக்கமாகப் பேசுவேன். விவாகஞ் செய்து கொள்ளும் மணமகளும் மணமகனும் வயது வந்தவர்களாய் இருந்தால் மட்டுமே விவாகத்தால் உண்டாகும் கடமை களை நன்குணர்ந்தவர் களாய் அக்கடமைகளின்படி நடந்து கொள்ளக் கூடியவர் களாய் இருப்பார்கள் ஆகையால், பாலிய விவாகம் கூடாது என்று கோஷிப்பேன். மேலும் தம்பதிகள் இருவரிலும் ஒருவர் இஷ்டப்பட்டால் விவாக ரத்து செய்து கொள்வதற்குத் தடையாக விவாகச் சட்டத்தில் ஒன்றும் இருக்கக் கூடாது ஆகையால், மதக் கோட்பாடு ஒன்று மின்றி உலக நடவடிக்கை போலவே விவாகங்களை யும் நடத்த வேண்டும் என்று அபிப்பிராயப்பட்டேன். சுருங்கச் சொன்னால், சுயேட்சைப்படி நடப்பதற்குக் கூடியமட்டும் வசதி அளிக்கப்பட காலதாமதமின்றிச் செய்து முடிக்க வேண்டும் என்றும் கண்டிப்பாய்க் கூறினேன். இவ்விதம் உபந்நியாசஞ் செய்த காலத்திலே நான் எழுதிய உபந்நியாசக் குறிப்புகளும் வியாசங்களுமாய் ஒரு பெரிய காகிதக் கட்டு இருந்தது. இரண்டு வருஷத்திற்கு முன்புதான், அதற்குத் தகுந்தபடி, மண்ணெண்ணெய் அபிஷேகஞ் செய்து யதோக்தமாய்த் தகனம் செய்துவிட்டேன்.

### பதினாறாவது அதிகாரம்

## எனது ராஜீயக் கொள்கைகளைக் குறிப்பது

இந்த அதிகாரம் மொழிபெயர்க்கப்படவில்லை.

## பதினேழாவது அதிகாரம்

# அதிருப்தி ஏற்பட்ட விதத்தைக் கூறுவது

இப்படியாக, காலக்கிரமத்தில், படிப்படியாய் உலக அனுபவத்தைப் பெற்று, பூமியில் இருப்பவருள் ஒருவனாகமட்டும் என்னைப் பாவித்துக்கொண்டு பற்றற்று இராமல், உலக வழக்கங்களோடு அற்ப சுகங்களிலும் சிறு வெற்றிகளிலும் ஆசைவைத்து ஒட்டி வாழ்ந்து, நான் பழகிவந்த சிற்றூரின் கூக்குரலையே உலகம் அனைத்தும் மெச்சும் பெருங்கோஷமாகக் கொண்டு அடிக்கடி ஏமாந்து, உலக வாழ்க்கையின் உயர்கருத்தையும் உன்னத லக்ஷ்யங்களையும் பொருட்படுத்தாமலும், யாதொரு சிரமத்தையும் மேற்கொள்ளாமலும், சுகவாழ்வு வாழ்ந்தேன். நான் வேத வாக்கியமாகக் கொண்ட நூல்களில் ஒன்றிலே, 'மரணம் என்பது கதவோ, சுவரோ, உயிரின் ஆரம்பமோ, முடிவோ, சொல்ல முடியாது; நாம் இதனை அறியோம்' என்று உள்ளது. என் அபிப்பிராயமும் இதுவே. 'எது உண்மை என்று உனக்குத் தோன்றுகிறது என்று திட்டமாகச் சொல்' என்றால், 'சாவு சுவர் போன்றதாகவே இருக்க வேண்டும்; வாழ்க்கையின் முடிவாக இராமல் வேறு ஏதாக இருக்கக்கூடும்?'' என்றே சொல்வேன். உண்மையைச் சொன்னால், என் கொள்கைகளும், 'அதிக ஜனங்களுக்கு அதிக சுகம் கொடுப்பதுதான் செய்யத் தக்கது' என்ற மதமும், 'தக்கவையே தங்குவன' என்ற பிரமாணமும் ஆகிய இவையெல்லாம் சேர்ந்தும், தினசரி வாழ்க்கைக்கு வேண்டிய பொருத்தமான தரும வழியை எனக்கு விளக்கிக் காட்டவில்லை. வெகு முன்னரே என் கொள்கைகள் ஒரு புறமும், என் நடத்தை ஒரு புறமுமாய், விட்டுப் பிரிந்து விலகிச் செல்வன ஆயின. பழைய பழக்கங்கள் சிலவற்றின் வேகமும் திடுமென்று மனோ வேகத்துடன் நடந்து கொள்ளும் சுபாவமுமாய்ச் சேர்ந்து என் நடத்தையை ஒரு ரீதியாக அமையாதபடி செய்து, என் செய்கைக்கு ஒரு போதும் நான் ஏற்ற காரணங்களைக் காட்டமுடியாதவாறு

என்னை வெறும் மிருகமாகச் செய்து விட்டன. மொத்தத்திலே, என்னைப் போன்ற இதர மனிதர்களுட் சிலரைக் காட்டிலும் நான் அதிக அன்புடைய கணவனாக வும் பிரியமுள்ள பிதாவாகவும் தளராத நண்பனாகவும், சிறந்த நல்லொழுக்கமுடையவனாகவும் இருந்தேன் என்றால், தயையும் இளகிய மனமும் எனக்கு இருந்தால்மட்டுமே யல்லாமல், என்னுடைய பரம யோக்கியமான கொள்கைகளும் தீவிரமாக நான் கொண்ட அபிப்பிராயங்களும் அல்ல அதற்குக் காரணம். பாலியப் பருவத்திலே நான் கண்ட கனாக்களிலே நான் கொண்ட கொள்கைகளைப் பார்த்தால், நரகத்திலே வீழ்ந்த 'சாத்தான்' 'பீல்ஸிபப்' என்பவரோடு தான் என்னை இப்பொழுது ஒப்பிடவேண்டும். ஒருவேளை என்னை அவர்களினும் இழிந்தவனாகவும் கொள்ளலாம்; ஏனெனில், என் ஈன நிலைமையை நான் சிறிதும் உணராமலும், இவ்வளவு தாழ்ந்த நிலைமையிலே இருப்பதற்கு மனம்பொறாது இந் நிலைமையை மாற்ற முயலாமலும் சற்றும் உணர்ச்சி யின்றித் திருப்தனாய் இருக்கின்றேன் அல்லவா?

எப்பொழுதுமே புஸ்தகங்கள் என்றால் எனக்குப் பிரியம் அதிகம்; 'ரெயினால்ட்ஸ்' நூல்களைக் கைவிட்ட தும், ஸ்காட்', 'தாகரே' 'டிகன்ஸ்', 'ஜார்ஜ் எலியட்', என்பவரின் நூல்களைக் கைக்கொண்டேன். 'கார்லைல்' எழுதிய 'ஸார்டார் ரிஸார்ட்ஸ்' என்ற நூலும் 'எட்வின் ஆர்னால்ட்' பாடிய 'ஆசிய ஞாயிறு' என்ற காவியமும் ஆரம்ப முதற்கொண்டு நான் மிகப் பிரியமாய்ப் பாராட்டி வந்த புஸ்தகங்கள்; பதவியும் அதிகாரமும் மேற் கொள்கின்ற வெளி வேஷங்களைப் பிடுங்கி யெறிந்து, அவைகளுடைய உண்மைச் சொருபத்தை விளக்கிக் காட்டி, இயற்கையுணர்ச்சி என்பது எவ்வாறு இவ்வுலகு முழுவதையும் ஒன்றோடொன்று உறவு கொண்டதாகச் செய்கின்றது என்பதை 'கார்லைல்' தான் எனக்கு அறிவித்த வர். மாட்சிமை பொருந்திய ராஜாதிகாரத்தின் மரியாதை களாலும் மற்ற கௌரவங்களாலும் சூழப்பெற்றுச் சிம்மா சனத்திலே வீற்றிருக்கும் சக்கிரவர்த்தியும் அந்த ஸ்தானத்தில் இருப்பதால் மட்டும், தெருக்களைப் பெருக்குகின்ற

இழிகுலத் தோட்டியினும் எவ்விதத்திலும் சிறந்தவனாக மாட்டான்! பதவி என்பது மேலே இடப்பட்ட முத்திரையே; அந்த முத்திரையை வகிக்கும் மனிதனை யல்லவா நாணயத்திற்கு உண்மை மதிப்பைத் தருகின்ற தங்கந்தானா என்று மதிப்பிடவேண்டும். மற்றவரான 'எட்வின் ஆர்னால்'டின் காவியமோ, இந்த அரிய பெரிய் உண்மையையே அடிப்படையாகக் கொண்டு இந்த உலகத்திலே உண்மையின்பத்தைப் பெறுவதற்கான 'ஆத்மத் தியாகம்' என்னும் தெய்விக மார்க்கத்தை நன்கு விளக்குவதாயிற்று: ''ஆனந்தத்தை நமக்கு அளிப்பது பணம் அன்று, உயர்ந்த பதவி அன்று, அதிகாரம் அன்று, மற்று ஒன்றும் அன்று; பூத தயையும் மனமாரக் கொடுக்கும் தியாக குணமுமே; மேற்கூறியவை யாவும் இடையூறுகளே; அவற்றை யெல்லாம் பிறர் பொருட்டுத் தியாகஞ் செய்யும்போது மட்டுமே, அவற்றால் நமக்கு இன்பம் விளைகின்றது.'' இந்த உண்மைகளை யெல்லாம் அந்த உயர்காவியம், படிக்குந்தோறும் என் மனத்திலே ஆழப் பதித்தது. வர வர, என் வாழ்க்கையில் எனக்கிருந்த மன வமைதி குறைந்து போய், 'பிறர்க்கு உதவ வேண்டும்' என்ற பேரவாவினால் அடிக்கடி மனநொந்து யோசனையில் ஆழ்ந்து பித்துப் பிடித்தவன்போல் இருப்பேன். லோகா யதக் கொள்கைகள் எல்லாம் இவ்வாறு குலைக்கப்பட்டு மழுங்கிப்போய் எனக்கு அருவருப்பைத் தரத் தொடங்கின; லோகாயத மதம் நிர்தோஷமானது என்று நான் கொண்டிருந்த நம்பிக்கை குறையவே, பரம சந்தேகங்கள் தோன்றி என் மனத்திற்குப் பயத்தை உண்டு பண்ணின; இப்படியாக லோகாயத மதத்தில் எனக்கு இருந்த திட நம்பிக்கை அதி சீக்கிரத்தில் அழிந்து விட்டது.

இத் தறுவாயிலே 'ராபெர்ட் எல்ஸ்மியர்' என்னும் நூல் ஒன்றினை, பழம் புஸ்தகக் கடையிலே கண்டு, இவ்வளவு இனிய பெயரையுடைய நூல் எப்படி இருக்கிறது பார்ப்போம் என்று விலைக்கு வாங்கினேன். முதலிலுள்ள சில பக்கங்கள் ருசிக்கவில்லை என்றாலும், போகப் போக அந்நூலைப் படிப்பதிலே ஆழ்ந்தவனாய், ஒரே மூச்சாய் அன்றிரவே அதைப் படித்து முடித்ததை நான்

மறக்கமாட்டேன்; பிறகும், எத்தனையோ தடவை அந்நூலைத் திரும்பத் திரும்ப வாசித்து, அதிற் கண்ட சிறந்த அபிப்பிராயங்களைப் பற்றிச் சிந்திக்கலானேன். நான் வாழ்ந்த வாழ்க்கையிலே எனக்கு அதிக அதிருப்தி பிறந்தது; 'பாழாய்ப்போன சந்தேகங்களிலும் ஓயாத சம்சயங்களி லும் விலை மதிக்கக்கூடாத ஆண்டுகள் பலவற்றையும் வீண் போக்கினேனே' என்று மனநொந்து வருந்தினேன். அந்நூலுக்குக் கதாநாயகனாய் அமைந்த வீரனும் உலக மதங்களில் ஒன்றிலும் சேராத நிரீசுவரவாதி தான்; என்றாலும், அவனுடைய இருதயமானது பூத தயை யாலும் உன்னதக் கொள்கைகளாலும் நிரம்பி யிருந்தது. அவன் மனமும் ஊக்கத்திலோ தைரியத்திலோ வலிமை யிலோ சற்றும் குறைவற்றதாய் இருந்தது. இவற்றிற்கெல் லாம் மேலாக, அவனுக்கு நற்செய்கைகள் நல்லறிவு இவற்றின் சக்தியிலும் பயனிலும் மிகுந்த நம்பிக்கை இருந்தது. நானோ, உலக வாழக்கையை முற்றிலும் வேறுவிதமாகக் கொண்டவன்; மதக்கோட்பாடு கள் நம்பிக்கைகள் இவற்றையெல்லாம் சந்தேகிப்பதோடு நில்லாமல், நீதி நியாயங்களுக்கு அடிப்படியாய் அமைந்த தார்மிக உணர்ச்சியிலேயே நம்பிக்கையில்லாதவன்; என் சந்தேகங்களுக்கு இரையாகாதவை ஒன்றுமே இல்லை. ஆகவே, இந் நூலிலே வருணக்கப்பட்ட கதாநாயகனுடைய வாழ்க்கை என் மனத்தைக் கவர்ந்தது. அவனைப் போலச் சிறந்த வாழ்க்கை வாழவேண்டும் என்று என் மனம் திருந்தியது. இது மட்டும் அன்று; வேறு ஒரு பெரு நன்மையும் உண்டாயிற்று; அது என்னவென்றால், நான் பூர்ண மனத்தோடு கொண்ட தீர்மானங்களுக்கும் நம்பிக்கை களுக்கும் நேர்விரோதமாய், நான் தினந்தோறும் நடத்தி வரும் வாழ்க்கை என்னால் வாழ முடியாததாயிற்று. இதனை உணர்ந்தும், இனி என் வக்கீலாபீசை அடைத்து விட்டு, என் கேஸ்களை வேறொரு வக்கீலிடம் ஒப்படைத்து, என் குடும்பத்தாரையும் ஊருக்கு அனுப்பி விட்டு, இவ் விஷயத்தைப்பற்றிச் சாவதானமாய்ச் சிந்தித்துத் தீர்மானிப் பதற்காகத் தன்னந்தனி யாத்திரையாகப் புறப்பட்டேன்.

பதினெட்டாவது அதிகாரம்

# அமைதியை நாடிச்சென்ற யாத்திரையைக் குறிப்பது

எனக்கு இயற்கையாய் இருந்த அவநம்பிக்கைக் குணம், யாதொரு பொல்லாப்பிற்கும் இடமின்றி அடங்கியிருந்த போதிலும், சிற்சில வேளைகளில் என் செயல்களிலே வேகத்தோடு முற்பட்டுவிடும்; நண்பர்களின் கூட்டத்திலே, நானும் எப்பொழுதாவது பிரசித்தி பெற்ற கோயிலுக்குச் சென்றாலும், விளையாட்டாகவே திருநாள் உத்ஸவங்களுக்குச் சென்றாலும், அங்கே திவ்விய விக்கிரகத்தை அறிகுறியாகக் கொண்டதான, நாமரூபங் கடந்த பொருளைப் போற்றினவர்களாய் என்னைச் சுற்றிலும் எல்லோரும் தியானத்தில் ஆழ்ந்திருக்க, திடீரென என் மனத்திலே 'இவையெல்லாம் என்ன மூடத்தனம்!' என்று தோன்றவே, உள்ளே புகுந்து, அசங்கியமாயும் பயங்கரமாயும் தோன்றும் விக்கிரகத்தைப் பிடுங்கி யெறிந்து சுக்கலாய் உடைத்து, அவர்கள் செய்யும் பூஜை நிஷ் பிரயோசனமானது என்று அவர்களுக்கே விளக்கிவிட வேண்டும் என்று எனக்கு அடக்க முடியாததோர் ஆவேசம் உண்டாகும். அப்படிப் பைத்தியம் பிடிக்கும்போது, பரபரப்பாய்க் கோயிலை விட்டு ஓடிப்போய் எவ்வளவு தூரத்தில் இருந்தால் என்னால் சும்மா இருக்க முடியுமோ அவ்வளவு தூரத்திற்கு அப்பால் இருப்பேன். ஆனால் லோகாயத மதம் எனக்குப் போதாததாகி, ஸ்பென்ஸர்' யுக்தி வாதத்தால் நிரூபித்த 'அஞ்ஞானவாதமும்' மனத்திற்குத் திருப்தி தராமற் போகவே, எனக்கு எதையும் உடைத்தெறிவதில் செலுத்தும் புத்தி சாதுர்யம் குறைந்து பக்தி மேலிடவில்லையே என்று வருந்தத் தொடங்கினேன். தாயுமானவர் என்னும் முனிவரரின் வார்த்தைகளை அடிக்கடி நினைந்து கொள்வேன்:

**கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்**
**கற்றும்அறி வில்லாதஎன்**
**கர்மத்தை யென்சொல்லுகேன் மதியையென் சொல்லுகேன்**
**கைவல்ய ஞானநீதி**

நல்லோ ருரைக்கிலோ கர்மமுக் கியமென்று
நாட்டுவேன் கர்மமொருவன்
நாட்டினா லோபழைய ஞானமுக் கியமென்று
நவிலுவேன் வடமொழியிலே
வல்லா னொருத்தன்வர வும்திரா விடத்திலே
வந்தவா விவகரிப்பேன்
வல்லதமி ழறிஞர்வரின் அங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிதுபுகல்வேன்
வெல்லாம லெவரையும் மருட்டிவிட வகைவந்த
வித்தையென் முத்திதருமோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

ஓர் அதிசயமான யாத்திரையை இவ்விதம் நான் தொடங்குமுன், எனக்குப் பயன்படக் கூடிய புத்திமதி சொல்லக் கூடியவர்கள் என்று நான் மதித்த சில கனவான் களுக்கு, என்மனம் உழலுவதையும் எனக்கு ஏற்பட்ட அதிருப்தியையும் பற்றி எழுதியிருந்தேன். யாத்திரையிலே நான் முதல் முதலாகச் சென்று தங்கிய பட்டணத்திலேதான் அவர்கள் எனக்கு எழுதிய பதில்கள் கிடைத்தன. ஒருவர் ''கிறிஸ்து வேதங்களையும் 'தாமஸ் அகெம்பிஸ்'ஸின் பேர்பெற்ற நூலையும் வாசி'' என்று எழுதியிருந்தார்; வேறு இருவர் 'பகவத் கீதை'யை நன்றாகப் படித்தால்மட்டுமே என் மனத்திற்குச் சாந்தி உண்டாகும்'' என்றார்கள். என் சிற்றப்பனோ, தேகப் பயிற்சியிலும் நித்திரையிலும் அதிகப்பொழுது செலவிட்டும், அவசியமென்றால் வைத் திய நிபுணரின் சிகிற்சைப்படி நடந்து கொண்டும், மீண்டும் 'இங்கர்ஸால்' எழுதிய நூல்களைக் கவனித்து வாசிப்பதே நலம்'' என்று உபதேசித்தான். இவ்வாறு, அனைவரும் தத்தமது மதப்படியே நான் நடந்துகொள்ள வேண்டும் என்று விடை கூறியதினின்றும் ஒன்று தெளிவா யிற்று: 'மதம் தான் என் நோய்க்கு மருந்து' என்பது. அப்பொழுது, உலகத்து மதங்களில் எதைப் பற்றியாயினும் எனக்குத் தெரிந்தது எம்மட்டு என்பது புலப்பட்டது; உடனே நேராகச் சென்னப்பட்டணத்திற்குச் சென்று அங்கே ஒதுக்குப்புறமான இடத்திலே சௌகரியங்களைத் திட்டம் போட்டு அமைத்துக்கொண்டு, நான்கு பெரிய மதங்களைப்

பற்றியுமுள்ள நூல்களிற் சிறந்தவைகளை வாங்கி ஆழ்ந்து வாசிக்கத் தொடங்கினேன்; கவிகளைப் போலவே, உண்மை மதாபிமானியும் பக்தனும் தாமாகவே தோன்ற வேண்டுமே யல்லாது, எவ்விதச் செயற்கைச் சௌகரியங் களாலும் எவனையும் பக்தனாகவோ மதாபி மானியாகவோ ஆக்க இயலாது என்று நான் கண்டு கொண்டேன். நான் வாசித்த நூல்கள் எல்லாம் கூடி, என்னை அணுவளவேனும் பக்தனாகவோ, 'கடவுள் - நம்பிக்கை' யுள்ளவனாகவோ ஆக்க முடியவில்லை. என்றாலும் படித்து முடிந்ததும், என் மனம் அனேகமாய்ச் சாந்திபெற்றுவிட்டது. சகல மதங்களிலும் ஒரே நீதி மார்க்கமே வற்புறுத்தப் பட்டிருந்தது; அவை அனைத்தும், 'திரைக்குப் பின் இருக்கும் அறியவொண்ணாத அதிசயப் பொருளை' மறுக்காது, ஒருமுகமாய் ஒப்புக் கொண்டன. ஆனால் அந்த 'அதிசயத்தை 'தேவர்களைப் போன்ற மனிதர்கள்', 'தேவதூதர்'கள், அவதார புருஷர்கள் இவர் களின் மூலமாய் நமக்கு வெளிப்படுத்துகையிலே, வித்தியா சங்கள் தோன்றுகின்றன. கடைசியிலே தோன்றிய மதமான தால், முற்பட்ட மதங்களைப் பயன்படுத்திக்கொண்டு அவற்றைக் காட்டிலும் சிறந்து விளங்கவேண்டிய மதமாயிருக்கும் என்று எதிர்பார்க்கக்கூடிய முகம்மதிய மதம் என் மனத்தைக் கவரவில்லை; பௌத்த மதமே அதிகம் சிறந்ததாயும் ஜீவ தயை மிக்குடையதாகவும் எனக்குத் தோன்றிற்று. அதைப் போலவே, தயை, தாக்ஷிண்யம் முதலிய குணங்களைப் போற்றி வளர்ப்பதாய், 'கிறுஸ்து மலைமேல் அருளிச் செய்த உபதேசத்தைக் கொண்டதான கிறுஸ்தவ மதத்தை அடுத்த படியில் வைப்பேன்; ஆயினும் இந்த மதத்தைச் சார்ந்தவர்கள் விசால நோக்கத்தோடு கிறுஸ்துவின் உபதேச மொழிகளைப் பின்பற்றாமலும், புத்தியைக் கொண்டு பரிசீலனை செய்யாமலே எல்லாவற் றையும் வேதவாக் காகக் கொண்டும் நடப்பதால், இம் மதமும் முன்னேறாமல் இருக்கின்றது. மேலும், இம் மதத்திலும், பௌத்த மதத்திற் போலவே, உலக வாழ்க்கை யிலே வெற்றி பெற்று இன்புற விரும்புவோர்க்கும் முன்னேற்றமடைய ஆத்திரப்படு வோர்க்கும் பயன்படாத விதமாய் நீதி வாக்கியங்கள் அமைந்துள்ளன. அதனாலே தான், 'பகைவரிடமும் அன்பு

வேண்டும்' என்றும், 'வலது கன்னத்தில் உன்னை ஒருவன் அடித்தால் அவன் மீது கோபங் கொள்ளாமல் இடது கன்னத்தையும் காட்டுவாய்' என்றும் கிறுஸ்து உபதேசித்த போதிலும், உலகிலே மிகச் சிறந்த கிறுஸ்தவ நாடு என்னும் நாட்டின் 'தேசீய கீத'த்திலே “எழுந்து சென்று அவர்களை அழித்தருள்வாயாக" என்று கடவுளைப் பிரார்த்திப்பதும், மக்களைப் பொசுக்கி நாசத் தையும் மரணத்தையும் தருகின்ற கொடுங் கருவிகளைச் சேகரித்து அவற்றைப் பழுதுறாதபடி தீட்டிவைத்துக் கொள்வதிலே கிறுஸ்துவ நாடுகள் அனைத்தும் ஒன்றோ டொன்று போட்டி போடுவதுமாய்க் காணப்படுகின்றன. சட்டமும் ஜனஸம் மதமும் மக்களுக்கு வழிகாட்டாத சந்தர்ப்பங்களிலே அவர்களுக்கு வழிகாட்டுவதையும், சட்டமும் ஜனஸம் மதமும் ஒருவாறு வழிகாட்டும்போதும் அவற்றிற்கு அனுசரணையாய் உதவுவதையுமே, 'தேசிய மதத்'தினின் றும் நாம் எதிர் பார்க்கவேண்டும் என்றும், 'சுத்த' மதத்தைப் பற்றிய விஷயங்களில் ஒவ்வொருவனை யும் சுயேட்சை யாய் அவனவனுடைய மனப்போக்கின்படி யும் மனோபீஷ்டத்தின்படியும் நடந்துகொள்ள விட்டுவிட வேண்டும் என்றும் எனக்குத் தோன்றுகின்றது. ஹிந்து மதம் எந்த நிலைமைக்கு வந்து விட்டது என்று அறிந்துகொள்ள என்னைச் சுற்றிப் பார்த்தாலே போதும் என்றாலும், மதத்தைப் பற்றி நான் படிக்கப் படிக்க, இந்த மதம் எவ்வளவு வித்தியாசங்களுக்கு இடங்கொடுத்து அவற்றை யெல்லாம் தன்னுள்ளே எவ்வாறு அடக்கிக் கொண்டிருக் கின்றது என்பதைக் கண்டு அதிசயிக்கிறேன். காட்டுப் பிராண்டிமுதல் பரமயோகி வரையிலுமுள்ள சகல விதமான மானுடப் பிறவிகளுக்கும் ஏற்ற ஏற்பாடுகளை அமைத்துக் கொண்டிருப்பதாய்க் காண்கின்றது; எத்தகையோருக்கும் ஏற்றவாறு மாற்றி யமைத்துக் கொள்வதற்கு இடந் தரும் நூலேணி போன்றது; மிகத் தாழ்ந்த உபாசனைகளிலே தொடங்கி, படிப்படியாய் உயர்ந்து, பர்ம சிரேஷ்டமாய், நுண்ணறிவிற்கு மட்டுமே எட்டுவ தான தத்துவ வுணர்ச்சி வரையிற் செல்கின்றது. உண்மையிலே, ஒரு காலத்திலே, ஒரு மனிதனாலோ தேவனாலோ உபதேசஞ் செய்து விளக்கப் பெற்ற மதம் அன்று இது; எத்தனையோ

நூற்றாண்டுகளாக, தேய்ந்தும் வளர்ந்தும் விருத்தி யடைந்து வருகின்ற புராதன நாகரிகத்தின் சின்னங்களோடு பொருந்தி விளங்குவது. 'அவிழ்க்க முடியாத பிதிர்' போன்ற பரம ரகசியப் பொருளை அறியவோ காணவோ நான் ஆசைப் படவில்லை. உலக வாழ்க்கையில் எனக்கு வழி காட்டக் கூடிய ஒரு கொள்கை, வாழ்வாகிய கப்பலைச் சரிவரச் செலுத்துதற் குரியதாய் புத்திக்கு அருவருப்பைத் தராத தொரு சுக்கான், இதுவே நான் வேண்டுவது. மனத்தைக் கலக்கித் திகைப்புறச் செய்யும் நூல்களிலே முதன்மை பெற்றதான 'பகவத் கீதை'யிலே நான் விரும்பிய உதவி எனக்குக் கிடைப்பதாயிற்று. ''தீராது என்றால் மட்டுமே, நான் **'தத்துவசாஸ்திரி'** என்னும் பிராணியாவதற்கு இணங்குவேன்; வாழ்ந்தாற் போதுமே, 'வாழ்வது ஏன்' என்று பொய்க் காரணங்களைச் சிருஷ்டித்துக் கூற வேண்டிய தில்லையே'' என்று 'ஜார்ஜ் எலியட்' கூறியுள் ளான். என் அபிப்பிராயமும் இதுவே. ''கடமையைக் கைப்பிடி; பயனைக் கருதாமல் உதாசீனனாய் இரு'' என்று கீதையிலே ஓரிடத்திற் கூறப்பட்டுள்ளது. 'இதுதான் மனச் சாந்தியை நிச்சயமாய் அடையும் வழி' என்பதை உணர்ந் தேன். 'தியோசாபிகல்' சபையார் வெளியிட்ட நூல்களை யும் வாசிக்கவே, அவற்றினின்றுமே, 'மறு பிறப்பு' 'கர்மம்' என்னும் கொள்கைகளின் உண்மையிலே, அறிவிற்கு எட்டாத விஷயங்களிலே, ஒருவனுக்கு எவ்வளவு நம்பிக்கை ஏற்படக்கூடுமோ, அவ்வளவு நம்பிக்கையும் ஏற்பட்டது. இப்படியாக, பக்தி மேலிட்டதாலோ, புத்திக் கூர்மை மழுங்கியதாலோ, எவ்வாறோ, என் மனம் ஓயாது சலிப் பதைவிட்டு, சாந்த நிலையை அடைந்தது. அடையவே, யாத்திரையாகப் புறப்பட்ட பொழுதினும் நான் பழைய வேலைக்குத் திரும்ப வந்தபொழுது, அதிகப் புத்திசாலியாய் விட்டேன் என்றே நான் நினைக்கிறேன்.*

★ எனது நண்பன் மதவிஷமாய் மேன்மேலும் விசாரணை செய்ததையும் மதநூல்களைப் படித்ததையும் அவற்றின்படி பயின்றதையும் விவரித்து எழுதாமல் விட்டுவிட்டதால், 'அவன் பிற்கால வாழ்க்கையிலே ஒரு பெரிய அனுபவ வேதாந்தியாகவும் யோகியாகவும் விளங்கினான்' என்பதை நான் இங்கே குறிப்பிட வேண்டியதாயிற்று. இளவயதிலே அவன் இறந்ததற்குக் காரணம் அவன் செய்த யோகாப்பியாசமே என்று ஒரு சிலர் அபிப்பிராயப் பட்டதையும் குறிப்பிடுகிறேன். - 'பம்பா'

'எப்படி நடந்துகொள்ளவேண்டும்' என்று தெளிவாக எடுத்துச் சொல்வதைக் காட்டிலும் அவ்வாறு தினசரி வாழ்க்கையில் நடந்து காட்டுவது கடினம் என்பதில் வியப்பிற்கு இடமில்லையே; அடியெடுத்து வைக்கும் போதெல்லாம் சந்தேகமும் கவலையும் என்னைத் தடுத்தன; பலகாலமாய் வேரூன்றிய பழக்க வழக்கங்களின் ஆதிக்கமும் ஆசைகளின் வேகமும் என்னைப் பின்னிற்கு இழுத்தன; ஆயினும், ஒவ்வொரு இடையூற்றையும் வென்றபோதும், ஒவ்வொரு ஆசையின் வேகத்தையும் அடக்கியபோதும், எனக்குள்ள மனோதைரியம் பலப் பட்டுத் தன்னம்பிக்கையும் வளரவே, மனச்சாக்ஷியின் தூண்டுதல்களும் தெளிவு பெற்றவை யாயும் அதிகம் பலங்கொண்டவையாயும் எனக்கு உதவின; ஐயந்திரி பறக் கற்ற படிப்பாளியாகாவிட்டாலும் என் மனைவியைப் போல் நற்குணம் வாய்ந்தவர்களாய் எளிய வாழ்க்கை வாழ்ந்தவர்களின் சரிதை எனக்குச் சிறந்த உதாரணங்களா யின. 'யாதொரு குற்றமும் குறையும் இல்லாதவர்களாய் இருக்கின்றோம்' என்று நாம் எண்ணிக்கொண்டிருக்கும் வரையில், நாம் முன்னேற மாட்டோம்; நம்மிடமுள்ள குற்றங்குறைகளை அறிந்து அவைகளை நீக்கிவிட வேண்டும் என்று ஆசைப்பட்டால், நாம் எதிர்பாராத வித மெல்லாம் உதவி பெறுவோம்; நடக்கவேண்டிய வழியும் பிரயாசையின்றிச் சுகமாய்ச் செல்லக்கூடியதாகின்றது.

### பத்தொன்பதாவது அதிகாரம்

## என் சிற்றப்பனைப் பற்றிப் பேசுவது

**வி**சேஷ சம்பவங்கள் ஒன்றும் நேராத என் வாழ்க்கையைப் பற்றி இனி எழுதவேண்டியது ஒன்றும் இல்லை.

என் சிற்றப்பனைப் பற்றி இங்கு அதிகமாய்ச் சொல்லப் பட்டிருப்பதால், பரிதாபப்படத்தக்கதாய் அவனுக்கு நேர்ந்த கதியையும் சொல்லி முடிக்கிறேன்.

'வேலைப் பழக்கம்' முடிந்ததும், சர்க்கார் 'இன்ஜினீயர்' இலாகாவில் அவனுக்கு வேலை கிடைத்தது. அந்த 'இலாகா'வே பலவாறு பிரிவுபட்ட சர்க்கார் வேலை களில் வேலை பார்ப்பவர்களின் பேராசைக்கு அதிக இடங் கொடுப்பதாய் மிகவும் சீர்கெட்ட இலாகா; திடமான கொள்கைகள் ஒன்றும் என் சிற்றப்பனுக்கு இல்லாததாலும், வீண் செலவுகொள்ளும் கெட்ட பழக்கங்கள் அவனுக்கு இருந்ததாலும், சீர்கெட்ட அந்த இலாகாவிலும் மிகவும் சீர்கெட்ட உத்தியோகஸ்தன் என்று பேர்வாங்கிவிட்டான். இரண்டு குதிரைக்குத் தீனிபோடுவதற்குக் கூடக் காணாத சொற்பச் சம்பளத்தில் ராஜகுமாரனைப்போற் செலவு செய்து வாழ்ந்தான்; தன் ஊரைவிட்டு வெகு தூரத்திற்கு அப்பால் யாரும் தன்னை அறியாத ஊரிலே இருந்த்தால், 'பொது மக்கள் என்ன நினைப்பார்கள்?' என்னுங் கவலை சிறிதுமின்றி, பிராம்மண ஒழுக்கத்தினின்றும் தவறி நடந்தான். சுருட்டுக் குடிப்பது, மதுபானஞ் செய்வது, பிராம்மணரல்லாதாரோடும், தன்னோடு பழகுவதிலே இச்சை கொண்ட 'யூரேஷிய'ரோடும் பகிரங்கமாய்ச் சாப்பிடுவது, வேத வசனங்களை உச்சரிப்பதைக் காட்டி லும் 'மீன் கடைப் பேச்'சிலே அதிகம் ஈடுபடுவது, ஐரோப்பிய ஆடையை எப்பொழுதும் தரிப்பது, அவர்களைப் போலவே, சில வேளை தொப்பியணிவது, தன்னை 'நாஸ்திகன்' என்று மெச்சிக்கொள்வது, தன் நாட்டினரைக் 'கறுப்பு மனிதர்' என்று வைவது - இவை யெல்லாம் அவனுக்கு ஸஹஜமாய் விட்டன. தான் ரயில் வண்டியிலே பிரயாணஞ் செய்த போது, வேறொரு பிரயாணி தன்னை 'யூரேஷியன்' என்று நினைத்ததிலே அவனுக்கு அள வல்லாத சந்தோஷம்; அவன் மனைவி சிறுமி, கட்டழகி; அவள் மீது அவனுக்கு, தன் நடத்தை கெட்டுப்போன பின்பும், அதிக ஆசை. 'கிறுஸ்தவச்சியைப் போல, சட்டையும் தாவணியும் போட்டுக் கொண்டு, தன்னுடன் வெளியே சென்று ஆண் மக்களோடு கலகலப்பாய் இருக்கவேண்டும்' என்று அவளைக் கட்டாயப்படுத் தினான். வெட்கத்தோடு ஒதுங்கி நடந்து வந்த அச் சிறுமி, அவனுடைய ஆட்சியிலே, சிறிது காலத்திற்குள் யாரிடமும் கூச்சமின்றிப் பழகுபவளாய், எவ்வளவு தைரியங்

கொண்டவளாய் விட்டாள் என்று ஆச்சரியப்பட்டேன். அவர்கள் எங்களுடைய பந்துக்களில் ஒருவரையும் பார்க்க வருவதில்லை. இவர்களும் அவர்களைப் போய்ப் பார்க்க விரும்புவதில்லை. இவ்வித நடத்தைக்கு ஒரு முடிவும் அதி சீக்கிரத்திலே வந்தது. இவ்விதப் புது அபிப்பிராயங்களைக் கொண்டிருந்தாலும், என் சிற்றப்பனுக்கு உள்ளூர இருந்த 'இந்திய' சுபாவம் மாறவில்லை. தான் எவ்வளவிற்கு எவ்வளவு நடத்தையிற் கெட்டுப் போனானோ, அவ்வள விற்கு அவ்வளவு தன் மனைவியின் நடத்தையிலே சந்தேகங் கொள்ளத் தொடங்கினான். ஓர் அழகிய நாயுடுப் பையனை வேலைக்காரனாக அமர்த்தியிருந்தான்; அந்தப் பையனை 'காஷியோ' என்றே சொல்லலாம்; அவ்வளவு கொடியவன், கோட்சொல்பவன், துர்க்குணங்கள் வாய்ந்தவன். 'நாயுடுப் பையனோடு நான் உல்லாஸமாய்ப் இருப்பதாகக் கனவு கண்டேன்' என்று என் சிற்றம்மை வேடிக்கையாக என் சிற்றப்பனிடம் சொன்னாள். பாவம், அவள் ஒன்றும் அறியாத பேதை; ஆனாலும் அவள்மீது என் சிற்றப்பனுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. உடனே அவனுடைய தீக்ஷண புத்திக்கு எல்லாம் விபரீதமாகத் தோன்றிற்று; என்ன செய்வது என்றும் உடனே தீர்மானித்து விட்டான்; தான் ஒரு 'ஸீஸர்'; தன் மனையாளிடம் சந்தேகங்கொள்ள இடம் இருக்கலாமா? தன்னை வஞ்சிப்பவளுக்கு உடனே சிக்ஷை விதிக்க வேண்டாமா? சென்னப் பட்டணத்திற்குப் போய் நகை செய்வதற்கு வைரங்களை பொறுக்கி வாங்கி வரலாம் என்று அவளை உற்சாகப்படுத்தித் தன்னுடன் அழைத்துச் சென்றான். இருவரும் சென்னைக்குப் போய் விலையுயர்ந்த சில நகைகளையும் வாங்கினார்கள்; திரும்ப வரும்போது, பிரசித்தி பெற்ற கோயிலையுடைய கிராமம் ஒன்றிலே ஸ்வாமி தரிசனம் செய்யலாம் என்று தங்கினார்கள். அவ்வூரிலே சீத்பேதி பரவி யிருந்தது. 'ரங்கத்'திற்கும், பாவம், திடீரென்று சீதபேதி கண்டது. அவள் தகப்பனா ருக்குத் தந்தியடித்து இரண்டு மணி நேரத்திற்குள், அவள் இறந்து போன செய்தியும் தந்தியடிக்கப்பட்டது; தங்களூருக்கு ஸ்வாமி தரிசனத்திற்காக ஒரு கனவான் தன் மனைவியுடன் வந்ததையும், அவளுக்குத் திடீரென்று

சீதபேதி கண்டதையும், அவளைப் பறிகொடுத்த கனவான் ஆற்ற வொண்ணாத் துயரத்தில் ஆழ்ந்து அவளுடைய தகனக்கிரியை முடிந்ததும் திரும்பிப் போனதையும் அவ்வூரார் ஓரதிசயமாகச் சொல்கின்றார்கள். உண்மையில் பாஷாணம் மிகக் கொடிய விஷம் என்பதிலே யாதொரு சந்தேகமும் இல்லை.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113.

## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை |
|---|---|
| பரணர் | 85.00 |
| பாஸ மகாகவியின் இரட்டை நாடகங்கள் | 36.00 |
| இராசேந்திரன் | 55.00 |
| முல்லை | 25.00 |
| திராவிட மொழியின் மூவிடப்பெயர் | 40.00 |
| தமிழ்நாட்டு வரலாற்றின் இலக்கிய ஆதாரங்கள் கி.மு.200 - கி.பி.1300 | 100.00 |
| வெள்ளுடை வேந்தர் தியாகராயரின் வாழ்வும் பணியும் | 65.00 |
| தமிழ் நாடகமேடை முன்னோடிகள் | 40.00 |
| தமிழ் வள்ளல் பாண்டித்துரையார் | 25.00 |
| தேவநேயப்பாவாணரின் மொழியியல் - வரலாற்றுக் கொள்கை | 35.00 |
| தமிழ்த்தூது | 20.00 |
| கபிலர் | 70.00 |
| கன்னடத்தில் காரைக்காலம்மையார் வரலாறு | 20.00 |
| நாட்டிய நன்னூல் | 25.00 |
| சங்க இலக்கியத்தில் கலையும் கலைக்கோட்பாடும் | 65.00 |
| கதிர்வேற்பிள்ளை-தமிழ்ச் சொல்லகராதி, மூன்று பாகங்கள் | 600.00 |
| எண்பத்து மூன்றில் தமிழ், பகுதி-3 | 30.00 |
| காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் ஓர் ஆய்வு | 60.00 |
| திருக்குற்றாலநாத சுவாமி கோவில் வரலாறும் பண்பாடும் | 60.00 |
| உத்தர ராம சரிதம் | 30.00 |
| பம்மல் சம்பந்த முதலியாரின் உரைநடை நூல்கள் தொகுதி 1 | 50.00 |
| பம்மல் சம்பந்த முதலியாரின் உரைநடை நூல்கள் தொகுதி 2 | 40.00 |
| சதாசிவப் பண்டாரத்தார் ஆய்வுக் கட்டுரைகள் | 40.00 |
| சங்கத் தமிழர் வாழ்வியல் | 75.00 |
| வேதகிரியார் சூடாமணி நிகண்டு | 65.00 |
| தமிழக மேடை நாடகப் பெண்கலைஞர்கள் குறிப்பேடு | 25.00 |
| **A Grammar of Contemporary Literary Tamil** | 80.00 |
| **Cilappatikaram** | 100.00 |
| காதம்பரி மூலமும் வசனமும் | 125.00 |
| **Tamil Culture and Civilization** | 60.00 |
| **Tolkappiyam and Astadhyayi** | 110.00 |
| தமிழக மகளிர் தொடக்க காலமுதல் ஆறாம் நூற்றாண்டு வரை | 50.00 |
| தொல்காப்பியம் - பொருள் - செய்யுளியல் பகுதி 1 | 50.00 |
| தடிவீரசுவாமிகதை வன்னியராயன்கதை | 55.00 |
| சடத்தலம் | 40.00 |
| காத்தவராய நாடகம் | 30.00 |
| மதங்க சூளாமணி | 40.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 32.00 |
| தமிழில் நவீன நாடகம் | 70.00 |
| இலக்கியத்தில் சோதிடம் | 65.00 |

---

தில்லைக் கோவிந்தன் விலை ரூ. 25/-